கழக வெளியீடு: ௭0௩

# சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

## பகுதி - ௬

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.
எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

தேனினும் இனிய செந்தமிழ்ப் பாக்களால் மொழியையும் நாட்டையும் வளம்படுத்தியவர், பழங்காலச் சங்கப்புலமை நல்லோராவர். அவர்கள் பிறந்தும் இருந்தும் வந்த ஊர்கள் பல்லனவாகும். அவர்களுட் சிலர் தம் பெயர்களோடு சார ஊர்ப்பெயர்களைச் சூட்டியும், சூட்டுவித்தும் திகழ்ந்தனர். இவர்களை '**மாநகர்ப் புலவர்கள்**' என்று தொகுத்து வெளியிட்டுள்ளோம். இப் புலவர் பெருமக்கள், பொன்றாப் புகழ்பெற்றோராவர்.

இவர்தம் வரலாறுகள், சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினியவாய்ச் சிறந்தனவாகும். இவ்வருமை பெருமை மிக்க வரலாற்றுண்மைகளை அவர்தம் பாவின் அகச் சான்றுகொண்டே ஆய்ந்தெழுதிய நூல்கள் இவையாகும். இம் முப்பகுப்பினர் வரலாறடங்கிய நூல்களை ஒரே தொகுப்பாக ஆக்கி உதவினால், கற்பார்க்கும், கற்க விழைவார்க்கும், துறைபோவார்க்கும் நற்பயனாம் எனக் கருதி ஒரே கட்டடமாகக்கட்டி அழகிய முறையுடன் அமைத்து வெளியிட்டுள்ளோம்.

அறிஞருலகம் இதனையும் இதனோடு தொடர்ந்து வெளிவரும் ஏனைய இதுபோன்ற தொகுப்பு நூல்களையும் வாங்கிக்கற்று நற்பேறெய்தி இன்புறுமென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

*

# உள்ளுறை



*

கழக வெளியீடு: க௲௭

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை - கo

# மாநகர்ப் புலவர்கள் - க

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது

:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

சங்ககாலத்துச் சான்றோரான தண்டமிழ்ப் புலவர்கள், பிறந்தும் இருந்தும் வந்த ஊர்கள் பல்லனவாகும். அவர்கள் தம் பெயர்களோடு சார, ஊர்ப்பெயர்களைச் சூடியும் சூட்டுவித்தும் திகழ்ந்தோராவர்.

அவர்களுள் இதில் இடம் பெற்றோர் 'அகம்பல்-மால்-ஆதனார்' முதலாக 'ஒக்கூர் மாசாத்தனார்' ஈறாக, முப்பதின்மராவர். இவர் தம் வரலாற்றையும் **புலவர், திரு. கா. கோவிந்தன்** அவர்கள், தம் கூர்த்த மதிநலத்தால் ஆக்கி உதவினர்.

இதற்கு '**மாநகர்ப் புலவர்கள் - க**' என்னும் பெயரமைத்து, முதலாவதாக இதனை வெளியிட்டுச் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் பத்தாவதாகத் தொடர்பு படுத்தியுள்ளோம்.

இதனையடுத்து வெளியாகும் 'மாநகர்ப் புலவர்கள் உ-ங' என்னும் வரலாறுகளையும் அதற்கு அடுத்தடுத்து வரும் ஏனைய சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை நூல்களையும் அறிவுதிருந்தறிஞருலகம், வாங்கிக் கற்றுத் தமிழ்ப் பெருஞ் செல்வப் பேறெய்துமென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# மாநகர்ப் புலவர்கள் - க.

## தோற்றுவாய்

"தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்தல் வேண்டும்," என இன்று விரும்புகின்றோம் நாம். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்டது நம் பண்டைத் தமிழகத்தில் தமிழ்நாட்டுப் பேரூர்த் தெருக்களிலேயே யல்லாமல் சிற்றூர்களிலும், சேரிகளிலும் கேட்டது அத் தமிழ் முழக்கம். பண்டைத் தமிழகத்தில் பிறந்தார் ஒவ்வொருவரும் தம் தாய்மொழியாம் தமிழ்மொழியினை அறிந்திருந்தனர். "உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று," என்ற அறிவினை, அக்கால மக்களும், அரசரும் ஒருங்கே பெற்றிருந்தனர். அதனால், தன் நாட்டு மக்கள் அனைவரும் கற்றாராய்த் திகழ்வதிற் காவலனும் கருத்துடையனாயினன்; கற்றல் தம் கடன்! அதற்கு அரசனை எதிர்நோக்கல் அறியாமை என அறிந்து கற்றனர் மக்களும். கல்லாதவனைப் பொல்லாதவன் எனப் பழித்தனர்; இதனால், அக் கால மக்கள் எல்லோரும் கற்றனர்; கற்றனர் எனின், எழுதப் படிக்க ஆம் அத்துணை அளவே கற்றனர் அல்லர்; அருங் கவி பாடும் அளவு கற்றனர்; இதனால் தமிழகத்தின் ஊர் தோறும் புலவர்கள் வாழக் காண்கிறோம்.

புலவர்கள் வரலாற்றினை விளங்க உணரும் வாய்ப்பில்லாமையால் அவர்கள் பிறந்த எல்லா ஊர்ப் பெயர்களையும் அறிந்து கொள்வதற்கில்லை; தாம் பிறந்த ஊர்ப் பெயரைத் தம் இயற்பெயரோடு சேர்த்து வழங்கினர் சில

ரின் ஊர்ப் பெயர்களைமட்டுமே உணர்தல் இயலும்: அவ்வாறு அப் பெயர்கொண்டு நோக்கியவழி, அவர்கள் பிறந்த பெருமைசால் ஊர்களாக, நூறு ஊர்ப்பெயர்களை அறிகிறோம். அவ்வூர்ப் பெயர்களைத்தான் அறிகிறோமேயன்றி, அவை யாண்டுள்ளன? அவற்றின் வரலாறு யாது? என்பதை அறிதற்கில்லை. அவ் வூர்ப் பெயர்களுள் சில, உண்மையில் ஊர்ப் பெயர்கள் தாமா? அல்லது வேறு சிறப்புக் குறித்து, அப் புலவர் பெயரோடு வந்து வழங்கிய அடைமொழிகளா? என்று ஐயுறத்தக்கனவாகவும் உள்ளன. புலவர்களின் வரலாறு, பெண்பாற் புலவர்கள், உவமையாற் பெயர்பெற்றோர், காவல பாவலர்கள், வணிகரிற் புலவர்கள், கிழார்ப்பெயர்பெற்றோர், உறுப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர், மதுரைப் புலவர்கள் என்ற பல்வேறு தலைப்பின் கீழ் வகைப்படுத்தி உரைக்கப் பெறுவதால், அவ்வத் தலைப் பின்கீழ்ச் சில புலவர்களின் ஊர்ப்பெயர்கள் அடங்கிவிடும். அவ்வாறு அடங்காத ஊர்களில் வாழ்ந்தார் வரலாறு மட்டுமே ஈண்டு உரைக்கப்பெறும். இவ்வாறு ஆராய்ந்து கொண்ட எழுபத்தேழு ஊர்களில வாழ்ந்த நூற்றுப்பத்துப் புலவர்களின் வரலாற்றினை, "மாநகர்ப் புலவர்கள்," என்ற வரிசையில் கூறத் தொடங்கி, அவ் வரிசையுள் முதல் நூலாகிய இதன்கண், இருபத்திரண்டு ஊர்களில் வாழ்ந்தோராய முப்பது புலவர்களின் வரலாறு உரைக்கப்படுகிறது. இந் நூலால் அறியப்படும் புலவர்களின் ஊர்கள், (1) அகம்பல், (2) அஞ்சில், (3) அல்லல், (4) ஆடுதுறை, (5) ஆலங்குடி, (6) ஆலி, (7) ஆவூர், (8) இடைக்கழிநாட்டு நல்லூர், (9) இடைக்காடு, (10) இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர், (11) இருந்தையூர், (12) இளம்புல்லூர், (13) இறங்குகுடிக் குன்றநாடு, (14) உம்பற்காடு, (15) உரோடகம், (16) உவர்க்கண்ணூர், (17) உறையூர், (18) எருக்காட்டூர், (19) எருமையூர், (20) எறிச்சிலூர், (21) ஐயாதி, (22) ஒக்கூர் முதலாயினவாம்.

# க. அகம்பல் - மால் - ஆதனார்

அகம்பல் என்பதோர் ஊர்; ஆதனார் என்ற பெயருடையராய இப் புலவர், அவ்வூர்த் தலைமையினையுடையராதல் குறித்து, மக்கள், அகம்பல்-மால் ஆதனார் என அழைத்தனர். மதுரை மாவட்டம் பெரியகுளம் வட்டத்தில் அகமலை என்றோர் ஊர் உளது: பண்டு அகம்பல் என வழங்கியதே, திரிந்து இன்று அகமலை என வழங்குகிறதுபோலும் என்று எண்ணுவாரும் உளர். ஆதன் என்பது, மக்கள் பெயராகவும், மாநகர்ப் பெயராகவும் பண்டு வழங்கி வந்துளது; ஆதன் அவினி, ஆதனூர் என்பனவற்றைக் காண்க. ஆதன் என்ற பெயருடையார், சேரவேந்தரைச் சேர்ந்தோராவர் என்று எண்ணுதற்கு இடனுண்டு.

ஒருவன், வினையொன்றை மேற்கொண்ட விடத்து, அவ் வினை இனிதே முடியும்வரை, அவன் தன் மனத்தே வேறு எத்தகைய எண்ணத்திற்கும் இடந் தாராது, அவ் வினை இனிது முடிதற்காம் எண்ணமே உடையனாதல் வேண்டும்; அந் நிலையில், மனைவி மக்கள்பற்றிய எண்ணம் எழுமாயின், அவன் உள்ளம், அவர்பால் சென்று விடுதலால், எடுத்த வினை இடையூறு உறும்: ஆதலின், அந் நிலையில் அவர்களை உள்ளுதல் கூடாது; எடுத்த வினை இனிதே நிறைவேறின், அந் நிலையில், வெற்றியுற்றதால் உண்டாய இம் மகிழ்ச்சியினை, அவரோடு இருந்து நுகர்தற்கு இல்லையே என்ற எண்ணம், அவன் உள்ளத்தே எழல் இயல்பாம்; அதை அப்போது தடுத்தலும் ஆகாது; "கிழவி நிலையே வினையிடத்து உரையார்; வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்," என்று கூறுவர் தொல்காப்பியனாரும்.

வேந்தன்கீழ் வினையாற்றும் வீரன் ஒருவன், தன் வேந்தன் வேற்றரசர்மீது போர் தொடுத்துவிட்டான் என அறிந்து, தன் அரிய மனைவியைப் பிரிந்து, அரசன் ஆணை மேற்கொண்டு, போருக்குச் சென்று, ஆண்டு அவனை

மறந்து போர்செய்தான்; உள்ளம் ஒன்றுபட்டு உடற்றினமையால் விரைவில் வெற்றிபெற்றான்; வேந்தன் வெற்றி பெற்றானாகவே, தனக்கு இனி வினையில்லையாதல் அறிந்த அக்கணமே, அவன் உள்ளத்தில் அவளைப்பற்றிய எண்ணம் உண்டாயிற்று. "இருந்தோம்பி இல் வாழ்வதெல்லாம், விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு," என்ப. மகளிர், தாமும், தம் கணவரும் பிரியாதிருந்து விருந்தோம்பி வாழ்தலையே விரும்புவர்; கணவர் இல்லாதபோது, தனித்துத் தாம்செய்யும்விருந்து, தகுதியற்றதாம் என எண்ணுவர்; வீரன், தன் மனைவியும் இம் மாண்புடையளே என்பதை அறிவானாதலின், அவளைப் பற்றிய எண்ணம் எழுந்தவுடனே, விருந்தோம்புதற்கு வேண்டும் உணவு முதலாம் பொருள்களை ஒன்றும் குறைவின்றி ஆக்கி வைத்துவிட்டு, அதை உடனிருந்து அளித்து மகிழ்தற்கு அவன் இல்லையே என்ற எண்ணம் எழ, அவள் ஏங்கிநிற்கும் காட்சியையும், அவ்வாறு ஏங்கிநிற்பாள்முன், தான் திடுமெனச் சென்று நின்றால், அந்நிலையில் முறுவல் தோன்ற நிற்கும் அவள் முகப் பொலிவினையும் தன் மனக் கண்ணால் கண்டான்: இனி, ஈண்டுச் சிறிதுகாலம் இருத்தலும இயலாது; இன்னே சேர்தல்வேண்டும் அவள் இருக்குமிடம் என்று எண்ணினான்; தன் தேர்ப்பாகனை அழைத்தான்; தேரை விரைந்தோட்ட வேண்டினான்; பாகன், வினை அறிந்து ஓட்ட வல்லன் என்பதை அறிந்தும், ஆண்டுச் செல்லும் தன் உள்ள விரைவால், அன்று அத் தேரிற் பூட்டவேண்டிய புரவிகள் எத்தகையனவாதல் வேண்டும் என்பதை எடுத்துக்கூற விரும்பினான்; குதிரைகள், மன்னரும் மதிக்கும் மாண்புடையவாதல் வேண்டும்; கால்வைத்த இடத்தே குழி தோன்றுமாறு குதித்துக் குதித்து ஓடுவனவாதல் வேண்டும்; கடத்தற்கரிய கொடுமையும் நெடுமையும் உடைய வழிகளையும் வருந்தாது கடக்கவல்ல காலாற்றல் உடையவாதல் வேண்டும்; பந்தயத்தில் முன்னிடம் பெறவல்ல விரைந்த ஓட்டத்தால் விளக்கமுற்றவாதல் வேண்டும்; அத்தகைய குதிரைகளைத் தேர்ந்து பூட்டுக; தேர்வந்து தன் தெருவில் நிற்கு

மளவும் அவள் ஆற்றாள் ஆதலின், அவள் நம் வருகையினை முன்கூட்டியே அறிதல் நன்றாம்; அதை அறிவிக்கும் ஆற்றல் குதிரைகளின் கழுத்தில் கட்டிய மணிகளுக்கு உண்டு; ஆகவே, மணிகளை மறவாது பூட்டி அணிசெய்க என்று கூறினான்.

காதல், கடமை ஆகிய இரண்டனுள் எதையும் கை விடாது, இரண்டையும் ஒருங்கே கடைப்பிடிக்கவல்ல காளை ஒருவனையும், கணவனோடிருந்து கடனாற்றத் துடிக்கும் காரிகை ஒருத்தியையும் காட்டிக் கருத்தூட்ட முன்வந்த நம் கவிஞர் பெருமானின் கல்விச் செருக்கினை, அவர் கவி னுறக் கட்டிய செய்யுளைக் கண்டு களிபேருவகை கொள் வோமாக!

"இருநிலம் குறையக் கொட்டிப் பரிந்தின்று
ஆதி போகிய அசைவில் நோன்தாள்,
மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி,
கொய்ம்மயிர் எருத்திற் பெய்ம்மணி ஆர்ப்பப்,
பூண்கதில் பாக! நின் தேரே; பூண்தாழ்
ஆக வனமுலைக் கரைவலம் தெறிப்ப
அழுதனள் உறையும் அம்மா அரிவை
விருந்தயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய
முறுவல் இன்னகை காண்கம்;
உறுபகை தணிந்தனன் உரவுவாழ் வேந்தே."

(நற் : அக)

# உ. அஞ்சில் அஞ்சியார்

அஞ்சில் என்பதோர் ஊர்; அவ்வூரிற் பிறந்தவராதலின், இவர் அஞ்சில் அஞ்சியார் என அழைக்கப்பெற்றார். தமிழகத்தைப் பேரரசர் மூவரோடு ஒப்ப ஆண்டு, புலவரைப் போற்றித் தமிழ்வளர்த்த அரச இனங்களுள் அதியர் என்பாரும் ஒருவராவர். அதியர் என்பார், தகடூரைத் தலைநகராகக்கொண்ட சிறுநாட்டை ஆண்டிருந்த குறுநிலத் தலைவராவர். இவர் குடியில் வந்து, ஔவையார்க்கு அரிய நெல்லிக்கனி அளித்த அதியமான், அஞ்சி எனவும் அழைக்கப்பெறுவனாதலின், அஞ்சி என்ற சொல், அதியரைக் குறிக்க வழங்கும் மற்றொரு சொல்லாம் என்பது பெறப்படும் ஆகவே, இவ் அஞ்சியார் தமிழ் வளரத் துணை புரிந்த ஒரு குடியிலே வந்தவர்; தமிழறிந்து தமிழை வளர்த்தவர் என்ற பெருமை உடையவராவர். அஞ்சி அத்தைமகள் நாகையார் என்ற பெயருடைய பெண்பாற் புலவரொருவர் உளர்; அவர், இப்புலவர் அஞ்சில் அஞ்சியாரின் அத்தை மகளோ, அன்றி, ஔவைக்குக் கனி அளித்த அஞ்சியின் அத்தை மகளோ அறிகிலோம் எனினும், இருவரும் ஒருகுடியில் வந்தவராவர் என்பது உறுதி. அஞ்சியார் பாடிய பாட்டு ஒன்று நற்றிணையில் மருதத் திணையை விளக்கிநிற்கிறது.

பரத்தையிற் பிரிந்த தலைமகன் விடுக்க வந்து வாயில் வேண்டிநிற்கும் பாண்மகன் கேட்குமாறு, "தலைவன் உறவுகொள்ளும் பெண்தன்மை யறியாப் பேதைப்பருவத்துப் பரத்தை, ஊசல் ஆடாது அழுதுநிற்கின்றாள். அவளை ஆற்றுவித்து மீட்டும் ஆடச்செய்வார் ஆங்கு எவரும் இலர்; அதனால், அவள் அழுது ஊடினாள்; அவள் ஊடினமையால் இவன் இங்கு வந்துளான்," எனத் தோழி கூறும் துறையமைந்தது அச்செய்யுள்.

இந்த ஒரே செய்யுளில், பேரூர்க்கு அழகு, ஆடல் முதலாம் விழாக்கள் குறைவின்றி நிகழ்வதாம் என ஊர் அழகினையும், பேரூரிற்பிறந்து, மக்கள் அணிந்து அழுக்

கேறி அகற்றிய ஆடைகளைக் கொண்டுசென்று அவ் வழுக்கினை அகற்றிக் கஞ்சியிட்டுப் புலர்த்தி அவர் மகிழும் மாண்புடையதாக்கிக் கொணரும் தன் தொழிலினை விடாது மேற்கொள்வதால், வறுமையறியா வளம்கொழிக்கும் வாழ்வினளாயினள் வண்ணத்தி என உழைப்பின் பெருமையினையும், தன் அவையில் வருந்தும் மக்களின் வருத்தத்தைப் போக்கி வாழ்விக்கும் பண்பினரைப் பெற்றிருப்போனே பண்புடையரசனாவான்; அவ்வாறு பிறர் துயர் போக்கும் உள்ளமும், அதற்கேற்ற உரனும் அறறுரைத் தன் அவையினராக் கொண்டிருக்கும் அரசன் பண்புடைய அரசனாகான் என அரசியல் நெறியினையும் அறியக் கூறியுள்ளார்.

வண்ணத்தி, பிறர் அணிந்து அகற்றிய ஆடையின் அழுக்கினைப் போக்கும் தொழிலுடையளாயினும், அவள் தன் தொழிலைத் தவறாது மேற்கொள்ளும் ஒழுக்கமுடையளாதலின், அவளை வறன் இல் புலத்தி எனப் பாராட்டியும், பூத்தொழிலால் நிறைந்து சிறந்த ஆடையும், பொன்னாலாய மாலையும் அணிந்து, ஆயத்தார் ஆட்ட ஊசலாடும் ஒப்பற்ற செல்வ வாழ்வினளாயினும், பரத்தை மகளிர்க்குரிய மாண்புகளாம் நாண் முதலாம் பண்புகளைப் பெறாமையால், அவள் நிறைந்த வாழ்வினளாகாள்; குறையுடையளே எனக்கொண்டு அவளை "நல்கூர் பெண்டு" எனப் பழித்துக் கூறியும், 'நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும் செல்வமன்று'; நிறைபெரும் குணங்களை நீங்காது பெற்றிருத்தலே பெருவளவாழ்வாம என்று ஒழுக்கத்தின் உயர்வுகூறிய புலவர் பொன்னுரைகள் போற்றற்குரியன.

இவ்வளவு பெருங் கருத்துக்களும் ஒருங்கே விளங்கப் பாடிய புலவன் பெருமையினைப் பாராட்டி மகிழ்வோமாக.

"ஆடியல் விழவின் அழுங்கன் மூதூர்,
உடைஓர் பான்மையின் பெருங்கை தூவா
வறன்இல் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு

வாடா மாலை துயல்வர, ஓடிப்
பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்
பூங்கண் ஆயம் ஊக்க ஊங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா
நயனில் மாக்களொடு குழீஇப்
பயன்இன்று அம்ம! இவ்வேந்துடை அவையே."

(நற்: ௯0)

ஆடையின் அழுக்கினை அகற்றி, அதற்குக் கஞ்சி யூட்டி அணியும் அறிவினர் அக்கால மக்கள் என்று கூறிப் பழந்தமிழர் பெற்றிருந்த நாகரிகப் பண்பாட்டினையும் புலவர் விளக்கியுள்ளமை உணர்க.

---

## ௩. அஞ்சில் ஆந்தையார்

இவர், அஞ்சில் என்ற ஊரிற் பிறந்து, ஊரார் போற்ற வாழ்ந்த ஆதன் என்பாரின் தந்தையாராவர். ஆதன் + தந்தை என்ற இரு சொற்களும், "இயற்பெயர் முன்னர்த் தந்தை முறை வரின் முதற்கண் மெய்கெட அகரம்நிலையும் மெய்யொழித்து அன் கெடும் அவ்வியற் பெயரே" என்ற சூத்திரத்தால், (தொல் : எழுத்து : ௩௪௭.) நிலைமொழி ஈற்று அன்கெட்டும், வருமொழி முதல் மெய்கெட்டும் ஆத் + அந்தை என்றாகி, "ஆதனும், பூதனும் கூறிய இயல் பொடு பெயர் ஒற்று, அகரம் துவரக் கெடுமே" (தொ. எ. ௩௪௮) என்ற சூத்திரத்தால், நிலைமொழி ஈற்றுத் தகர மெய்யும், வருமொழி முதல் அகர உயிரும் கெட்டு ஆந்தை என்ற ஒரு சொல்லாம்; ஆதன் என்ற சொல் சேரர் வழி வந்த ஒரு கிளையினரைக் குறிக்க வழங்கும் சொல்லாத லின், இவரும் சேரரோடு உறவுடைய ஓர் அரச மரபினர் எனத் தெளிக. அஞ்சியத்தை மகள் நாகையார் என்ற சொல், சில ஏடுகளில் அஞ்சிலாந்தை மகள் நாகையார் எனவும் காணப்படுதலைக்கொண்டு நாகையாரை ஆந்தையார் மகள் எனக்கொண்டு, ஆந்தையார் அறிவறிந்த ஆதனும், நாகையும் ஆய இருபெரு மக்களைப்பெற்று மாண்புற்ற வராவர் எனக் கூறுவாரும் உளர்.

தலைமகள் வேறு; தான் வேறு என்று கொள்ளாது, அவள் வாழ்வும் தாழ்வும், தன்னுடைய வாழ்வும் தாழ்வு மாம் எனக்கருதும் இயல்பினளாய தோழி, தலைமகள் காதலிக்கும் தலைவன், களவொழுக்கமே விரும்பும் கருத் துடையனாய் வரைந்துகொள்ளும் வேட்கையின்றி ஒழுகுவ தால், ஊரார் அலர், தாய் காவல் ஆகியவற்றால் தலைமகள் வருந்துவதை அறிந்து, தலைவன் ஒருநாள் வந்து சிறைப் புறமாக இருக்க, அவன் கேட்குமாறு, தலைமகளிடம் கூறு வாள்போல், "தோழி! நின்னால் காதலிக்கப்படும் தலைவன், தன் உற்றார் உறவினர்மாட்டுக் கொள்ளும் அன்பும், உலக உயிர்களிடத்துக் கொள்ளும் அருளும் உடையனல்லன்; பண்புகளால் நிறைந்த பெரியோர் சென்ற நன்னெறி செல்லும் நல்லொழுக்கமும் அவன்பால் இல்லை; அவன்பால்

அக்குணங்கள் அமைந்திருக்குமாயின், நீ இவ்வாறு வருந்த அன்பும், அருளும் இலனாய்த், தான் நலமே வாழப் பிறர் வருந்துவதைக் காணாது ஒழுகுதல் அறநெறியன்று என்னும் அறிவும் இலனாய் இவ்வாறு களவொழுக்கமே விரும்பி வாரான்; நின் தலைவன் இவற்றுள் எதையும் எண்ணும் இயல்பினன் அல்லன்; நீ வருந்துவதை அறியும் அறிவுடையவனும் அல்லன்; ஆதலின், அவன் சான்றோனல்லன்; இதை இப்போதாயினும் அறிந்து, அதற்கேற்ப நடந்துகோடல் நன்று; ஆனால், நீயோ, அவன்பால் சென்ற அன்பின் மிகுதியால் யான் கூறுவதனை ஏற்றுக் கொள்கின்றாயல்லை; ஆயினும் நின் நலம் கருதிக் கூறுகின்ற இதையாவது கேள்! அவன் அவ்வாறு சான்றோனல்லனாய் ஒழுகுவதினின்றும் திருந்திச் சான்றோனாகி, நின்னை வரைந்துகொண்டு பிரியாது வாழவேண்டின், சின்னாள், அவன் காணுவகை நீ மறைந்து வாழ்தல்வேண்டும்; நீ காண்டற்கரியையாதல் அறிந்து, அவன் வரைந்து கொள்ள முன் வருவான்; அவன் நாட்டு மலையில்வாழ் கடுவன், தன் மந்தியும், அதன் குட்டியும் மலைமுடியினை அடைய, ஆண்டுள்ள மேகத்தால் மறைப்புண்ட வழியே, அவற்றின்பால் சென்ற அன்புடையதாய் வருந்தித் தேட எண்ணும்; அவன் நாட்டு விலங்கிடத்தே காணும் இப் பண்பு, அவன் மாட்டும் அமைந்திருக்கும்; மேலும், தன்னைக் காதலிக்கும் கடுவனின் அன்பு மேலும் மிகுதல் வேண்டித் தன் குட்டியோடு ஒளிந்துகாட்டும் அவன் நாட்டு மந்தியின் அறிவு நம்மாட்டும் இருக்குமாயின், இவ்வளவு துயரத்திற்கும் இடமின்றாம்; ஆதலின் யான் கூறுமாறு செய்வாயாக!" என்று கூறித் தலைமகனுக்கு அறிவுரைச் செய்யும் அவள் அறிவின் திறத்தை, உள்ளுறையும் உயரிய பொருள்களும்கொண்ட ஓர் அழகிய செய்யுளால் விளங்கவைக்கும் ஆசிரியர் புலமை சிறந்தது.

"கல்லாக் கடுவன் நடுங்க, முள்ளெயிற்று

.................................

சான்றோ னாதல் நற்கறிந் தனை தெரிமே." (நற்: உ௩௩)

## ௪. அல்லங் கீரனார்

சங்ககாலத் தமிழகத்தே மக்கள் பயில வழங்கிய பெயர்களுள் கீரனார் என்பதும் ஒன்று; கீரனார் என்ற பெயருடைய புலவர் பலராதலின் இவர் அல்லங்கீரனார் என அழைக்கப் பெற்றுள்ளார். அல்லம் என்பது ஓரூர்: மலையாள நாட்டில் அல்லனம் என வழங்கும் ஊரே, அக் காலத்தில் அல்லம் என வழங்கியதுபோலும். இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

'தலைவியின் உடன்பாட்டினைப் பெற்று நின் குறையை முடிப்பேன்,' எனக் கூறிய தோழி, தலைவிபால் வந்து, "தோழி! அழகிய பெரிய தேரேறிவந்த அத் தலைமகன், நம் முன்னின்று, நம் நெற்றியை நெடிதுநோக்கி, இறுதியில் தன் இரு கைகளையும் கூப்பி, "இன்சொல் வல்ல இளையீர்! அரிதின் முயன்று பெற்ற என் இன்னுயிரைக் கவர்ந்து எனக்குத் துயர் மிக அளித்து, அதுகுறித்து வருந்தாது, மாறாக நகைத்துநிற்றல் நுமக்குத் தகுமோ?" எனக் கூறிய அவன் செயல் நமக்கு உண்மையில் நகைப்பினை உண்டாக்கவில்லையா? அவன் நம்மை வருத்தியதையும், அவனால் நாம் வருந்துவதையும் அறியாது, நம்மால் அவன் வருந்துவதாகக் கூறும் அவனை என்னென்பது!" என்று கூறினாள்; அது:

> "நகையா கின்றே தோழி!... ..... ..
> தெளிதீங் கிளவி யாரையோ என்
> அரிதுபுணர் இன்உயிர் வௌவியநீ? எனப்
> பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித்
> தான்நம் அணங்குதல் அறியான், நம்மில்
> தான் அணங்குற்றமை கூறிக் கானல்
> சுரும்புஇமிர் சுடர்நுதல் நோக்கிப்
> பெருங்கடல் சேர்ப்பன் தொழுது நின்றதுவே."

(நற்: உ௪௫)

## ரு. ஆடுதுறை மாசாத்தனார்

ஆடுதுறை என்ற பெயருடைய ஊர்கள் தமிழகத்தில் பல உள்ளன; அவற்றுள் காவிரியின் தென்பால் உள்ள ஆடுதுறை, தென்குரங்காடுதுறை எனவும், அவ் யாற்றின் வடகரைக்கண் உளது வடகுரங்காடுதுறை எனவும், வெள்ளாற்றின் கரைக்கண் உள்ள ஆவடுதுறை, ஆடுதுறை எனவும் வழங்கப்பெறும். ஆவடுதுறை என இருத்தற்குரியதே, ஆடுதுறை எனப் பிறழ்வந்துளது. திருவாவடுதுறைக்குச் சாத்தனூர் என்பது பழம்பெயர் எனக் கல்வெட்டுக்களும், திருத்தொண்டர் புராணமும் கூறுகின்றன; சாத்தனூர் என்பது ஊர்ப்பெயர்; ஆவடுதுறை என்பது அவ்வூர்க் கோயிலுக்குப் பெயர்; நாளடைவில் சாத்தனூர் என்பது மறைந்துபோக, கோயிற் பெயரே, ஊர்க்கும் பெயராகிவிட்டது என ஆராய்ச்சியாளர் கூறுவர்.

சாத்தனார் என்பது, ஐயனாருடைய திருப்பெயர்; தெய்வப் பெயரை மக்கட்கிட்டு வழங்கும் மரபு அன்றே இருந்ததாகலின், அக் கடவுட் பெயர், இவருக்கும் பெயராயிற்று; ஆடுதுறை மாசாத்தனார், பெரும்புலவனும், ஆலத்தூர் கிழார் முதலாகப் பன்னிரு புலவர் பெருமக்களால் பாராட்டப் பெற்றோனும் ஆய குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாராட்டியுள்ளார். அவன் இறந்தான் எனக் கேட்டு அழுது பாடியவருள் நம் புலவரும் ஒருவராவர். இவர் பாடியனவாக நமக்குக் கிடைத்தது அக் கையறுநிலைச் செய்யுள் ஒன்றே.

கிள்ளிவளவன் போர்வெறி கொண்டவன்; களத்தே அவனால் அழிவுற்ற உயிர்கள் அளவிறந்தனவாம்; அவன் இறந்த பின்னர், அவ்வளவு பெரும் உயிர்களை அழிக்க வல்லார் உலகத்து இலராயினர்; கிள்ளிவளவனின் இவ்வாற்றலை நினைந்து வருந்திய புலவர், அவனைக் கொன்று தீர்த்த கூற்றுவன், அறிவற்றவனாவன் என்று கூறுகிறார். உயிர்களைக் கொன்று உண்ணும் தொழில் உடையான் அக் கூற்றுவன்; அவன் பசிதீரப் பல உயிர்களைக்கொன்று

கொடுத்து அவனுக்குத் துணைபுரிந்து வந்தான் கிள்ளிவளவன்; அவ்வாறு தனக்குத் துணைபுரிந்த அவன் உயிரையே கூற்றுவன் இப்போது கொன்று தின்றுவிட்டான்; அறியாமையாற் செய்த இப் பிழையால், அவன் தன் பசி போக்கத் துணைபுரிவாரை இழந்து வருந்தவேண்டியவனாயினன்; உழவர்க்கு உணவாக்கிப் பயன் தருவது விதையாம்; விதைத்த ஒன்று ஆயிரமாகித் துணைபுரியும் விதையில்லா உழவன், உழுதுண்டு வாழ்தல் இயலாது; ஆதலின், உழவர், உயிர்போகும் வறுமை வந்துற்ற போதும், விதையினை அவித்து உண்ண எண்ணார்; அவ்வாறு உண்ணுவோன் உளனாயின், உண்மையில், அவன் உழுதல் தொழிலுக்கு உரியனாகான்; அவ் வுழவனைப் போன்றே, வளவனைக் கொன்ற கூற்றுவனும் வாழும் வகை அறியாதவனாவன்; அவ் வறியாமையோடு, தன் பசி போக்கத் துணைபுரிந்தானைக் கொன்ற செய்ந்நன்றி கொன்ற தீவினையும் உடையனாவன் என்று கூறும் புலவர் தம் பொன்னுரை நயத்தைப் போற்றுவோமாக!

> "நனிபேதையே; நயன்இல் கூற்றம்!
> விரகு இன்மையின் வித்தட் டுண்டனை;
> இன்னும் காண்குவை நன்வா யாகுதல்;
> ஒளிறுவாள் மறவரும்: களிறும், மாவும்
> குருதியம் குரூஉப் புனல் பொருகளத்து ஒழிய
> நாளும் ஆனான் கடந்தட்டு என்றும் நின்
> வாடுபசி அருத்திய பழிதீர் ஆற்றல்
> நின் னோரன்ன, பொன்னியற் பெரும்பூண்
> வளவன் என்னும் வண்டுமூசு கண்ணி
> இனையோன் கொண்டனை ஆயின்,
> இனி, யார்மற்று நின் பசிதீர்ப் போரே?" (புறம்: உஉஎ)

## ௬. ஆலங்குடி வங்கனார்

ஆலங்குடி என்னும் பெயருடைய ஊர்கள், தமிழ் நாட்டில் பல உள்ளன ஆதலின், வங்கனார் பிறந்த ஆலங்குடி யாண்டுளது என்பதைத் துணிதற்கில்லை. இவர், "மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து அறங்கெட அறியாது" (நற் : ௪00) எனச் சோழருடைய உறையூரையும், அவ்வூரிலுள்ள அறங்கூர் அவையினையும் சிறப்பித்துள்ளாராதலின் இவர் சோழநாட்டு ஆலங்குடியினராவர் என்பர் சிலர்; "ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன், வெளிறில் கற்பின் மண்டமர் அடுதொறும், களிறுபெறு வல்சிப் பாணன் எறியும் தண்ணுமை" (அகம் : ௧0௬) எனப் பாண்டியன் பேராண்மையினையும், அவன் பரிசளிக்கும் பெருமையினையும் பாராட்டியுள்ளமையால், வங்கனார் பிறந்த ஆலங்குடி பாண்டிநாட்டு ஆலங்குடியே என்பர் வேறு சிலர். இவர் பாடிய அகத்துறைப் பாடல்கள் அனைத்தும், மருதத்திணையினையே சார்ந்து இருப்பதால் இவர் மருதநிலத்தைச் சேர்ந்தவராவர் என்பாரும் உளர்; வங்கம் என்ற சொல், கப்பல் என்னும் பொருளுடையதாம்; ஆதலின், வங்கன் என்பார், கடல் வாணிபம் மேற்கொண்ட கப்பல் வணிகராவர்; இதனால் இவர் நெய்தல் நிலத்தவராவர் என்று கூறுவோரும் உளர்.

கணவன் நாடுகாவல் கருதி வேற்றூர் சென்றிருந்தக்கால், தனித்திருக்கும் தன் மனைநோக்கி விருந்தினர் வரக் கண்டு, 'அவரும் இல்லா இன்று, பகல் போய் இரவுவந்துற்ற இந்நேரத்தில் வந்த இவரை எவ்வாறு ஏற்றுப் போற்றுவேன்,' எனக் கலங்கிய உள்ளமுடையளாயினும், அதை அறியக்காட்டாது அடக்கி, அவரை இன்முகம் காட்டி வரவேற்று, "பாண! வீட்டில் முன்பக்கத்தேயுள்ள சாடியின் அடியில் உள்ளநீர் சிறிதே ஆயினும், அது கலங்குதலின்றித் தெளிந்தே உளது; பொழுது கழிந்து இரவு வந்துற்ற இப்போது புறவும், இதனும் போன்ற பறவைகள் வெளிவரா ஆதலின், அவற்றைக் கண்ணி அமைத்துத் தினை தெளித்துப் பிடித்துச் சமைத்து அளித்தல் ஆகாது

ஆயினும், காலையில் சுட்டுவைத்த முயற்கறியுளது; இக்கறியுண்டு, அந்நீர் குடித்து, இவ்விரவினை ஒருவாறு கழித்துவிடுங்கள்! நாளை அவர் வருதல் உறுதி; வந்தால் நின் மனைவிக்குப் பொன்னரி மாலையும், நினக்குப் பொற்றாமரைப் பூவும் தந்து போற்றி அனுப்புவர்," என இனியன இயையக்கூறி விருந்தோம்பும் இல்லற மகளிரின் நல்லறச் செயலினை நன்கு கூறியுள்ளார்:

"..........................................
முன்றில் இருந்த முதுவாய்ச் சாடி
ஆங்கு அஃது உண்டென அறிதும்; மாசின்று;
படலை முன்றில் சிறுதினை உணங்கல்,
புறவும், இதலும், அறவும் உண்கெனப்
பெய்தற்கு எல்லின்று பொழுதே; அதனால்,
முயல்சுட்ட வாயினும் தருகுவேம்; புகுதந்து
ஈங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண!
..........................................
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை அணிய
வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே." (புறம்: ௩௧௯)

கணவர், பரத்தையர்பால் உறவுகொண்டு பழியொடு மிடைந்த வாழ்வுடையராயவழியும், அவர்தம் தகாவொழுக்கம் கண்டு தடுத்து நிறுத்தாது, ஏற்று அன்பு காட்டுவதே மனைவியர்க்கு மாண்புதரும் அறநெறியாம் எனக் கூறும் உலகியலால், ஆண் மக்களில் பலர், ஒழுக்கத்தின் இழுக்கா உயர்பெரும வாழ்வினராதல் வேண்டும் என்று எண்ணாது, தவறிய வாழ்க்கையினராதலைக் காண்கிறோம். இவ்வாறு அவர் அறநெறி பிறழ்வதால், அவரை மணந்த மகளிர், மாறாத் துயர்கொண்டு மனங்கலங்கிச் சோர்வதையும், அவர் உறவுகொண்ட வரைவில் மகளிர் வனப்புடைய வாழ்வினராதலையும் காண்கிறோம். புலவர் ஆலங்குடி வங்கனார், இவ்விருவகை மகளிரின் இயல்புகளையும் அவர்தம் வாய்ச்சொற்களைக்கொண்டே விளக்கியுள்ளார்.

தன் கணவன், நாள்தோறும் காலையில் எழுந்து, நன்கு அணிசெய்துகொண்டு, அழகிய இளமகளிரை நாடித் தேர்ஏறிச் செல்வதைக் கண்டு கண்டு கலங்குகிறாள் மனைவி; அவன் இவ்வாறு தகாவொழுக்கினனாய காலத்தும், அவனோடு புலவாது கலந்துறைவதே கற்புடை மனைவியர்க்கு மாண்பாம் என்று இவ்வுலகம் கூறுமாயின், கற்புடை மகளிராய்ப் பிறத்தல் அம்மம்ம! கொடிது! கொடிது! என்று கூறி, அவள் நிலைகண்டு வருந்துகிறாள் அவள் தோழி என்றும்,

> "காலை எழுந்து, கடுந்தேர் பண்ணி
> வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
> மல்லல் ஊரன் எல்லினன் பெரிதுஎன
> மறுவரும் சிறுவன் தாயே;
> தெறுவதம்ம! இத்திணைப் பிறத்தல்லே." (குறுந்: சரு)

தலைமகன் தகாவொழுக்கம் கண்டு வருந்தி வாடுவதால் மட்டும் பயன் இல்லை; அவனுக்கு அவன் தவற்றினை எடுத்துக்காட்டித் திருததுவதைத் தம்போலும மகளிர் தம் கடமையாகக் கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தினளாய்த், தலைவன் தான் விரும்பிய மகளிரைத் தன் மனைக்கே கொணர்ந்து மகிழ்ந்துறையும் மாண்பிலனாய வழி, அவனை அணுகி, "ஐய! அம்மகளிர்பால் எத்துணை அன்புடையையாயினும், பொருள் ஒன்றே விரும்பும் புன்மைக்குணம் அவர் உள்ளத்தைவிட்டு ஒருபோதும் அகலாது; அன்றியும் அவர்கள் நின்மாட்டு நீங்கலாகாப் பேரன்புடையராய் வாழினும், நின் மனைக்குரிய மனையாளைப்போல் மக்களை ஈன்று மனையறம் பேணும் மாண்பு அவர்க்கு உண்டாதல் இல்லை; இதை உணர்ந்து ஒழுகுவாயாக," என்று அறிவுரை கூறினாள் தோழி என்றும் கூறிக் குடிப்பிறந்தாரின் குணம் விளங்கப் பாடியுள்ளார்.

> "யாணர் ஊர! நின்மாணிழை மகளிரை
> எம்மனைத் தந்து நீ தழீஇயினும், அவர்தம்
> புன்மனத்து உண்மையோ அரிதே; அவரும்

பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
நன்றி சான்ற கற்போடு
எம்பாடாதல் அதனினும் அரிதே." (நற்: ௩௩௦)

தலைமகன் பரத்தையரொழுக்கம் ஒழிந்து, தன் மனை புகுந்து ஆங்கே மனைவிசொல் மாறா மாண்புடையனாய் இல்லறம் மேற்கொண்டானாக. அதுகண்ட பரத்தை, இளமையும் அழகும் ஆய இரண்டானும் குறையிலேனாய என்பால், என்னை வயமாக்குதற் பொருட்டு தன் ஆண்மை, ஆற்றல் எல்லாம் கூறிப் பெருமைகொண்ட இந்தத் தலைமகன், மக்களை ஈன்று முதுமையுற்றமையால், அழகு குன்றியவளாய அவன் மனைவி ஆட்டியபடியெலாம் ஆடி, அடங்கிவிடும் இயல்பினனாயினான்; என்னே இவன் ஆற்றல்! என்னே இவன் பெருமை! என்று கூறுவாள்; அவன் கண்ணாடி முன்நிற்பார் கையைத் தூக்கின், தானும் கையைத் தூக்கி, அவர் காலைத் தூக்கின் தானும் காலைத் தூக்கி, அவர் ஆடுமாறு ஆடும் கண்ணாடியுள் தோன்றும், அவர் வடிவேபோல், அவள் ஆட்ட ஆடுகின்றான் என்று தலைவனுக்கு ஆடிப் பாவையினை உவமைகூறி எள்ளி நகைப்பாளாயினாள் என்று பாடிப், பரத்தையரின் பண்பின்மை தோன்றச் செய்துள்ளார்.

" ஊரன்,
எம்இல் பெருமொழி கூறித், தம்இல்
கையும், காலும், தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யும் தன்புதல்வன் தாய்க்கே." (குறுந்: ௮)

# எ. ஆலியார்

ஆலியார், ஆலி என்னும் ஊரிற் பிறந்தவராவர். சோழநாட்டின் உள்நாடுகளுள் ஆலிநாடு என்பதும் ஒன்று; அவ் ஆலிநாட்டின் தலைநகரே ஆலி; இவ்வூர்ப் பெயர், திருவாலி எனவும் வழங்கப்பெறும்; இது, சோழநாட்டில், சீர்காழியிலிருந்து திருவெண்காட்டுக்குச் செல்லும் வழியில் உளது. திருமால் அடியாராகிய திருமங்கை மன்னன் அவதரித்த பெருமையுடையது இவ் ஆலி; அவரைத் திருவாலி நாடர் என்றும் அழைப்பர்.

சில ஏடுகளில் ஆலியார் என்ற பெயர் ஆவியார் என்றும் காணப்படுதலைக்கொண்டு, இப்பெயர் ஊர்பற்றி வந்ததன்று; குடிபற்றி வந்த பெயராம் என்று கூறுவர். மதுரை மாவட்டத்தில் பொதினி என்றோர் மலையுண்டு. மக்கள் அதைப் பழனி என இப்போது வழங்குகின்றனர்; அது, ஆவினன்குடி என்ற பெயராலும் வழங்கப்பெறும். இத் திருவாவிநன்குடியினை ஆண்ட குறுநில மன்னராகிய வேளிர் ஆவியர் என அழைக்கப்பெறுவர்; "முருகன் நற்போர் நெடுவேள் ஆவி," "முழவுறழ் நெடுவேள் ஆவி" என அக்குடிவந்தாரைப் புலவர்கள் ஆவியர் எனப் பெயர் கூறி அழைத்துள்ளனர்.

பகைவர் அரணைச் சூழ்ந்துநின்ற படைவீரருள் ஒருவனாகிய தன்பால், அப்படையினை அழித்துக்கொள்ளும் பணியினை அளிக்காது மற்றொரு வீரன்பால் அளித்த அரசன் செயலால், தனக்கு வரும் புகழ் குறைந்துவிட்டது கண்ட வீரன் ஒருவன், "அரசன் நின்பால் பேரன்புடையன்," எனப் பிறர் கூறியன எல்லாம் பொய்யேயாதல் இன்று அறிந்துகொண்டேன்; உண்டாட்டுக் காலங்களில் சிறப்பும், சுவையும் நிறைந்த கலங்கறற்களை எனக்கு அளித்துவிட்டு, களிப்புக் குறைந்த தெளிந்த கள்ளைத் தான் உண்ணும் அவன் செயலால், அவன் என்மாட்டுப் பேரன்புடையன் என்றேயானும் கருதினேன்; ஆனால், இன்று அரணழிக்கும் பணியினை என்பால் அளிக்காது

பிறன் ஒருவன்பால் அளித்த இச்செயலால், அவனுக்கு யான் வென்று வீறுபெற்று உயர்வதைக் காணும் நல்லுள்ளம் இல்லை என்பது உறுதியாகி விட்டது; ஆதலின், அவன் பண்டுகாட்டிய அன்பெல்லாம் பொய்யே என்பதை உணர்ந்துகொண்டேன் என நொந்து உரைக்கும் அவன் உரைகள், உணவுண்டு உயிர் வாழ்வதினும், உயிர் கொடுத்து உயர்வடைவதையே விரும்பும் அவன் ஆண்மை உள்ளத்தை அறியக் காட்டுகின்றன.

வீரன் ஒருவன் தன் ஆண்மையின் சிறப்பினை அரச னுக்கு உரைக்கும் நெடுமொழி என்ற வரையமைந்த இச் செய்யுள், பழங்கால மறவர்தம் மாண்பினைப் படங்காட்டி நிற்றல் காண்க.

> "எமக்கே கலங்கல் தருமே; தானே
> தேறல் உண்ணும் மன்னே; நன்றும்,
> இன்னான் மன்ற வேந்தே; இனியே,
> நேரார் ஆரெயில் முற்றி
> வாய்மடுத்து உரறி,நீ முந்து என்னானே." (புறம்: உ௯௮)

## அ. ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்

இவர் ஆவூரில் வாழ்ந்தவர்; ஆவூர் சோழநாட்டில் உளது; இவர், அரசர்க்கு அறிவுரை வழங்கும் அமைச்சர்த் தொழில் மேற்கொண்டு, அவர் அளித்த காவிதிப்பட்டமும் உடையவர்; சாதேவனார் என்ற இயற்பெயர் உடையவர். சாதேவன் என்பது சஹதேவன் என்னும் வடசொல்லின் திரிபாம். காவிதி என்பது பாண்டிநாட்டு வேளாளரில் உழுவித்து உண்போர்க்கு அரசர் அளிக்கும் பட்டம் என்பர் சிலர்; நிற்க அகநானூறு பாடிய ஆசிரியர்களுள், ஆமூர்க் கவுதமன் சாதேவன் என்பார் ஒருவர் உளர்; அவர் சேரநாட்டில் தொண்டிநகரை அடுத்துள்ள ஆமூரைத் தாம் பாடிய பாட்டில் வைத்துப் பாராட்டி யுள்ளார். புலவர்கள் தாம் பிறந்த ஊரைத் தம் பாட்டிடை வைத்துப் பாராட்டுதல் பண்பாகும் ஆதலின், அப் பாட்டைப் பாடிய கவுதமன் சாதேவனார் பிறந்த ஊர் அவ் ஆமூரேயாம்; ஆமூர்க் கவுதமன் சாதேவனார் என்ற பெயர், ஏடு எழுதுவோரால் ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் என எழுதப்பட்டிருத்தலும் கூடும். ஆதலின் இருவரும் ஒரு வரே யாவர் என்று கொள்வாரும் உளர்.

ஆவூர்க் காவிதிகள் சாதேவனார், தலைமகளைத் தன் னூர்க்குக் கொண்டுசென்று மணக்க விரும்பி உடன் அழைத்துச் செல்லும் தலைமகன், அவள் வழிநடை வருத் தத்தால் மெலிந்தமை கண்டு, தன் ஊர் வந்துவிட்டது; சிறிது விரைந்து நடந்தால் விரைவில் ஆண்டுப் போய்ச் சேரலாம் என்பதை, 'என் மலையில் மேயும் ஆனிரைகளின் கழுத்தில் ஆயர் கட்டிய மணிகளினின்றும் எழும் ஓசை இதோ கேட்கிறது ஆதலின், ஊர் அணித்தாயிற்று; நீ, நின் தலைமயிர் காற்றில் எழுந்து அலையுமாறு சிறிது விரைந்து நடப்பாயாக' என்ற வாய்பாட்டால் கூறி அழைத்துச்செல்லும் அன்புடைக் காட்சியினை அழகாகப் பாடியுள்ளார்:

"வீபெய் கூந்தல் வீசுவளி உளர
எகுதி மடந்தை; எல்லின்று பொழுதே;
வேய்பயில் இறும்பில் கோவலர் யாத்த
ஆபூண் தெண்மணி இயம்பும்
உதுக்காண் தோன்றும் எம்சிறு நல்லூரே." (நற்: உகூச)

ஆமூர்க் கவுதமன் சாதேவனார் தான் பிறந்த ஆமூர், தமிழகம் முழுதும் பரவிய பெருமபுகழ் உடையது; நெடிய மதில் சூழ்ந்த அரண் உடையது; கொடுமுடி என்பானால் காக்கப்பெறுவது; விற்போர் வல்ல சேரவேந்தரால் விரும்பப்படுவது; அவர்தம் யானைப் படையின் தாக்குதலைக் கொடுமுடி துணையால் தகர்த்தெறிந்த தனிச்சிறப்புடையது; குறும்பொறை என்ற மலைக்குக் கிழக்கே இருப்பது என்றெல்லாம் கூறித் தம் ஊர்ப்பற்றினை உணர்த்தியுள்ளார் :

" .. .. ..... ..குறும் பொறைக குணஅது,
வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்
மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்
தொடியுடைத் தடமருப்பு ஒடிய நூறிக்
கொடுமுடி காக்கும் குரூஉக்கண் நெடுமதில்
சேண்விளங்கு சிறப்பின் ஆமூர்." (அகம் : கடுகூ)

## ௩௧. இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்

தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனம் வட்டத்தையும், செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகம் வட்டத் தென் பகுதியையும் தன்கண் கொண்ட நாடு, சங்க காலத்தே ஓய்மாநாடு என்ற பெயர் பெற்றிருந்தது; இவ் வோய்மா நாட்டிற்குக் கிழக்கே கடற்கரையைச் சார்ந் திருந்த பகுதிக்கு இடைக்கழி நாடு என்று பெயரிட்டு அழைத்தனர் பழந்தமிழர்கள். அந்நாடு, இடைக்காலத்தும் இடைக்கழிநாடு என்றே வழங்குகின்றதாயினும், மக்கள் அப்பெயரை 'எடகநாடு' எனத் திரித்து வழங்குகின்றனர். உள்நாட்டிற்கு வேண்டும் வாணிபப் பொருள்களைக் கொண்டு கொடுத்து உறுதுணைபுரியும் உப்பங்கழியினை இடையே கொண்டிருப்பதால் இந்நாடு இடைக்கழிநாடு என அழைக்கப்படலாயிற்று; இந்நாடு தெங்கிற்குப் பெயர் போயது. இடைக்கழிநாட்டுள் நல்லூர் என்ற பெயருடைய ஊரில் பிறந்த நம் புலவர் தத்தனார் என்ற இயற்பெயரு டையராவர்; இவர்தம் புலமைச் சிறப்புணர்ந்த அவர் காலத்தார், அவர் பெயர்க்குமுன் சிறப்புணர்த்தவரும் 'ந' என்ற எழுத்தினை இணைத்து வழங்கினர். இதனால் இவர், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் என அழைக்கப் பெற்றார்.

இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், தன் நாட்டை அடுத்துள்ள ஓய்மா நாட்டினை ஆண்டிருந்த நல்லியக் கோடனைப் பாராட்டிப் பாணாற்றுப் படையொன்று பாடி யுள்ளார். நல்லியக்கோடன் ஓவியர் என்ற குடியில் வந்தவனாவன். அதியமான் நெடுமானஞ்சி பிறந்த அதியர் குடியும், பேகன் பிறந்த ஆவியர் குடியும்போல், ஓவியர் குடியும் பழந்தமிழ்க் குடிகளுள் ஒன்றாம்; அதியர் குடிவந்த நெடுமானஞ்சி, அதியமான் என அழைக்கப்பெறுதலே போல், ஓவியர் குடிவந்த நல்லியக்கோடன் ஓவியமான் எனவும், ஓய்மான் எனவும் அழைக்கப்பெற்றுளான்;

ஓய்மான் ஆண்ட நாடாதலின் அந்நாடும் ஓய்மான்நாடு எனவும், ஓய்மாநாடு எனவும் அழைக்கப்பெறலாயிற்று.

ஓய்மாநாடு, ஐந்நில வளமும் அமையப்பெற்ற அழகிய நாடாம்; மாவிலங்கை, எயிற்பட்டினம், ஆமூர், வேலூர், கிடங்கில்போன்ற பெரிய நகரங்களைத் தன்னகத்தே கொண்டிருந்த நாடு; அந் நாட்டின் தலைநகராம் பெருமையுடையது மாவிலங்கை; ஆண்டிருந்து அரசாண்டோர் பலராவர்; அவருள், ஓய்மான் நல்லியக்கோடன், ஓய்மான் நல்லியாதன், ஓய்மான் வில்லியாதன்போன்றார் புலவர் பாராட்டும் பெருமையுடையவராவர்.

நல்லூர் நத்தத்தனார் பாடிய பாணாற்றுப்படை, சிறு பாணாற்றுப்படை எனப் பெயர் பெறும்; புலவர்கள், தலைவன் ஒருவனைப் பாடுங்கால், புரவலர் முன்னின்று ஆடியும், பாடியும் பொருள்பெறும் பண்பினராகிய கூத்தர், பாணர், பொருநர், விறலி இவர்களுள் ஒருவராகத் தம்மைக் கொண்டு, தாம் அவனைப் பாடிப் பொருள்பெற்று மீண்டு வருங்கால், இடைவழியில் எதிர்ப்பட்ட தம்போலும் ஏழை இரவலன் ஒருவன், "நீவிர் பொருள்பெற்ற வழி யாது? அப் பொருள் தந்தோன் யாவன்? அவன் ஊர் யாண்டுளது? ஆண்டுச் செல்லும் ஆறு எது?" என்று கேட்க, அவனுக்கு, அத் தலைவன் பண்பெல்லாம் எடுத்துக் கூறி, அவன் இன்னான்; அவன் ஊர் இது; ஆண்டுச் செல்லும் வழி இது என்று கூறுவதாகப் பாடுவதைப் பண்பெனக் கொண்டுள்ளனர். "கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும், ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச், சென்று பயன் எதிரச் சொன்ன பக்கம்," என இலக்கணம் வகுப்பர் தொல்காப்பியனார்; (தொல். பொருள்: 36). இவ்வாறு, பாணரை ஆற்றுப்படுக்கும் செய்யுள் பாணாற்றுப்படையெனப்படும்; பாணர், இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் எனப் பல திறத்தராவர்; யாழ்ப்பாணரும், அவர் கையாளும் யாழ்வகைக் கேற்பப் பல வகையினராவர்; யாழ், பேரியாழ், சீறியாழ், மகரயாழ், சகோட

யாழ், செங்கோட்டியாழ் எனப் பல வகைப்படும். இவற்றுள் சீறியாழ் இசைப்பாரைச் சிறுபாணர் எனவும், அவரை ஆற்றுப் படுக்கும் செய்யுளைச் சிறுபாணாற்றுப் படை எனவும் பெயர் இட்டு அழைப்பர். பெரும்பாணாற்றுப்படையுள் வரும் பாணர் கையாழை "இடனுடைப் பேரியாழ் முறையுளி கழிப்பி," எனவும், சிறுபாணாற்றுப் படையுள் வரும் பாணர் கையாழை "இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ," எனவும் கூறுதல் காண்க.

பாணாற்றுப்படை பாடவந்த புலவர், அப் பாணர் வல்ல இசையினும் வல்லராதல்வேண்டும் என்பதற்கேற்ப, நல்லூர் நத்தத்தனார், இசைநூலறிவு நன்கு வாய்க்கப் பெற்றுளார். சீறியாழ், பொற்கம்பிபோலும் முறுக்கு அடங்கின நரம்பினை உடையது; இனிய ஓசை உடையது; யாழை இடப்பக்கத்தே தழுவிக்கொள்ளுதல் வேண்டும்; நைவளம் அல்லது நட்டபாடை என்ற பண் முற்றுப்பெற்ற வழிப் பாலைப்பண் தோன்றும்; பண்ணின் கூறுபாடுகளை அறிந்தவனே யாழ் இசைத்தற் குரியனாவன். தாமரையில் துயின்றெழுந்த தும்பி எழுப்பும் காலைஓசை சீகாமரம் என்னும் பண்ணோசையினை நிகர்க்கும்; தேன் ஒழுகுவது போன்றும், அமிழ்தினை உண்பதுபோன்றும் இனிமை நிறைந்து, பாடப்படும் பண்ணின் துறைகளையெல்லாம் பாடவல்ல தன்மையால் நிறைந்து விளங்கும் இனிய யாழினை, இசைநூல் முறைப்படி வாசித்தல்வேண்டும்; அவ்வாறு பாடும் பண்களுள், குரல் அல்லது செம்பாலை என்பதும் ஒன்றும்; நல்லூர் நத்தத்தனார் நமக்கு அறிவிக்கும் இசை நுணுக்கங்கள் இவை :

> "பொன் வார்ந்தன்ன புரியடங்கு நரம்பின்
> இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ
> நைவளம் பழுநிய நயம்தெரி பாலை
> கைவல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க
> இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇ."
>
> (சிறுபாண்: ௩௪-௮)

> "காமர் தும்பி காமரம் செப்பும்." (சிறுபாண்: எள)

"... ..............தேம் பெய்து
அமிழ்து பொதிந்து இலிற்றும் அடங்குபுரி நரம்பின்
பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்விக்
கூடுகொள் இன்னியம் குரல் குரலாக
நூல்நெறி மரபிற் பண்ணி." (சிறுபாண்: உஉகூ-௩0)

நல்லூர் நத்தத்தனார், தாம் பாடிய நல்லியக் கோடன் அளிக்கும் கொடைப்பொருளின் பெருமை அளவிடற் கரியது; கொடுக்கும் அவன், கொடையாற் பெயர்பெற்ற கடையெழு வள்ளல்களினும் சிறப்புடையான் என்று கூற விரும்புவார், அவன் அளிக்கும் கொடைப்பொருளை நோக்கின், குட்டுவர்க்குரிய வஞ்சிநகர்ச் செல்வமும் சிறிதாம்; செழியர்க்குரிய மதுரை மாநகர்த் திருவும் சிறிதாம்; சோழர்க்குரிய உறந்தைநகரின் உறுபொருளும் சிறிதாம் என்றும், கடையெழு வள்ளல்கள் மேற்கொண்டிருந்த கொடைத் தொழிலாகிய மிக்க பாரத்தைத் தான் ஒருவனாகவே தாங்கி நிற்கும் உரனுடையுள்ளம் உடையவன் நல்லியக்கோடன் என்றும் கூறியுள்ளார்.

"வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே;" (சிறுபாண்: ௫0)
"மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே;" ( ,, : கூஎ)
"ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே;" ( ,, : அ௩)
"எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒருதான் தாங்கிய உரனுடை நோன்தாள்."

நல்லியக் கோடன்பால் தாம் கண்ட நற்பண்புகளைப் பாராட்டத் தொடங்கிய புலவர், அவன் வாயில், கடவுளர் உறையும் மகா மேருமலை ஒரு கண்ணை விழித்துப் பார்த்த தாலொத்த உயர்ந்த கோபுரவாயில்; அவ்வாயில் பொருநர்க்கு அடைக்கப்படா; புலவர்க்கு அடைக்கப்படா; அருமறை அறிந்த அந்தணர்க்கு அடைக்கப்படா; ஆனால், இவ்வாறு அன்பராய் அன்றிப் பகைவராய் வருவார்க்கு, நுழைதற்கரிய காவலையுடையது என வாயிற் சிறப்புரைப் பாராயினர்;

"பொருநர்க் காயினும், புலவர்க் காயினும்,
அருமறை நாவின் அந்தணர்க் காயினும்
கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன
அடையா வாயில் அவன் அருங் கடை."

அவன் வாயிற் சிறப்புரைத்த புலவர், நல்லியக் கோடன், செய்ந்நன்றி அறிவன்; சிற்றினம் சேரான்; இன்முகம் உடையன்; இனிய பண்பினன்; அஞ்சி அடைந் தாரை ஆட்கொள்ளும் அருளுடையன்; ஆறிய சினத்தன்; அணிவகுத்து நிற்கும ஆற்றல் வீரரை அழிக்கும் ஆண்மை யாளன்; அழிந்து ஓடிவரும் தன் படையைத் தடுத்து நிறுத்தித் தாங்கவல்ல தாளாளன்; எண்ணிய எண்ணி யாங்கு முடிக்கும் திண்ணியன்; கண்டார் விரும்பும் கவினுடையான்; ஒருதலைப்படா உயர்நீதி யுடையான்; வருவது உணரும் அறிவுடையான்; பெண்டிர் விரும்ப ஒழுகும் மெல்லிய பண்புடையான்; அறிவன அறிந்த அறிவுடையான்; வந்து இரப்பார்தம் வரிசை யறிந்து வரையாது வழங்கும் வள்ளன்மையான் என்று அவன் பண்பு பாராட்டுவார்போல், ஆடவர்பால் அமைதற்கு வேண்டும் அருங்குணங்களை அடைவே வகுத்துரைப்பா ராயினர்.

"செய்ந்நன்றி அறிதலும், சிற்றினம் இன்மையும்,
இன்முகம் உடைமையும், இனியன் ஆதலும்,
செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த
அஞ்சினர்க்கு அளித்தலும், வெஞ்சினம் இன்மையும்,
ஆணணி புகுதலும், அழிபடை தாங்கலும்,
வாள்மீக் கூற்றத்து வயவர் ஏத்தக்
கருதியது முடித்தலும், காமுறப் படுதலும்
ஒருவழிப் படாமையும், ஓடியது உணர்தலும்,
அரியேர் உண்கண் அரிவையர் ஏத்த,
அறிவுமடம் படுதலும், அறிவுநன்கு உடைமையும்,
வரிசை யறிதலும், வரையாது கொடுத்தலும்."

நல்லியக்கோடன்பால் கண்ட பண்புநலம், நல்லூர் நத்தத்தனாரை இந்த அளவோடு நிறுத்திவிடாது மேலும்

புகழச்செய்தது; நல்லியக்கோடன், தாய், தந்தை, தம்முன், ஆசிரியன் போன்ற ஆண்டால் முதிர்ந்தோர்க்குக் கூப்பிய கையினை உடையான் என, அவன்பால் அமைந்த பெரியோரைப் பணியும் பண்புடைமையினையும், வீரர்களுக்கு அல்லாமல் மகளிர் அணைய மலர்ந்த மார்புடையான் என அவன் காதற் சிறப்பினையும், உழவர் தம் உழுதொழிலினை ஒரு குறையும் இன்றி நன்கு ஆற்றுமாறு ஆளும் அரசுடையான் என அவன் செங்கோற் சிறப்பினையும், தேரேறி வந்து போர்புரிவார் தம்மை அழித்தொழிக்கும் ஆற்றல் வாய்ந்த வேலுடையான் என அவன் பகைவர்க்கஞ்சாப் பேராண்மையினையும் எடுத்துக்கூறிப் பாராட்டிப் போற்றுவாராயினர்.

"முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும்,
இணையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும்,
ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும்:
தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும்."

(சிறுபாண்: ௨௩௧-௪)

அரசர்க்குப் பொருள்வரும் வழிகளுள், பகைவரை அழித்துப் பெறுவதும் ஒன்றாம் என்று அரசியல் நூல்கள் உரைக்கும்.

"உறுபொருளும், உல்கு பொருளும் தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்."

(திருக்குறள்: ௭௫௬)

நல்லியக்கோடன் தன்னை நாடிவரும் பாணர் முதலாயினார்க்கு அளிக்கப் பெரும்பொருள் வேண்டியக்கால், அவன் படைவீரர் பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் சென்று வென்று, ஆண்டுக் கைப்பற்றிய பொருளில் ஆண்டு அவ்வெற்றி பாடிவந்தார்க்கு அளித்தன போகக் கொண்டு வந்த எஞ்சிய பொருளை எடுத்து வழங்குவன் என அவன் பொருள்பெறு வழியினையும், அதனை அவன் செலவிடும் நல்லாற்றின் திறத்தினையும் நன்கு விளக்கியுள்ளார் புலவர் நல்லூர் நத்தத்தனார்.

"திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புலம் அகற்றி
விறல்வேல் மன்னர் மன்னெயில் முருக்கி
நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு
........................ .. ......... ..தரீஇ
அன்றே விடுக்கும் அவன் பரிசில்." (சிறுபாண்: உசரு-சுக)

நல்லூர் நத்தத்தனார், ஒவ்வொரு பொருளுக்கும் உரிய இயல்பினை எடுத்துக்கூறிப் பாராட்டும் பண்பினராவர். சேர, சோழ, பாண்டிய அரசுகளின் பெருமையினை விளக்க விரும்புகிறார் புலவர். பாண்டிநாடு முத்திற்கும், சோழ நாடு சோற்றிற்கும் சிறந்த நாடுகளாம் என்பதை அறிந்தவர் புலவர் ஆதலின், பாண்டிநாட்டினைக் குறிப்பிடுங்கால், உமணர் வண்டியோடு வந்துசேர்ந்த மந்தி, அவ்வுப்பு வணிகர்தம் மக்களோடு கூடிக் கிளிஞ்சில்களின் உள்ளே முத்துக்களையிட்டுக் கிலுகிலுப்பை ஆடி மகிழும் கொற்கைத் துறையினையுடைய பாண்டிநாடு என அந்நாட்டு முத்து வளத்தினை நகைச்சுவை தோன்றப் பாடிக் காட்டினார் :

"நோன் பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி, மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கித்
தோள்புற மறைக்கும் நல்கூர் நுசுப்பின்
உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்
தத்துநீர் வரைப்பின் கொற்கைக் கோமான்."
(சிறுபாண் : ருரு-சுக)

சோழவளநாடு சோறுடைத்து என்ப ஆதலின். அந்நாட்டைக் குறிப்பிடுங்கால் மருதவளம் பெற்று, தள்ளா விளையுள் உண்மையால் தளராத குடியிருப்பினை உடையது என்றும், தன் நாட்டு மக்கள் வாழ்விற்குப் பிறநாட்டுச் செல்வத்தை நாடாப் பெருவளம் வாய்ந்த நல்லிசை உடையது என்றும், அச் சோழநாட்டுத் தலைநகராம்

உறையூர் தன்னிடத்தே குடிவாழ்வார் வாழும் வசதி நோக்கிப் பிறநாடு செல்லவேண்டித் தன்னிடத்தினின்றும் ஓடாப் பெருமையுடையது என்றும், அந்நாட்டு வளம் தோன்றவே பாடியுள்ளார் புலவர்.

"தண்பணை தழீஇய தளரா விருக்கைக்
குணபுலம்." (சிறுபாண் : எஅ-கூ)

"நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தை." (சிறுபாண் : அ௨-ஙூ)

புலவர் பாரதக் கதைகளை நன்கு உணர்ந்தவராவர்; அருச்சுனன் காண்டவ வனத்தை அழித்தது; அவன் அண்ணன் வீமசேனன் அடிசில் தொழிலில் வல்லனாதல் ஆய நிகழ்ச்சிகளை அறிந்து கூறியுள்ளார். இரவலர் தம் வறுமையின் கொடுமையினை விளக்குங்கால், உப்பின்றி வெந்த குப்பைக்கீரையை உண்ணுங்கால் அவ்வுணவின் சிறுமைகண்டு பழிப்பரே என அஞ்சிப் பிறர் காணுவாறு, வாயில் அடைத்து உண்பர்; "குப்பை வேளை, உப்பிலி வெந்ததை, மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து, இரும்பே ரொக்கலொடு ஒருங்குடன் மிசையும், அழிபசி வருத்தம்" புலவர் நல்லூர் நத்தத்தனார், தமிழ்ப்பற்று மிக்க தமிழ்ப்புலவராவர்; தமிழ்நாட்டு ஊர்களின் தெரு வெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்க விரும்பும் அவர் உள்ளம்; தமிழ் முழங்கும் தெருக்களைக் காணும்தொறும் களிக்கும் அவர் உள்ளம்; தமிழ்நாட்டுப் பேரூர்களில் மிகப் பழைய காலத்திருந்தே தமிழ் வளர்த்த பெருமை மதுரைக்கே உண்டு. மதுரை தமிழ்ச்சங்கத்தின் நிலைக் களம்; தமிழ்ப்புலவர் பலரின் வாழ்விடம்; இதனால் அந்நகர் தெருக்களிலும், தமிழ் இலக்கியநலம் செறிந்து தோன்றும். இந்தக் கவின்மிக்க காட்சியினைக்கண்ட புலவர் கண்முன், அந்நகர் பெற்றிருந்த ஏனைய பெருமை எவையும் தோன்றா வாயின; மதுரையை நமக்கு அறிவிக்குங்கால், தமிழ் மொழி நிலைபெற்ற தாங்கற்கரிய புகழ்வாய்ந்த தெருக்களை உடையது அது என்றுகூறிப் பாராட்டினர்.

# ௧௦. இடைக்காடனார்

இடைக்காடனார் பிறந்த இடைக்காடு என்னும் ஊர் மலையாள மாவட்டத்தில் உளது என்பர் நற்றிணை உரையாசிரியர்; அது தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டத்தில் உளதுஎன்பர் குறுந்தொகைப் பதிப்பாசிரியர். இவர், முல்லை நிலத்தினையும், இடையர்கள் இயல்பினையுமே பாடியிருப்பதால் இவரும் இடையரே என்று கொள்வாரும் உளர். இடைக்காடனார், கபிலரின் அரிய நண்பராவர்; தம் காலத்தே வாழ்ந்த ஏனைய புலவர்களிடத்தும் இனிமை தோன்றப் பழகும் பண்பினர்; அழகிய கவிபாடும் ஆற்றல் வாய்ந்தவர் எனப் புராணங்கள் உரைக்கும். "பின்னமில் கபிலன் தோழன், பெயர் இடைக்காடன் என்போன்; இன்னியல் வாணர்க்கெல்லாம் இதவியோன்; கவியால் மிக்கோன்; (திருவால: ௨௦: ௧) என வரும் பாடலை உணர்க. இடைக்காடனார், சில பாடல்களைப் புனைந்து சென்று பாண்டியன் ஒருவனைக் கண்டு பாராட்ட, அவன் அவர் பாக்களையும், அவரையும் மதியானாக, அதனால் மனம் நொந்து, ஆலவாய்ப்பெருமான் முன்னின்று, அவன் செயல் உரைத்து வருந்த, புலவர்க்கு உண்டாய இழுக்கு தனக்கு உண்டாயது எனக்கருதிய இறைவன், உமையோடும், எஞ்சியுள்ள சங்கப் புலவர்களோடும் மதுரை நீங்கி, இடைக்காடனார் இருந்த இடம் சென்று தங்கிவிட்டாராக, அஃதறிந்த பாண்டியன் மனங்கலங்கி, இடைக்காடனாரை அடைந்து குறையிரந்து வணங்கிநின்றான் என்ற ஒருகதை திருவிளையாடற் புராணங்களில் கூறப்படுகிறது. இடைக்காடர் பாடிய பாக்கள் அகம், புறம், நற்றிணை, குறுந்தொகை ஆகிய நான்கு நூல்களினும் இடம்பெற்றுள்ளன. "இடைக்காடர் ஊசிமுறி" என்றோர் அரியநூல் இவர் பெயரால் வழங்குகிறது. இடைக்காடர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியுள்ளார்.

கிள்ளிவளவன் காக்கும் நாட்டினைப் பகைவர் கைப்பற்றுதல் இயலாது; அவன் அத்துணை ஆற்றல் வாய்ந்த

வன்; அவனை அழித்து, அவன் நாட்டைக் கைப்பற்றும் துணிவு அவன் பகைவர்க்கு உண்டாகாது. இதை விளக்க விரும்பும் புலவர், புலிஈன்று புறம்காக்கும் அதன் குட்டியினைக் கைப்பற்றுதல் இயலாத தொன்றாம் என்பதை எடுத்துக்காட்டி, கிள்ளிவளவன், குட்டியைக் காக்கும் புலியேபோல் தன் நாட்டினைக் காத்து நிற்கின்றான் என்று கூறிய உவமையும், உண்மையும் உணர்ந்து இன்புறற் பாலனவாம்;

> "புலிபுறங் காக்கும் குருளை போல
> மெலிவில் செங்கோல் நீபுறங் காப்ப." (புறம்: ௪௨)

வளவன் இவ்வாறு காத்து நிற்பதால் சோழநாட்டு மக்கள் படையால் பாழாவதிலர்; படையால் பாழுறாத அவர், பெருமழை பெய்வதால் உண்டாம் வெள்ளப்பெருக்கால் ஒரோருகால் அழிவுறுவர். சோழ நாட்டார், படையாற் பாழுறுப் பாதுகாவலையும், வெள்ளத்தால் அழிவுறும் அத்துணை நீர்வளத்தினையும் பெற்று விளங்கும் சிறப்பினை அறிந்து பாராட்டுகிறார் புலவர்:

> "தண்புனல் பூசல் அல்லது, நொந்து
> களைக வாழி வளவ! என்று நின்
> முனைதரு பூசல் கனவினும் அறியாது." (புறம்: ௪௨)

இவ்வாறு வளவன் நாட்டு மக்கள், பகைவராற் பாழுறாமையினாலும், நிறைநீர் பெற்று வளம்மிக உடைமையாலும், விருந்தோம்பலை மகிழ்ந்து ஆற்றுதற்காம் பொருள் வளத்தைக் குறைவறப் பெற்றிருந்தனர் என்பதை விளக்க விரும்பிய புலவர், அவன் நாட்டு உழவர்கள், நெல்லறுக்குங்கால் கீழ்மடையில் பிடித்த வாளைமீனையும், உழுபடையில் அகப்பட்ட ஆமையினையும், கரும்பறுக்குங்கால், அக்கரும்பிற் கட்டிய தேனடையினின்றும் கொண்ட தேனையும், உண்ணு நீர்த்துறையில் மகளிர் கொய்து கொணர்ந்த செங்கழுநீரையும், வந்தார்க்கு விருந்திட்டுப் பேணிமகிழ்வர் எனக் கூறும் பொருள்நயம் போற்றுதற்குரியதாம்.

"அரிநர், கீழ்மடைக் கொண்ட வாளையும், உழவர்
படை மிளிர்ந்திட்ட யாமையும், அறைநர்
கரும்பிற் கொண்ட தேனும், பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்றகுவளையும்
வன்புலக் கேளிர்க்கு வருவிருந்து அயரும்" (புறம்: ௪௨)

வளவன் நாடு வற்றாத வளங்கொழித்து நிற்பதறிந்தமையால், அவன் காலத்துப் புலவர் எல்லாம், அவன் நாடு புகுந்து அவனைப் பாடுவாராயினர்; புலவர் பலர் வருவதறிந்த வளவனும், வருவார்க்கு இல்லையென்னாது வழங்குதல்வேண்டும் என்ற வேட்கையுடையனாய் அவ் வேட்கையினை நிறைவேற்றுதற்கு வேண்டும் பெரும்பொருள் கருதிப் பகைவேந்தர்தம் நாடுபுகுந்து வெற்றிகொள்வதை விரும்புவன் என்று வளவன் வன்மையும், வண்மையும் ஒருங்கே தோன்றப் பாடியுள்ளார்:

"புலவரெல்லாம் நின்னோக் கினரே;
நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்று வெகுண்டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண் நோக்கினையே." (புறம்: ௪௨)

"இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு," என்ப; விருந்தினர் வருகையினை எதிர்நோக்கி நிற்பது தமிழர் பண்பு; விருந்து வந்தால், பெருந்திரு வந்ததேபோல் மகிழ்வர் அவர்; விருந்தாற்றற்குரிய நிலைதவறின், வாழ விரும்பார். தமிழர்பால் இப் பண்பு நிலைபெறுவதால், விருந்தினர், எல்லோரும் உண்டு உறங்கும் இராக்காலத்தே வரினும், அவர்கள், வருந்துவாரல்லர்; மகிழ்ந்து வரவேற்று, அவர் வேண்டுவ அளித்துப் பேணுவர். இப் பண்பு, தமிழ்க்குடிவந்த தன் மனைவிபால் இருப்பக் கண்டு களிபேருவகை கொள்ளும் ஒரு தலைமகன் உள்ளத்தை உணர்த்துகிறார் புலவர்:

"அல்லி லாயினும், விருந்து வரின் உவக்கும்
முல்லை சான்றகற்பின்
மெல்லியல் குறு மகள்." (நற்: க௪௨)

தமிழ்மகன், தன் மனைவிபாலும், தன் மக்கள்பாலும் மாறா அன்புடையனாவன்; அன்புடைமையால், அவர்களைப் பிரிந்துறை வாழ்வைப் பெரிதும் வெறுப்பன்; காதல் உள்ளத்தோடு, கடமை யுள்ளமும் ஒருங்கே உடையன் ஆதலின், ஒரோவழி, அவர்களைப் பிரிந்து தன் கடனாற்றச் செல்லவேண்டின், அவ்வாறு சென்று பிரிந்துறையும் காலத்தும் அவன் அவர்களையே எண்ணி இருப்பன்; அவர்கள் உண்ணும்நிலை, உறங்கும்நிலை, அவர்கள் ஆடல், பாடல் ஆகிய காட்சிகள் அவன் கண்முன் நின்றபடியே இருக்கும். இத்தகைய தலைவன் ஒருவன், பிரிந்துறை காலத்தே, நடந்தறியாச் சிறிய அடிகளையும், பூப்போலும் அழகிய கண்களையும் உடைய தன் மகனையும், அவன் கண் அயர்ந்து உறங்கும் காட்சியினையும், உறங்கும் தன் மகனின் உறக்கம் தெளிவிக்கும் தன் மனைவி, அவன் அருகே சென்று, அவன் அலறி எழாவண்ணம், 'எந்தாய் எழுக!' என அன்பொழுக அழைத்து எடுக்கும் இனிய காட்சியினையும் கண்முன் கொணர்ந்து கண்டு களிக்கிறான் எனப் பாடித் தமிழர்தம் அன்பு வாழ்க்கையினை நம் அகக்கண்முன் காட்டுகிறார் புலவர்:

> "நடை நாட் செய்த நவிலாச் சீறடிப்
> பூங்கட் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
> 'வந்தீகு எந்தை!' என்னும்
> அந் தீம் கிளவி." (நற்: உஉக)

கார்காலத் தொடக்கத்தே மீண்டு வருவேன்; அது காறும் ஆற்றியிரு எனக் கூறிப் பிரிந்து சென்ற தலைமகன் அக்காலம தொடங்கிப் பலநாள் கழிந்தபின்னரும் வந்திலன்; அதனால், தலைமகள் பெரிதும் வருந்துவாளாயினள்; தலைமகள் துயர்போக்க விரும்புகிறாள் தோழி; கார்காலம் தொடங்கியதுகூடத் தலைமகளுக்குத் துயர் விளைப்பதன்று; அக்காலத்தே வருவேன் என்ற அவர் உரை பொய்த்தமை கண்டே அவளுக்குத் துயராம் என்பதை அறிவாள் தோழி; ஆகவே, அவர் பொய்த்திலர் என்பதை அவளுக்கு அறிவித்தாலன்றி அவள் அமைதி

யுற்றாள் எனக் கொண்டாள்; இதற்கு வழி, பொய் கூற லன்றி வேறு இல்லை; "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்," என்ப ஆதலின், அவள் துயர் போக்கப் பொய்கூறத் துணிந்தது அவள் உள்ளம்: தலைவிபால் சென்றாள்; "தோழி! தலைவர் பொய்த்துவிட்டார்: அவர்க்கு யாது துயர் உண்டாமோ? எனக் கலங்குகின்றனை; நின் கலக்கத்திற்கு இடமே இல்லை; கார்ப்பருவம் இன்னும் தொடங்கவே இல்லை; மழை பெய் கிறது; மயில் ஆடுகிறது; பிடா மலர்கிறது; இவை கார் காலம் தொடங்கி விட்டமையினை உணர்த்தாவோ என்று கேட்கத் தோன்றும்; ஒன்று கூறுகிறேன் கேள்; சென்ற கார்காலத்தில் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரை, இப்போது புதுநீரைக் கொள்ளும்பொருட்டுச் சொரிந்து விட்டுச் செல்கின்றன மேகம்; மேகத்தின் இச் செயல் கண்டு, அதின் உண்மையறியாது, கார்காலத்துப் புது மழை எனத் தவறாகக்கொண்டு மயில் ஆடின; மயில் ஆட்டத்தைக் கண்டு பிடாவும் மலர்ந்தன; உண்மையில் அவற்றின்செயல் அறியாமையால் நிகழ்ந்தனவே; ஆகவே, இது கார்காலமன்று; அவர் உரைத்துச் சென்ற காலம் வந்திலது: அவர் உரை பொய்த்திலது; ஆகவே நீ வருந் தற்க," என்று கூறினாள் எனப் பாடிய புலமைநலம் நுகர்ந்து இன்புறற்பாலதாம்:

> "மடவ; வாழி! மஞ்ஞை மாயினம்:
> காலமாரி பெய்தென, அதன் எதிர்,
> ஆலலும் ஆலின; பிடவும் பூத்தன:
> கார் அன்று; இகுளை! தீர்க நின் படரே!
> கழிந்த மாரிக்கு ஒழிந்த பழநீர்,
> புதுநீர் கொளீஇய உகுத்தரும்
> நொதுமல் வானத்து முழங்கு குரல் கேட்டே."
>
> (குறுந்: ௨௫௧)

இடைக்காடனார் எடுத்தாளும் உவமைகள் அழகு வாய்ந்து காணப்படும். கிள்ளிவளவனைப் புலவர் பலரும் பாடுவதை, மலையிடத்தே பிறந்த பல ஆறுகள் கடலையே

நோக்கி ஓடுவதுபோல், புலவர் எல்லாம் அவனையே பாடுவர் எனக் கூறுவதும், முல்லைநிலத்தில் காயாவின் நீலநிறப் பூக்கள் உதிர்ந்து கிடப்பதற்கு இடையே செந்நிற இந்திர கோபங்கள் கலந்துநிற்கும் காட்சி, நீலமணிகளும் பவழங் களும் கலந்த மணியிடை பவழம்போலும் என்று கூறு வதும், முயல்களின் கண்கள், நெல்லிக்காய்களை நிகர்க்கும் என்பதும், களைகொட்டுவார் மழைநீர்க்கு அஞ்சித் தலைமேல் கொண்ட பனங்குடை இருமுனையும் உயர்ந்து தோன்றுவதால், கலைமான் தலைபோல் காட்சிதரும் என உவமை காட்டுவதும், சுவைபயந்து நிற்றல் காண்க.

"மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவர் எல்லாம் நின் நோக்கினரே." (புறம்: ௪௨)

"மணிமிடை பவளம்போல, அணிமிகக்
காயாம் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ப்புறம் வரிப்ப."

"மூதாய் குறுகுறு ஓடி
மணிமண்டு பவழம் போலக் காயா
அணிமிகு செம்மல் ஒளிப்பன மறைய." (அகம்: 304,374)

"சிறியிலை நெல்லிக் காய் கண்டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்." (அகம்: 284)

"இரலை நன்மான் இனம் பரந்தவைபோல்
கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்."
(அகம்: 194)

## கக. இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்

இவர், பெருங்கௌசிகனார் எனவும், இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் எனவும் அழைக்கப்பெறுவர்; இரணியமுட்டம் என்பது, மதுரையைச் சார்ந்த யானைமலை முதலிய இடங்களைத் தன்பாற் கொண்டதாகிய ஒருசிறு நாடென்பர் எனக்கூறுவர் பேராசிரியர் உ. வே. சாமிநாதய்யரவர்கள். இரணியமுட்டம் தொண்டைநாட்டின் கண்ணது எனக் கூறுவர் நற்றிணை உரையாசிரியர். இரணியமுட்டம் யாண்டுளது என்பதை அறிந்து கூறுவதற்கில்லை எனினும், அது தொண்டை நாட்டின் கண்ணதன்று என்பதை அறிஞர் அனைவரும் ஒப்புக்கொள்வர்; இரணியமுட்டம் யாண்டுளது என்பதையே அறிந்துகோடற் கியலாமையால், அதன் கண்ணதாகிய பெருங்குன்றூர் யாண்டுளது என்பதை அறிந்து கூறல் ஆகாது என்க. பெருங்குன்றூர்கிழார் என்றொரு புலவர் உளர்; அவர் பிறந்த பெருங்குன்றூரும், பெருங் கௌசிகனார் பிறந்த பெருங்குன்றூரும் ஒன்றோ, வேறோ அறிகிலம். பெருங்கௌசிகனார் பிறப்பால் அந்தணராவர். "உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பன அந்தணர்க்கு உரியன," எனப் பேராசிரியர் கூறுதல் காண்க (தொல் : மரபு : 74).

பெருங்கௌசிகனார் பாடிய மலைபடுகடாத்தில், "தீயின் அன்னஒண் செங்காந்தள்" (145) என்ற அடிக்குப் பொருள் கூறிய நச்சினார்க்கினியர், "இதற்கு நன்னன் என்னும் பெயர் தீயோடடுத்த தன்மையின் ஆனந்தமாய்ப் பாடினாரும் பாட்டுண்டாரும் இறந்தார் என்று ஆளவந்த பிள்ளை ஆசிரியர் குற்றங்கூறினாராலெனின், அவர் அறியாது கூறினார்; செய்யுள் செய்த கௌசிகனார் ஆனந்தக் குற்றமென்னும் குற்றமறியாமற் செய்யுள் செய்தாரேல், இவர்

நல்லிசைப் புலவராகார்; இவர் செய்த செய்யுளை நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம் ஆனந்தக் குற்றமென்பதொரு குற்றம் இச் செய்யுட்கு உறாமையான் என்றுணர்க," என எழுதுவதால், பெருங்கௌசிகனாரின் புலமையும் பெருமையும் விளங்கித் தோன்றல் காண்க. இதில் மலைபடுகடாம் ஆனந்தக்குற்றம் உடையதன்று என மறுத்த ஆசிரியர் நச்சினார்க்கினியர், "பாடினோரும், பாட்டுண்டாரும் இறந்தார்," என ஆளவந்தபிள்ளை ஆசிரியர் கூறியதை மறுத்திலர் ஆதலின், மலைபடுகடாம் பாடிய பின்னர்ப் பாடிய பெருங்கௌசிகனாரும், பாடப்பெற்ற நன்னனும் ஒருங்கே இறந்தனர் என்பது உறுதியாதல் காண்க. மலைபடுகடாமேயன்றி, வேறு இருபாக்களும் பெருங்கௌசிகனார் பாடியனவாகக் கிடைத்துள்ளன; அவை இரண்டும் நற்றிணைக்கண் வரிசை செய்யப்பெற்றுள்ளன.

"அலகைத் தவிர்த்த எண்ணரும் திறத்த மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப" (347-8) என்ற அடிகளில், மலைக்கு யானையை உவமித்து, அம்மலைக்கண் பிறந்த பல் வேறு ஒலிகளை, யானை மதம் பட்டதனால் அதன்கண் உண்டாம் ஒலிகளாகக் கூறிய சிறப்பால் இப்பாட்டு மலைபடுகடாம் எனும் பெயர்பெற்றது. "மலைக்கு யானையை உவமித்து, அதன்கட் பிறந்த ஓசையைக் கடாம் எனச் சிறப்பித்த அதனால், இப்பாட்டிற்கு மலைபடுகடாமென்று பெயர் கூறினார்; "கடாம், ஆகுபெயராய் அதனாற் பிறந்த ஓசையை உணர்த்திற்று" என நச்சினார்க்கினியர் கூறுவதும் காண்க

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரால் பாடப்பெற்றோன், தொண்டைநாட்டுப் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன் எனப்படுவோனாவன். பல்குன்றக் கோட்டமென்பது தொண்டை நாட்டின் பெரும் பிரிவாகிய இருபத்து

நான்கு கோட்டங்களுள் ஒன்று.[1] குன்றுகள் பலவற்றைத் தன்பாற் கொண்டிருத்தலின் இக்கோட்டம் இப்பெயர் பெற்றது. "குன்றுசூழ் இருக்கை நாடுகிழவோனே" என்ற மலைபடுகடாத்துத் தொடரும் இதனை வலியுறுத்தி நிற்றல் காண்க. பல்குன்றக் கோட்டத்துத் தலைநகராய் விளங்கியது செங்கண்மா எனும் நகராகும். இவ்வூர் வடஆர்க்காடு மாவட்டம், செங்கம் வட்டத்தின் தலைநகராய் இன்றும் திகழ்கிறது; திருவண்ணாமலைக்கு மேற்றிசையில் உளது; வடஆர்க்காடு, தென்ஆர்க்காடு, சேலம் மாவட்டங்கள் ஒன்றுசேரும் இடமாக அமைந்துளது; செங்கண்மா, செங்கமா, செங்கம் என இக்காலத்தே வழங்கப்பெறும். பண்டைக்காலத்தே பேரரசின் தலைநகராய்த் திகழ்ந்தது என்பதைக் காட்டும் அழிந்த அகழி, கோட்டை முதலாயினவற்றை இன்றும் பெற்றுளது.

நன்னன்சேய் நன்னன் எனப்படும் இப்பாட்டுடைத் தலைவன் நன்னன் என்பானின் மகனாவன். பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னனின் தந்தையாகிய நன்னனே, கொண்கானத்து நன்னனாவன்; ஏழில் நெடுவரைக்கும், பாழிச் சிலம்பிற்கும், பெண்கொலைபுரிந்த பழிக்கும் உரியோன் கொண்கானத்து நன்னனாவன்; கொண்கானத்து நன்னன் மகனே பல்குன்றக் கோட்டத்து நன்னன் எனக் கூறுவர் சிலர். "மலைநாட்டின் ஒரு பகுதியை ஆண்ட சிற்றரசனாகிய நன்னன், நெடுந்தூரத்ததாகிய—தொண்டை நாட்டில் உள்ள—பல்குன்றக் கோட்டத்தையும் ஆண்டுவந்தான் எனக் கொள்வதில் ஐயம் உண்டாகிறது. அக்காலத்தில் முடிவேந்தராய் விளங்கிய சேரவேந்தரும் தமிழ்நாட்டில் இத்துணை நெடுந்தூரம்வரை ஆண்டனர் எனத் தெரியவில்லை; 'பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள்' என்னும் அடைமொழி,

1. இருபத்து நான்கு கோட்டங்களாவன: ஆமூர், இளங்காடு, ஈக்காடு, ஈத்தூர், ஊற்றுக்காடு, எயில், கடிகை, கலியூர், களத்தூர், குன்றபத்திரம், சிறுகரை, செங்காடு, செந்திருக்கை, செம்பூர், தாமல், படுவூர், பல்குன்றம், புலால், புலியூர், பேயூர், மணவூர், வெண்குன்றம், வேங்கடம், வேலூர்.

கொண்கானத்து நன்னனின்றும் இந்நன்னனைப் பிரித்துக் காட்டுவதற்காகவே கொடுத்ததுபோலத் தோன்றுகிறது'' எனக்கூறி, இதை மறுப்பர் சிலர். “கொண்கான நாட்டின் பகுதியான சேலநாட்டின் அருகும், திருவண்ணாமலைக்கு மேற்கிலும் உள்ள செங்கண்மா என்னும் நகரம் கொண்கான நாட்டினைச் சேர்ந்திருத்தல் கூடும் என்று உணரவும் கிடக்கிறது; அதனால் இந்நன்னன் சேய்நன்னன் என்பாரும், இந்தக் கொண்கான நன்னனது குடிப்பிறந்தாரே என்று துணியவேண்டும்,'' என்று கூறி இதை ஏற்றுக்கொள்வர் வேறு சிலர். நன்னன் என்ற பெயர் ஒற்றுமை தவிர வேறு நல்ல சான்று எதுவும் கிடைக்கப் பெறாமையால், எதையும் துணிந்து மேற்கொள்வதற்கு இல்லை.

ஐந்நூற்று எண்பத்து மூன்று அடிகளை உடைய ஆசிரியப்பாவாலாகிய இம்மலைபடுகடாம், பரிசில் பெற வரும் கூத்தன் ஒருவனைப் பரிசில்பெற்று வருவானொரு கூத்தன், செங்கண் மாத்துவேள் நன்னன்சேய் நன்னனிடத்தில் ஆற்றுப்படுத்தியதாகப் பாடப்பெற்றுளது. “கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ!'' எனக் கூத்தரை விளித்து ஆற்றுப்படுத்தியதனால், இந்நூல் கூத்தராற்றுப்படை எனவும் பெயர்பெறும். கண்ணுளர்: கூத்தர். பரந்த மொழியால் அடிநிமிர்ந்து வந்த தோல் என்னும் வனப்பிற்கு உதாரணமாக இளம்பூரணராலும், ஆசிரியப்பாவின் தலையளவிற்கு எல்லையாக நச்சினார்க்கினியராலும் இப்பாட்டு எடுத்தாளப்பட்டுள்ளமையால் இப்பாட்டின் சிறப்பு இனிது புலப்பட்டு நிற்றல் காண்க. இப்பாட்டைப் பாடிய புலவர் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், நன்னன், அவன் நல்லியல்பு, அமைச்சர், அருந்திறல்—வீரர் முதலாம் அவன் சுற்றம், கற்புநிறை அவன் மனைவி, அவன் மலை, அம் மலையுறை காரியுண்டிக் கடவுள், அவன் தலைநகர் செங்கண்மா, அவன் நாட்டில் வளங்கொழித்துப் பாயும் சேயாறு ஆகிய இவற்றின் இயல்புகளை எடுத்துக்கூறும் முறை இறும்பூது பயப்பதாம். இதில்

பல்வேறு இசைக்கருவிகளின் பெயர்களும், அவற்றின் இயல்புகளும், பேரியாழின் அமைப்பும், மலைவளமும், அம் மலைநாட்டில் வாழ்வோராகிய குறவர், கோவலர், வேடர் முதலாயினோர் தம்பால் வருவோரை வரவேற்று விருந்தோம்பும் வனப்பும், நன்னன் நகர் நோக்கிச் செல்வார்க்கு இடைவழியில் உண்டாம் ஊறுகளும், அவற்றை நீக்கிச் செல்லும் உபாயங்களும் உணர்த்தப்பட்டிருக்கும் திறம் அம்ம! அம்ம! அளவிட்டுப் புகழவும் ஒண்ணுமோ!

நன்னன், பகைவரைப் பாழ்படுக்கும் பேராற்றலும், அப்பகைவர் அணுகற்கும் அஞ்சும் வேளாண்மையும் உடையவன்; விற்போர் வல்லவன்; கேடறியா நற்புகழ், இந்நிலவுலகம் நிற்குமளவும் நின்று நிலைபெறுமாறு பகைவர் பலரை வென்று புறங்கண்டு, அவர்பால் கொண்ட பெறுதற்கரிய பேரணிகலங்களைத் தன்னைப் பாடிவரும் புலவர் முதலாம் இரவலர் தமக்கு மாரிபோல் வழங்கும் வன்மையும் வண்மையும் உடையன்; பகற்பொழுதை விளக்கி எழும் ஞாயிறு, இருளாகிய பகையைக் கடிந்து ஒளிபெற்றுத் திகழ்வதேபோல், தன் பகைவரை அழித்துப் புகழ்பெற்றுத் திகழும் சிறப்புடையவன்; பகைவர் பெருவாழ்வு வாழப் பார்த்துப் பொறுத்திருத்தல் பண்புடை அரசர்க்கு அழகன்று; ஆகவே, அப்பகைவர் தம் வாழ்வு கண்டு பொறாமை கொள்ளுதல் வேண்டும்; பகைவரொடு மேற்கொள்ளும் முயற்சி வெற்றிதரு முயற்சியாதலன்றி வீண் முயற்சியாதல் கூடாது; இதற்கு அரசர்கள்மாட்டு மானமும், வெற்றிதரு பண்புகளும் பொருந்தியிருத்தல் வேண்டும்; இம் மாண்புகள் நன்னன்பால் நிலவியிருந்தன;

"முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பின்" (மலைபடு: ருக)

"வில்நவில் தடக்கை மேவரும் பெரும்பூண்
நன்னன்சேய் நன்னன்." ( ,,: சுரு-சு)

"தொலையா நல்லிசை உலகமொடு நிற்பப்
பலர்புறங் கண்டுஅவர் அருங்கலம் தரீஇப்
புலவோர்க்குச் சுரக்கும் அவன்ஈகை மாரியும்."
( ,,: எ0-௧)

"பாயிருள் நீங்கப் பகல்செய்யா எழுதரும்
ஞாயிறு அன்னவன் வசையில் சிறப்பும்." ( ,, : அசு-ரு)

"நோனுச் செருவின், வலம்படு நோன்றாள்
மானவிறல் வேள்." (மலைபடு: கசுரு-ச)

எவ்வினையைத் தொடங்குவதாயினும், தொடங்குவதற்குமுன், அவ்வினையைத் தொடங்கின் உண்டாம் அழிவையும், ஆக்கத்தையும், அது முற்றுப்பெற்றவழி உண்டாம் பயனையும் எண்ணிப் பார்த்தே தொடங்குதல் வேண்டும் என்ப; இவ்வாறு எண்ணுவார் பிழைபடும் அறிவுடையராயின், அவர்க்கு ஆக்கத்திற்கு மாறாகக் கேடே வந்துறும்; ஆதலின், அவர் தெளிந்த அறிவினராதல் வேண்டும்; நன்னன்பால் இந்நல்லறிவு பொருந்தி இருந்தது; அவன் அறிவு, ஆக்கத்திற்கு மாறான கேடுதரு வகையில் எண்ணும் குறைபாடு உடையதன்று; அவன் எண்ணியது என்றும் தவறியதின்று; எண்ணிய எண்ணியாங்கு எய்தும் திண்ணிய அறிவு அவன்பால் உண்டு; கேளாரும் வேட்ப மொழிவது வேந்தர்க்கு அழகு என்ப; தன்னை இகழ்வாரும் தன்னை விரும்புமாறு ஒழுகவல்ல ஆற்றல் அரசனுக்கு இன்றியமையாது வேண்டப்படும்; இந்நற்பண்பும் நன்னன்பால் பொருந்தியிருக்கக் காணலாம்; "தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று;" "செல்வத்துப் பயனே ஈதல்" நிலைபேறில்லாத செல்வத்தைப் பெற்றார், அப்பொருளை அஃதில்லாமையால் தம்பால் வந்து இரந்து நின்றார்க்கு வாரிவழங்கி, நிலைபெற்ற புகழைப் பெறுதல் வேண்டும்; "அற்கா இயல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால் அற்குப ஆங்கே செயல்" என்பது திருக்குறள்; அவரே அறிவுடையருமாவர்; அவ்வாறின்றிப் பேரரசும் பெருஞ் சுற்றமும் பெற்றிருந்தும், தம்பால் வந்து இரந்தார்க்கு இல்லை எனக்கூறி இழிவுடையராதல் நல்லறிவுடையார் செயலன்று; அவ்வாறு பிறர்க்கு அளிக்காது பேணிய பொருள்கொண்டு வாழ்வார், இறவா நெறிபெற்று இவ்வுலகில் என்றும் வாழ்வாரல்லர்; அவ்வாறு ஆக்கிய பெரும்பொருளை அறவே கைவிட்டு அவரும்

இறப்பவே செய்வர்; இவ்வாறு இறந்தார் உலகில் எத்தனை எத்தனைகோடியோ? அவரைப்போல் ஆற்றவும் பயன் படாது வாழ்தல் நன்றன்று; பொருள் கொடுத்துப் புகழ் பெற்று வாழ்தலே பெருமையும் பேராண்மையும் ஆகும்; இவ் அறிவு வரப்பெற்றோரே உயர்ந்தோராவர்; அவர் உள்ளமே உயர்ந்த உள்ளமாம்; இவ்வுள்ளம் நன்னன்பாலும் உண்டு.

"மதிமாறு ஓரா நன்றுணர் சூழ்ச்சி" (மலைபடு: ௬௨)

"இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும்" ( ,, : ௭௩ )

"உயர்ந்த கட்டில், உரும்பில் சுற்றத்து
அகன்ற தாயத்து அழிகிய நட்பத்து
இலம்என மலர்ந்த கையராகித்
தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை இழிதரும் நீத்தம்சால் அருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவாழ் எக்கர் மணலினும் பலரே;
அதனால், புகழொடும்கழிக நம்வரைந்த நாள்எனப்
பரந்து இடங்கொடுக்கும் விசும்புதோய் உள்ளம்."
(மலைபடு: ௫௫0-அ)

நன்னன், தாம் கூறும் புகழ்உரைகளாகிய விதைகளை விதைத்துத், தம்மால் புகழப்படுவார்தம் பொருள்களைப் பெறவிரும்பும் சொல்லேருழவராம் புலவர் முதலாயி னோர்க்கு, ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அக்காலத்தே அரிதின்வந்து பயனூட்டும் அவ்வாற்று வெள்ளமேபோல் அவர் வறுமைபோய் வளங்கொழிக்க உதவும் வள்ளன்மை உடையவன்; நின்றேத்தும் சூதர், இருந்து ஏத்தும் மாகதர், பாணர், கூத்தர் முதலாயினோர்க்குத் தான் பகை வரை ஒட்டிப்பெற்ற பேரரசுகள் அனைத்தையும் அளித் தும் அமைதியுறுவானல்லன் நன்னன்; பெருமழையைப் பொய்யாது பெய்த பருவமழை, மீண்டும் மீண்டும் பெய் வதேபோல், அவர்க்கு மேலும் மேலும் அளிக்கும் நாளோ லக்கச் சிறப்புடையவன்.

"இசைநுவல் வித்தின், நசைஏர் உழவர்க்குப்
புதுநிறை வந்த புனலம் சாயல்" (மலைபடு: ௬0-௧)

"புகழுநர்க்கு
அரசுமுழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்கும்அவன் நாண்மகிழ் இருக்கை."
(மலைபடு: எ௬-௯)

போர்வீரர் உள்ளத்தே மகிழ்ச்சி நிறைந்தாலன்றி உண்மையாகப் போர்புரியார்; உள்ளம் இல்லார் உடற்றும் போர் உறுபயன் தாராது. அவர் உள்ளம் உவப்ப வேண்டின், அரசராவார், அவர்க்கு உறுபொருள் தருதல் வேண்டும்; ஆகவே, தமக்கு வெற்றிதர வெஞ்சமர் ஆற்றும் வீரர்க்கு வேந்தர், வேண்டும் அளவு பொருளளிக்க மறுத்தலாகாது. நன்னன் குடிவந்த முன்னோர், இவ்வுண்மை உணர்ந்தவராதலின், பகைவர் நாடு மிகச் சேய்மைக்கண் உளதாயினும் அஞ்சாது சென்று, அப்பகைவர் தம் தூசிப் படைகளை அறவே அழித்துக் கொன்றதோடமையாது, அப் பகைவர்தம் யானைப்படையுட் புக்கு வேலேந்திப் போராற்றி வென்ற வீரர்க்கு, ஊரும், நாடும் ஒன்று பலவாக நல்கி ஊக்கும் நல்லறிவும், நற்புகழும் உடையராவர்.

"இகந்தன ஆயினும் தெவ்வர் தேஎம்
நுகம்படக் கடந்து, நூழிலாட்டிப்
புரைத்தோல் வரைப்பின் வேல்நிழல் புலவோர்க்குக்
கொடைக்கடன் இறுத்தஅவன் தொல்லோர் வரவு."
(மலைபடு: அ௬-௯)

"பகையகத்துச் சாவார் எளியர்; அரியர் அவையகத்து அஞ்சாதவர்" என்ப; அரியகற்று ஆசற்றாரும் ஆன்றோர் நிறைந்த அவையுட் புக்கவழி அஞ்சுவர்; அஞ்சினார்தம் அறிவு கலங்கப்பெறும ஆதலின், அந்நிலையில், அவர் தாம் கருதியதனை அவ் அவையினர்க்கு எடுத்துக் கூறவும் இயலாதவராவர்; அந்நிலையில் ஆண்டுக் கூடியிருக்கும் ஆன்றோர், அவர் அச்சம் ஒழியும்வகை ஆவன கூறி,

அவர் உள்ளத்துறையும் உறுபொருளை உள்ளவாறு உணர்த்தற்காம் உரன் உண்டாக்கி, அந்நிலையில் அவர் கூறுவன கேட்டு அகமகிழ்தல் வேண்டும்; இதுவே ஆன்றோர்க்கு அழகு; இத்தகைய ஆன்றோர் நிறைந்த அவையே நல்லவையாம்; இத்தகைய நல்லவை உடையார் நாடு நலிவுறுதல் இன்று; நன்னன் அவையகத்தே இத்தகைய நல்லோர் பலர் கூடிவாழ்ந்திருந்தனர் எனின், அவன் பெருமையினைப் பகரவும் வேண்டுமோ?

> "நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
> வல்லாராயினும், புறமறைத்துச் சென்றோரைச்
> சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
> நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும்."
> (மலைபடு : எஎ-அ0)

நன்னனுக்குரிய மலை நவிரம் எனும் பெயருடையதாம். இம்மலை "நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல் பேரிசை நவிரம்" எனவும், "வளம் பிழைப்பறியாது வாய்வளம் பழுநிக் கழைவளர் நவிரம்" எனவும் புலவரால் பாராட்டப் பெறுகிறது. இம்மலையில் காரியுண்டிக் கடவுள் எனத் திருநாமம் கொண்ட சிவபெருமான் திருக்கோயில் கொண்டுளார் எனவும், கூறுகிறார் நம் புலவர். இம்மலைக்கு இக்காலத்தே வழங்கும் பெயர், திரிசூலகிரி, பர்வதமலை என்பனவாம்; ஆங்குறை இறைவனுக்கு இக்காலத்தார் வழங்கும் திருநாமம் காளகண்டேசுவரர் என்பது. இம்மலை திருவண்ணுமலைக்கு வாயுதிக்கில் உளது.

நன்னன் இருந்து அரசாண்ட தலைநகர் செங்கண்மா. இந்நகரைச்சூழ மலைபோல் உயர்ந்து வானைத் தீண்டுவது போலும் மதிலும், அம்மதிலை அடுத்து முதலை வாழும் ஆழமும், நீர் அருமையும் உடைய அகழியும் உண்டு; இந்நகர், மிக ஓங்கிய சுற்று மதிலையும், சீரிய பெரிய அங்காடித் தெருக்களையும், ஆறுபோல் அகன்ற தெருக்களையும், அடைந்தார் அச்சங்கொள்ளுதற்காம் குறுந்தெருக்கள் பலவற்றையும் கடல் ஒலிபோலவும், கார்மேகத்தொலி

போலவும் எழும் பல ஒலிகளையும், மலைபோலும் மாடங்களையும், காதலர் இனிது உறைதற்காம் இளமரச் சோலைகளையும் ஊரினின்றும் பெயர்ந்து போதலை மனத்தாலும் எண்ணாப் பழங்குடிகளையும் உடையது:

> " இரைதேர்ந்து இவரும் கொடுந்தாள் முதலையொடு
> திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்
> வரைபுரை நிவப்பின் வான்தோய் இஞ்சி
> உரைசெல வெறுத்த அவன் மூதூர்." (மலைபடு: ௯0-௯)

> " நிதியம் துஞ்சும் நிவந்தோங்கு வரைப்பிற்
> பதியெழல் அறியாப் பழங்குடி கெழீஇ
> வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து
> யாறெனக் கிடந்த தெருவின், சாறென
> இகழுநர் வெரூஉம் கவலை மறுகின்,
> கடலெனக் காரென ஒலிக்கும் சும்மையொடு
> மலையென மழையென மாடம் ஓங்கித்
> துனிதீர் காதலின் இனிதமர்ந் துறையும்
> பனிவார் காவிற் பல்வண்டி மிரும்
> ......அவன் பழவிறல் மூதூர்." (மலைபடு: சஎஅ-அஎ)

நன்னன் தலைநகரிடத்தே வாழும் நகர மாந்தரும், நன்னனைப்போன்றே விருந்தோம்பும் வேளாண்மையுடையராவர்; நன்னனை நோக்கி வந்த பரிசிலர், ஊர்மன்றத்தே இருக்கக் காணும் அந்நகர மக்கள், இவர்கள் மிகச் சேய நாட்டினின்றும் வந்தவர்; வெல்லும் போர்வல்ல நம் நன்னனை நாடிவந்துள்ளனர்; மிகவும் அளியர் என்று எண்ணி, முகமலர்ந்து நோக்கி இன்னுரை பல வழங்கி, ஒவ்வொருவர் ஒவ்வொரு நாளாக விருந்தளித்துப் பேணி, வழிநடை வருத்தத்தால் வந்த அவர் துயர்போக்குவர் எனின், அவர் தம் அருள்நிறை உள்ளத்தின் அழகினை என்னென்பது! அரசன் எவ்வழி, அவ்வழியன்றோ குடிகள்!

> " மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்
> வெல்போர்ச் சேஎய்ப் பெருவிறல் உள்ளி
> வந்தோர் மன்ற; அளியர்தாம்; எனக்

கண்டோர் எல்லாம் அமர்ந்து இனிதின்நோக்கி
விருந்திறை யவரவர் எதிர்கொளக் குறுகிப்
பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட." (மலைபடு: ௪௩௨-௭)

நன்னன் நாட்டில் பாய்ந்தோடும் ஆறு சேயாறு; இச்சேயாறு கிழக்குத்தொடர்ச்சி மலைகளில் சவ்வாது மலையிடத்தே தோன்றிச் செங்கம், திருவண்ணாமலை, போளூர், ஆரணி, செய்யாறு முதலாய வட்டங்கள் வழியே ஓடி, செங்கற்பட்டிற்கு அருகே பாலாற்றோடு கலந்துவிடுகிறது; இந்நதிக்குச் சண்முக நதி என்பதும் ஒரு பெயர்; சிவந்த நீர் கொண்டுவருவதால் சேயாறு எனப் பெயர்பெற்றது என்பர் சிலர்; சேய் எனச் சிறப்பிக்கப் பெறும் முருகன் அருளால் வந்த ஆறு ஆதலின் சேயாறு எனப் பெயர்பெற்றது என்பர் வேறு சிலர். குயவன் திகிரிபோலும் சுழல்களைக்கொண்டு காண்பார்க்கு இனிய காட்சியாய் விரைந்தோடும் எனப் புலவரால் போற்றப் பட்டுளது.

"வனைகலத் திகிரியிற் குமிழி சுழலும்
துனைசெலல் தலைவாய் ஓவிறந்து வரிக்கும்
காணுநர் வயாஅம் கட்கின் சேயாறு." (மலைபடு: ௪௭௪-௬)

"நெடுவரை இழிதரும் நீத்தம்சால் அருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாறு." ( ,,: ௫௫௪-௫)

கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ! எனக் கூத்தர் தம் தலைவனை விளித்து, நன்னன்சேய் நன்னனை உள்ளிச் சேறிராயின், அவன் நாடு நோக்கிச் செல்லும் வழியின் இயல்புகளையும், ஆங்காங்கு நீவிர் தங்கவேண்டிய இடங்களையும், அவன் நாடு தரும் உணவுப்பொருள்களின் வகைகளையும், அவன் நாட்டுக் காடு, மலை, சோலை இவற்றின் இயல்புகளையும், யான் கூறக்கேட்டுச் செல்லுவீராக எனத் தொடங்கி அவற்றின் இயல்புகளை விளக்கிக்கூறும் புலவர் தம் சொல்லோவியம் நல்லோவியமாம். அவர் காட்டிய வழியே சென்று, அவர் காட்டும் காட்சிகளையும், அக் காட்சிகளைக் காட்டும் அவர் புலமையின் நலத்தினையும் ஒருங்கே கண்டு களிப்போமாக!

வழியில் தங்கள் தினைப்புனங்களை அழிக்கவரும் பன்றிகளை அச்சுறுத்தி ஓட்டுவான் வேண்டி, புனங்காவலர் கொளுத்திய கற்பொறிகள் கணக்கில உள்ளன; அவை கண்டு அஞ்சுதலும் உண்டு ஆதலின், இரவிற் செல்லாது விடியற்பொழுதில் போவீராக! வழிகளின் இடையிடையே பாம்புகள் மறைந்துறையும் பள்ளங்களும் உண்டு; அவ்விடங்களில் கைகொட்டியும், அவற்றைக் கண்டவழிக் கை கூப்பி வணங்கியும் செல்வீராக! ஆங்காங்குள்ள தினைப் புனங்காப்போர் உயரிய பரண்மீது இருந்து எறியும் கவண் கற்கள் கடிதுவந்து கொடுமை விளைத்தலும் உண்டு; ஆண்டுச் செல்வுழி மரங்களுக்கு இடையே மறைந்து மறைந்து செல்வீராக! யானைகளையும் விழுங்கும் முதலை களையும், ஓடிவரும் வெள்ளம் உடைத்தெறிந்து பெரும் பள்ளங்களையும் உடைய காட்டாறுகள், கால்வழுக்கும் இடங்களை உடைய; ஆண்டுச் செல்வுழி, ஆங்குள்ள மரங் களில் படர்ந்து தொங்கும் பெரும் பெரும் கொடிகளைப் பற்றிக்கொண்டு, கால் வழுக்கலுறுமல், ஒருவரை ஒருவர் காத்து மெல்லக் கடந்து செல்வீராக! காட்டாற்றைக் கடந்து சென்றால், வீழ்ந்தார் எழமாட்டா ஆழம் நிறைந்த குளங்கள் பல குறுக்கிடும்; அவை பாசி படிந்து, வழி மறைத்துக்கிடக்கும்; ஆண்டுச் செல்லுங்கால், ஆங்கு வளர்ந்து நிற்கும் சிறு மூங்கில்களையும் வேழத்தண்டுகளை யும் பற்றுக்கோடாகக்கொண்டு நடப்பீராக! செல்லும் வழியில் மயில்கள் ஆடும்; மந்திகள் தாவும்; தேனிறால்கள் தொங்கும்; அவ்வழிச் செல்கின்ற நீவிர் அவற்றைப் விரையப் பார்த்தலை ஒழித்தல் வேண்டும்; விரையப் பார்ப் பின், நம் கால்கள் நடைதவற, நமக்குத் தீங்குண்டாம்; இடையே இராக்காலம் வந்துறின், ஊறுநிறைந்த அவ்வழி களை அக்காலத்தே கடத்தல் அருமை ஆதலின், ஆங்கே கிடக்கும் மலைக்குகைகளில், நங்கள் இல்லிலே புகுந்து இருந்தாலொப்ப, புகுந்து இருந்து இராக்காலத்தைக் கழிப்பீராக! விடியற்காலத்தே எழுந்துபோகும் நம் முன், யானைகளையும் பற்றி விழுங்குவனவும், வீழ்ந்து கிடக்கும் பெருமரம்போலும் தோற்றம் உடையனவுமாய மலைப்

பாம்புகளும், முகர்ந்தாரையும், நுகர்ந்தாரையும் உயிர் மாய்க்கவல்ல மலர்களும், கனிகளும் நிறையக் கிடக்கும்; அவற்றை அறிந்து அவைபால் அணுகுவதும் செய்யாது அகலப்போவீராக! அவ்விடங்களைக் கடந்துசென்றக்கால், மலைகளும், மரங்களும் செறிந்து, செடிகளும், கொடிகளும் வளர்ந்து, செல்லும் வழியறியமாட்டாக் குன்றக இடங் கள் வந்துறும்; அவ்விடங்கள், அம்மலைவாழ் குறவரையும் மருளப்பண்ணும் கொடுமை உடையன; ஆண்டுச் சென்ற உங்களால் அவ்விடத்தைக் கடத்தல் ஆகாது; ஆண்டுச் சென்றதும் நீவிர் வேறொன்றும் செய்யாது, நும் கையுள இசைக்கருவிகளை எடுத்து இசையினை எழுப்புவீராக! அம்மலையின் உச்சியில், அம்மலையைக் காத்து நிற்கும் கானவர் பலர் உளர்; அவர்கள் நும் இசையினைக் கேட்ட வுடனே விரைந்து நும்பால் வந்து, உண்டற்கினிய பழமும், காண்டற்கினிய மலரும் தந்து வழிகாட்டி அழைத்து ஏகுவர்; இழைவழியில் மழைவர நனைதலும் உண்டாம்; அப்பொழுது நும் இசைக்கருவிகள் மழையால் நனைவுறா வண்ணம், கிணறுகள்போலும் நீண்ட குகைகளுட் புக்குத் தங்கிச் செல்வீராக! குழிகள் நிறைந்து வழிநடத்தற்கு இயலாமை உற்றவிடத்தே, நும் இசைக்கருவிகளைக் காவிச் செல்லும் தண்டுகளை ஊன்றுகோலாகக்கொண்டு ஊன்றி ஊன்றிக் கழிவீராக! வெயில் தாங்கமாட்டா வெப்பம் உடையதாயின், ஞாயிறு வெப்பம் தணிந்து மேற்கே தாழ்ந்த அந்திப்போதில் ஆறு செல்வீராக! கொடிகள் பல ஒன்றோடொன்று பின்னிக்கிடக்கும் சிறு காட்டு வழியே செல்லும்பொழுது, முன்னே போவார், தம் முகத் தில் அடிக்காவாறு வாங்கிவிட்ட வலிய கொடிகள், விடப் பெற்றால் நுங்கள் இசைக்கருவிகளைத் தாக்கிப் பாழாக்கா வண்ணம், அக்கொடிகளை ஒருவர்பின் ஒருவராகப் பிடித்து விட்டுச் செல்லுவீராக! அவ்வாறு செல்லும் நீங்கள், இடையிடையே கவர்த்த வழிகளைக் கடக்குந்தோறும், பின்வருவாரும் நுங்களைப்போன்றே மயங்காவாறு, அவர்க் குச் செல்லும்வழி அறிவிக்க ஆங்காங்குள்ள ஊகம்புற் களை அடையாளமாக முடிந்திட்டுச் செல்வீராக! இவ்வாறு

செல்கின்ற நீவிர், சேயாற்றைக் கண்டதும், அதன் ஒரு கரையையே பற்றிச் செல்வீராயின், அண்மையில் அவன் மூதூராம் செங்கண்மாவினைச் சென்று அடைவீர்," எனக் கூறும் புலவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் எத்துணைச் சிறந்த வழிகாட்டியாக விளங்கினார் என்பதை நோக்குக!

மலையும், காடும் மண்டிக்கிடக்கும் குறிஞ்சிநிலத்தே உண்டாம் பல்வேறு ஒலிகளை, ஓரிடத்தே வகைப்படுத்திக் கூறியுள்ளார் புலவர். கூத்தர் கொண்டுசெல்லும் இசைக் கருவிகளினின்றும் எழும் இன்னிசைபோலும் அருவி யொலி ஒருபால்; யானையைப் பிடிப்பார் எழுப்பும் பேரொலி ஒருபால்; எய்ப்பன்றியால் தாக்குண்ட கானவர் எழுப்பும் அழுகையொலி ஒருபால்; தம் கணவர் மார்பில் புலி பாய்ந்து தாக்கிய புண்ணைப் பாடிப்போக்கும் கொடிச்சியர் பாடல்ஒலி ஒருபால்; வேங்கைமலர் கொய்யும் மகளிர் எழுப்பும் புலிபுலிப்பூசல் ஒருபால்; சூலுற்ற தனக்கு வேண்டும் தழை தேடிச்சென்ற தன் களிற்றினைப் புலி தாக்கக் கண்டு அப்பிடி, அக் காட்டுவாழ் யானைகளோடுங்கூடி எழுப்பும் கூப்பீட்டொலி ஒருபால்; கிளைக்குக் கிளைத் தாவுங்கால், தன் குட்டி பிடிதளர்ந்து, ஆழ்ந்த முழையிலே வீழ்ந்திறப்பக் கண்ட மந்தி, தன் இனத்தோடும் கூடி எழுப்பும் இரங்கற் பேரொலி ஒருபால்; குரங்கும் ஏறமாட்டாக் குன்றின் உச்சியில் உள்ள தேனிறாலை ஏணிகொண்டு ஏறிப்பெற்ற கானவர் வெற்றிக் களிப்பால் எழுப்பும் ஆரவாரம் ஒருபால்; அழித்தற்கரிய பகைவர்தம் அரண்களை அழித்துப் பெரும்பொருள் கொணர்ந்த கானவர், களிப்பு மிகுதியால் எழுப்பும் ஆரவாரம் ஒருபால்; குறக்குல மகளிர் ஆடும் குரவைக்கூத்திடை எழும் ஆரவாரம் ஒருபால்; கல்மீதும், கற்பாறைகள்மீதும் ஓடிவரும் ஆறுகள், மலை முழைஞ்சுகளில் வீழ்வதால் எழும் இடையறாப் பேரொலி ஒருபால்; யானையைப் பழக்கும் பாகர், "அப்புது அப்புது; ஆது ஆது; ஐ ஐ," என்பன போன்ற மொழிகளைக் கற்றுத் தருங்கால் எழும் ஆரவாரம்

ஒருபால்; புனந்தொறும் கிளிகடிந்து நிற்கும் மகளிர் தட்டைகளைப் புடைப்பதால் எழும் பேரொலி ஒருபால்; முல்லைநிலக் கோவலரும், குறிஞ்சிநிலக் குறவரும் ஆனேற்றையும், மரையானின் ஏற்றையும் பொரவிட்டு, வெற்றி கண்டு எழுப்பும் ஆரவாரம் ஒருபால்; எருமைகள் பல தாமே கூடிப் பொருது எழுப்பும் பேரொலி ஒருபால்; தின்று எஞ்சிய பலாப்பழத்தினின்றும் விதைகளை மட்டும் கொள்ளும் கொள்கையராய், அப் பழங்களைக் கீழிட்டுக் கன்றுகளைப் பிணித்துக் கடாவிடும் குறக்குடிச் சிறுவர்தம் குரலொலி ஒருபால்; கரும்பாலைகளினின்றும் எழும் ஓசை ஒருபால்; தினைகொய்யும் மகளிர் பாடும் வள்ளைப் பாட்டு ஒருபால்; விதைத்த சேம்பையும், மஞ்சளையும் தோண்டி உண்ணும் பன்றிகள் வாராவாறு எழுப்பும் பறையொலி ஒருபால்; ஈண்டுக் கூறிய இவ்வொலிகளை எல்லாம் எதிரொலித்து எழும் மலைகளின் பேரொலி ஒருபால் என்று ஈண்டு எடுத்துக்காட்டிய இவ்வொலிகள் எல்லாம், குறிஞ்சி நிலத்திற்குக் குன்றாச் சிறப்பளித்து நிற்றல் காண்க.

இவ்வாறு இடைவழியில் எழும் பேரொலிகள் இவை இவை என எடுத்துக்கூறிய புலவர், அவ்வழிச் செல்வார், ஆண்டாண்டுப் பெறும் உணவுகள் இவை இவை எனக் கூறுமுகத்தான், கானவர், இடையர், வேடர் முதலாயினோர் தம் விருந்தோம்பும் பண்புகளை விரித்துணர்த்தியுள்ளார்.

காட்டு மக்கள் கொடியராவர் என்றே எவரும் எண்ணியிருப்பர்; ஆனால், நம் புலவர் கூறுகிறார் அவர் அத்தன்மையரல்லர்; அவர்கள் அவ் வழிவரும் புதியராயினோர்க்கு இடையூறு ஒன்றும் விளைக்காது, அவர்கள் அவ்விடங்களை இனிதே கழிய இனிய துணைவராவர் என்றும், "கானவர் இடுக்கண் செய்யாது இயங்குநர் இயக்கும் அடுக்கல்," (17—19), வழிச்செல்வார் கானவர்தம் சிறுகுடியில் தங்கின், தேனும், கிழங்கும், தெவிட்டா ஊனும் உடன் வருவாரெல்லாம் அருந்தப்பெறுவர் என்றும், "தேனினர், கிழங்கினர், ஊனார் வட்டியர்........கானவர் செழும்பல்

யாணர்ச் சிறுகுடிப் படினே, இரும்பே ரொக்கலொடு பதம் மிகப் பெறுகுவிர்,'' (152—157) என்றும் கூறுகிறார். மலையைச் சேர்ந்த சிற்றூர்களை அடைந்தக்கால், ஆண்டுறை குறவர்பால், யாம் நன்னனை நாடிச்செல்லும் பரிசிலர் எனக் கூறின் அவர்கள், வருவார் வேறு; தாம் வேறு என எண்ணார்; தமரேபோல் மதித்துத் தம்மால் ஆவன எல்லாம் அளித்து அகமகிழ்வர்; ஆண்டுச் செல்லும் நீவிர், அவர் இல்லங்களுள், நும் இல்லங்களுள் நுழைவதே போல் நில்லாது நுழைதலும்கூடும்; அவ் வில்லுறை பொருள்கள் நும் இல்லுறை பொருள்களேபோல் நுமக்கும் உரிமை உடையதாம்; ஆண்டுறை குறவர் குலமகளிர், தம் தம் மக்களை, அண்ணன், அம்மான் என முறை காட்டி நும்பால் அனுப்பி அழைத்து விருந்தேற்றுப் போற்றுவர்; அவர் காட்டும் அன்பில், நன்னனை நாடிச் செல்லும் எண்ணத்தை மறத்தலும் கூடும்; அத்துணை அன்பு காட்டுவர் அவர் எனப் புலவர் கூறுவன நோக்குக:

"சிலம்படைந் திருந்த பாக்கம் எய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்
மான விறல்வேள் வயிரியம் எனினே
நும்மில் போல நில்லாது புக்குக்
கிழவிர் போலக் கேளாது கெழீஇ" (மலைபடு: கசுஉ-சு)

"குறமகள் ஆக்கிய வாலவிழ் வல்சி
அகமலி உவகை ஆர்வமொடு அளைஇ
மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்;
செருச்செய் முன்பின் குருசில் முன்னிய
பரிசில் மறப்ப நீடலும் உரியிர்." (மலைபடு: கஅரு-எ)

இடைவழியில் உள்ள இடையர்வாழ் இல்லங்கட்கு இராக்காலத்தே செல்வீராயின், அவர் அக்காலத்தே உண வாக்கி அளித்தல் இயலாதாகலின், அவர் தமக்கென வைத்திருக்கும் பாலையும், பாற்சோற்றையும் நுமக்கு அளித்து மகிழ்வர் எனப் புலவர் கூறும் இடையர் அன்பு எத்துணைச் சிறந்தது என, எண்ணி நோக்குக! பல் "யாட்டு

இனனின் எல்லினர் புகினே, பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவீர்," இவ்வாறே இப் புலவர்தம் செய்யுள் நலங்களை எடுத்துக் கூறிக்கொண்டே செல்லின் ஏடு விரியும் ஆதலின், இம்மட்டோடு நிறுத்திக்கொண்டு, புலவர் மேற்கொண்ட உவமைகள் சிலவற்றைமட்டும் எடுத்துக் காட்டுகின்றேன்.

மலைபடுகடாம் கூத்தரை ஆற்றுப்படுப்பது; ஈண்டு, கூற்று நிகழ்த்துவோரும், அக்கூற்றினைக் கேட்போரும் கூத்தரே ஆதலின் புலவர் தாம் காட்டும் உவமைகள் எல்லாம் அக்கூத்தர் அறிந்தனவாகவே இருத்தல் வேண்டும் என எண்ணி அமைத்துள்ளார். ஆந்தைகள் எழுப்பும் குரலொலி, விரல்தீண்டி எழுப்பும் சிறுபறை ஒலி போலும்; "விரலூன்று படுகண் ஆகுளி கடுப்பக், குடிஞை இரட்டும்" (140-141). ஆலமரத்தே கூடி இருக்கும் பறவைக்கூட்டம் எழுப்பும் பேரொலி, பல இசைக்கருவிகள் ஒன்றுகூடி எழுப்பும் ஒலிபோலும்; "கோளி ஆலத்துக், கூடு இயத்தன்ன குரல் புணர்புள்" (268-269). அருவியில் ஆடும் மகளிர் எழுப்பும் ஓசை, தாளம் தெரிய எழும் நுங்கள் இசைக்கருவிகளின் இன்னோசை போலும்; "அருவி நுகரும் வானரமகளிர், வருவிசை தவிராது வாங்குபு குடைதொறும், தெரியிமிழ் கொண்டநும் இயம்போல் இன்னிசை" (294-96) கிளைகளில் கீழும் மேலுமாகக் காய்த்துத் தொங்கும் பலாக்கனிகள், கூத்தர்தம் மத்தளங்களைப் போலும்; "சுரஞ்செல் கோடியர் முழவில் தூங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின அலங்குசினைப் பலவே" (143-144). முழவுபோலும் காட்டுப் பலாப்பழம்; "கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்" (511). வரால் மீன்துண்டு, துடியின் கண்போலும்; "வரா அல் துடிக்கண் அன்ன குறை" (457-8) நுகரப்படும் பொருள்கள் ஒன்றையொன்று ஒவ்வா இனிமை வாய்ந்திருத்தல், இனிய பண்கள் பலவும் ஒன்றையொன்று ஒவ்வா இனிமை வாய்ந்திருத்தல் போலும்; "நல்லியாழ்ப், பண்ணுப் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்...........நன்பல உடைத்து" (450-453). காட்டு வழியில் மூங்கிலில் ஏறி விளையாடும் குரங்குகள், கூத்தர்

தம் மக்கள்போலும்; "கரும்பறைக் கோடியர் மகாஅர் அன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவன் உகளினும்" (236-7) எனக்கூறும் உவமைகளைக் காண்க. இசைகளையும் இசைக்கருவிகளையும் உவமைகளாக மேற்கொள்ளும் வழக்கத்தைப் புலவர் மலைபடு கடாத்தோடு நிறுத்திக்கொண்டாரல்லர்; இம்முறையினை நற்றிணையிலும் நன்கு கையாண்டுள்ளார்; இடி ஒலி, முழவின் ஒலிபோலும்; மழை பெய்யுங் கால் எழும் ஒலி, படுமலை என்ற பண்ஒலி போலும் என ஆண்டுக் கூறுவதும் அறிக; "எழிலி! படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு எழீஇயன்ன உறையினை; முழவின் மண்ணார் கண்ணின் இம்மெனு இமிரும்" (நற். 139). தன் ஊர் மழைபெற்று மாண்புற்றதேபோல், உலகத்து ஊர்கள் எல்லாம் அது பெற்றுச் சிறக்கவேண்டிய ஒரு தலைவனையும், "உலகிற்கு ஆணியாகப் பலர்தொழப் பலவயின் நிலைஇய குன்றின் கோடுதோறு ஏயினை உரைஇயரோ பெருங் கலி எழிலி!" (நற். கநக). இராக்காலத்தே மின்மினிப் பூச்சியின் துணைகொண்டு, மேகங்களின் நிலையறியும் குறவர்களையும், "மின்மினி விளக்கத்துச் சென்மழை இயக்கம் காணும் நன்மலை நாடன்" (நற். சச). என நமக்கு அறிமுகம் ஆக்குகிறார் புலவர் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்.

## கஉ. இருந்தையூர்க் கொற்றன் புலவனார்

இருந்தையூர், இடைச்சங்க காலத்திலிருந்தே புலவர் பெருமக்களின் வாழ்விடமாக விளங்கி வந்துளது; கருங் கோழி மோசியார் என்ற புலவர், இடைச்சங்க காலத்தே ஆண்டு வாழ்ந்திருந்தார் எனச் சிலப்பதிகார உரையால் உணர்கின்றோம். தென்னார்க்காடு மாவட்டம் திருக்கோவ லூரை யடுத்து, இருந்தை என்றோர் ஊர் உளது; இவ் விருந்தையூர், அதுவாக இருத்தல்கூடும் என்பர் சிலர்; இனி, கொற்றன் புலவனார் பாடிய பாட்டின் இறுதி, "இருந்த ஊர்" என முடிகிறது; அச்சொல்லையே அவர் பெயர்முன் இட்டு வழங்கினரோ எனவும் சிலர் எண்ணுவர்.

மகளிர், மலைப்பாறைகளில் தினையைப் பரப்பிக் காத்துக் கிடக்க, அத்தினையுண்ண விரும்பும் மந்தி அது மாட்டாமையால் வருந்தி இருந்து, அம்மகளிர், காவலைச் சிறிது மறந்து சுனை ஆடலைக் கண்டு, தன் குட்டிகளோடும் விரைந்து சென்று வேண்டுமளவுங் கவர்ந்து உண்டு களிக் கும் அழகிய காட்சியை நன்கு காட்டினார் புலவர்:

> "நிரைவளை முன்கை நேரிழை மகளிர்
> இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்
> சுனைபாய் சோர்விடை நோக்கிச் சினையிழிந்து,
> பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்." (குறுந்: ௩௩௫)

வரையாது வந்தொழுகும் தலைமகன்பால், தலைமகள் இற்செறிக்கப்பட்டாள்; அவள் வீடு, மலைகளின் இடையே இருப்பது: ஆகவே, அடைதற்கருமையுடையது; மேலும் அவள் அண்ணன்மார் வன்கண்ணராவர்; ஏதம் உண்டாம். ஆகவே, வரைந்து கொள்வாயாக எனத் தோழி கூறுவா ளாகப் பாடியுள்ளார் புலவர்.

> "வெற்பிடை நண்ணியதுவே; வார்கோல்
> வல்வில் கானவர் தங்கைப்
> பெருந்தோள் கொடிச்சி இருந்த ஊரே."
>
> (குறுந்: ௩௩௫)

## கந. இளம்புல்லூர்க் காவிதி

பாண்டிநாட்டு, உழுவித்து உண்ணும் வேளாளர்க்குக் காவிதிப் பட்டம் உண்டு ஆதலின், இவர் அப்பாண்டி நாட்டினராவர் என்று கொள்ளுதல் கூடும். இவர் பிறந்த ஊர் புல்லூர் என்னும் பெயர் உடைத்து; அதற்கு முன் வரும் இளம் என்ற அடை, புலவரின் இளமையினைக் குறிப்பது என்று கொள்வதா? இளம்புல்லூர் என்பதே அவர் பிறந்த ஊரின் பெயராம் என்று கொள்வதா? என் பதைத் துணிந்து கூறுதற்கு இல்லை. இவர் பாடிய முல்லைத் திணைப் பாட்டொன்று நற்றிணைக்கண் இடம்பெற்றுளது.

கார்காலத்தே கீழ்க்காற்று அடிக்கும்; அக்காற்று உந்துவதால் விண்ணில் இயங்கும் முகில்கள், கடலின் அலையால் எழும் நீர்த்துளிகளைப்போல், மலையுச்சிகளைச் சூழ்ந்துநின்று பெருமழை பெய்யும்; அம்மழைநாளை அடுத்துப் பனிப்பருவம் வரும்; அக்காலத்தே வீசும் வாடைக்காற்றுக் கடுங்குளிர் உண்மையால், உயிர்கள் எல்லாம் வருந்தும்; வாடையின் கொடுமையால் உழுந்தின் இலைகளெல்லாம் உதிர்ந்துபோம்; அவ்வுழுந்தின் காய்களைச் சூழ மயிர்கள் அடர்ந்து காணப்படும் என்றெல்லாம் கூறும் பருவங்களின் இயல்பும், செடி கொடிகளின் அமைப்பும் செம்மையுற அறிந்திருத்தல், அவர் அறிவின் திறத்தினை அறிவிப்பனவாதல் காண்க.

> "கொண்டல் ஆற்றி, விண்தலைச் செறீஇயர்
> திரைப்பிதிர் கடுப்ப முகடுஉகந்து ஏறி
> நிரைத்து நிரைகொண்ட கமஞ்சூல் மாமழை
> அழிதுளி கழிப்பிய அழிபெயல் கடைநாள்
> இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்
> அகல்இலை அகலவீசி, அகலாது
> அல்கலும் அலைக்கும் நல்கா வாடை."      (நற் : அகூ)

# கச. இறங்குகுடிக் குன்றநாடன்

ஆலங்குடி, கள்ளிக்குடி, வேள்விக்குடி என்பனபோல இறங்குகுடி என்பதும் ஓர் ஊர்ப் பெயராம்; அவ்வூர், குன்றுகள் நிறைந்த நாட்டினகத்தே உளது; அவ் வூரிற் பிறந்தவர் இவர்; இவர் இயற்பெயர் தெரிந்திலது.

தமிழர்கள், தங்கள் நாட்டை அடுத்துள்ள பிறமொழி வழங்கும் நாடுகளைக் கைப்பற்றும் கருத்தினராய்ப் படையொடு செல்வர் என்றும், அவ்வாறு போர் நோக்கிப் போகும் தம் கணவன்மாரை, வெற்றிபெற்று விரைந்திவண் வருக என வாழ்த்தல் மகளிர் மாண்பாம் என்றும் இவர் கூறுவது பழந் தமிழ்நாட்டு நிலையினை அறிய விரும்புவார்க்குத் துணைபுரியும். பழைய தமிழகத்துப் பெருவழிகளில் வாழும் ஆறலைகள்வர், வளைந்த வில்லையும், கூரிதாக வடித்த அம்புகளையும் உடையவர்; கொடுமையிற் சிறிதும் குறையுடையரல்லர்; அவர் தாம் ஏவிய அம்பு குறிபிழைப்பக் காணின், அவ் வம்பேவிய தம் கைவிரலை வாயாற் கவ்விக் கொள்ளும் இயல்பினராவர் என்று கூறுவதும் அக்கால நிலையினை அறிவித்தல் காண்க.

> "விலங்கிரும் சிமையக் குன்றத்து உம்பர்
> வேறுபன் மொழிய தேஎம் முன்னி,
> வினைநசைஇப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு
> புனைமாண் எஃகம் வலவயின் ஏந்திச்
> செலல் மாண்புற்ற நும்வயின் 'வல்லே
> வலனாகு' என்றலும் நன்று;.........
> கடுத்தது பிழைக்குவ தாயின், தொடுத்த
> கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சிக்
> கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
> வடிநவில் அம்பின் ஏவ லாடவர்." (அகம்: உகரு)

## ௬௫. உம்பற்காட்டு இளங்கண்ணனார்

உம்பற்காடு, வேழக்காடு என்னும் பொருளுடைய தாம்; வேழக்காடு என்ற பெயருடையதோர் நாடு, சேர நாட்டைச் சேர்ந்த கடன்மலை நாட்டுள் உளது. இது ஐந்நூறு சிற்றூர்களைக்கொண்ட சிறந்த நாடு; இமய வரம்பன் நெடுஞ் சேரலாதன், தன்னைப் பாடிய புலவர் குமட்டூர்க் கண்ணனார்க்கு பிரமதாயமாகக் கொடுக்கப் பெற்ற சிறப்புடையது இவ் வும்பற் காடு. இமயவரம்பன் தம்பி, பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பான் இதன் சிறப்பறிந்தே, அந் நாட்டில் தன் ஆட்சி நிலவச்செய்து பெருமையுற்றான் எனப் பதிற்றுப்பத்தின் மூன்றாம்பத்துப் பதிகம் கூறும். இவ் வும்பற் காட்டினின்றும் வரும் வரியாம் பெரும் பொருளைத் தன்னைப் பாடிய புலவர் பாணருக்குப் பரிசாக அளித்தான் சேரன் செங்குட்டுவன் எனின், இதன் சிறப்பினை மேலும் கூறுதல் வேண்டா. அவ்வூரிற் பிறந்த பெருமையுடையார் நம் புலவர் இளங் கண்ணனார்.

உடன் இருந்து ஒருங்கு வாழவேண்டிய இக் கூதிர்க் காலத்தே, தனித்திருந்து துயர் உறும் நம்மைப்பற்றிக் கவலை கொள்ளாராயினும், பிரிவுத்துயர் பொறாது நாம் இறந்தால், நாம் இறந்தபின்னர் தாம் வாழல் ஆற்றாத் தம் நிலைகுறித்தும் தலைவர் கவலை கொண்டிலர்போலும் எனக் கூறினாள் ஒரு தலைவி எனப் பாடிய பாட்டொன்று, அக நானூற்றில் உளது. பசிய இலைகள் தழைத்த முசுண்டை வெண்ணிறமலர்கள் மலர்ந்து தோன்றும் காட்சி, முகிலால் மறைப்புணல் இன்றி விளங்கிய நீலவானத்தில் மீன்கள் ஒளிவிட்டுத் தோன்றும் காட்சிபோலும் என்ற உவமை அப் பாட்டிற்கு அணிசெய்து விளங்குகிறது :

> "மழையில் வானம் மீனணிந் தன்ன
> குழையமல் முசுண்டை வாலிய மலர." (அகம் : ௨௬௪)

## கசா. உரோடகத்துக் கந்தரத்தனார்

கந்தரத்தனார் பிறந்த இவ்வூர், உரோடோகம், ஊரோடகம், ஒரோடகம், ஒரோடோகம் எனப் பலபடியாகப் பிறழ்ந்து வழங்கப்பெறும் தொண்டைநாட்டில், காஞ்சிபுரத்தை அடுத்துள்ள ஓரகடம் அல்லது உரைகடம் என்ற ஊரே, சங்க காலத்து உரோடகமாம் எனப் புலவர் பலரும் கருதுவர். இவர் பாடிய பாக்கள், நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன்று நூலினும் இடம் பெற்றுள்ளன.

உழவர் காலையில் விதை கொண்டுசென்ற, ஓலையால் முடையப்பெற்ற வட்டிகளை மாலையில் கொணருங்கால், வறிதே கொணராமல், அவை நிறைய மலர்களைப் பறித்துக் கொணர்வர்—"உழவர் விதைக் குறுவட்டி போதொடு பொதுளப் பொழுதோ தான்வந்தன்று"—எனவும் (குறுந்: கருரு) தலைவன் பொருள்வயிற் பிரியுங்கால், தன் மனைக்கண் உள்ள நொச்சியைச் சுற்றிப்படர்ந்த முல்லையைக் காட்டி, இம் முல்லை மலரும் பருவம் வருந்துணையே, யான் ஆண்டிருந்து பொருள் தேடுவேன்; அது மலரத் தொடங்கின் யானும் மீள்வேன் எனக் கூறிச் செல்வன்—"அனையகொல்? வாழி! தோழி! மனைய தாழ்வின் நொச்சி சூழ்வன மலரும் மௌவல் மாச்சினை காட்டி, அவ்வளவு என்றார் ஆண்டுச் செய்பொருளே,"—எனவும் (அகம்: உரு) உப்பு வணிகர், ஊரே ஒருங்கு சென்றாற்போலப் பலர் கூடிச் செல்வர்: செல்லுங்கால் காலிற் செருப்பும், கையிற் கோலும் உடன்கொண்டு செல்வர்; கடத்தற்கரிய நெறிகளையும் எளிதிற் கடக்கும் வலிய எருதுகளை உடையன அவர் வண்டிகள்; அவர் செல்லும் காட்டில், அவர் எருதுகளின் கழுத்திற் கட்டிய மணியோசையும், அவர் எழுப்பும் சீழ்க்கை ஒலியும் கேட்கும்; அக் காட்டு நெறிச் செல்லும் புதியர், காட்டில் ஏதம் இல்லை என அச்சம் நீங்குவர்—"தோல்புதை சிரற்றடிக் கோலுடை உமணர், ஊர்கண்டன்ன ஆரம் வாங்கி, அருஞ்சுரம் இவர்ந்த அசை வில் நோன்தாள், திருந்து பகட்டு இயம்பும் கொடுமணி,

புரிந்தவர் மடிவிடு வீளையொடு கடிது எதிர் ஓடி, ஓமையம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்கு ஏமம் செப்பும்,"— எனவும் (அகம்: கசுக). அவர் கூறும செய்திகள் உணரத் தக்கனவாம்.

தலைவன் ஒருவன் வரைவிடை வைத்துப் பிரிந்தானாக, அவன் சென்ற வழியின் கொடுமையினை எண்ணி எண்ணி வருந்தினாள் ஒரு தலைவி; இதனால் அவள் மேனி வாடி வேறுபாடுற்றது; அவ் வேறுபாடு கண்ட அவ் வூரில்வாழ் பெண்டிருட் சிலர் அவளைப்பற்றிப் பழிகூறலாயினர்; அவர் கூறும பழியுரைகளைக் கேட்டாள் தலைவியின் தாய்; "அந்தோ! அருஞ்சுரம் சென்றோரை எண்ணிப் பெண்டிர் பெருந்துயர் உறுதல் இயல்பு எனக் கொள்ளாது அலர் தூற்றுகின்றனர் இவ் விழிகுணப் பெண்டிர்; இவர் கூறும் பழி உரை, என் மகளைப் பற்றாவாறு, ஏ! கடவுளே! காட்டுட் சென்ற அவனைக் கடிதிற் கொணர்ந்து கவலை தீர்ப்பாயாக என வேண்டி வழிபட்டாள். என்னே அன்னையின் அன்பு! அன்புநிறை இவ் அன்னையை, அவர் பாட்டின் துணைபெற்றுக் கண்டு போற்றிப் பணிவோமாக!

"சுரம்பல கடந்தோர்க்கு இரங்குப என்னார்,
கௌவை மேவல ராகி, இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரைய அல்ல என்மகட்கு எனப் பரைஇ
நம் முணர்ந்து ஆறிய கொள்கை
அன்னை." (அகம் : கரு)

## கஎ. உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்

உவர்க் கண்ணூர் எனும் ஊரிற் பிறந்த புல்லன் அல்லது புலவன் என்பாரின் மகனார்; கீரனார் எனும் பெயருடையார் என்பதல்லது இவர் வரலாறு குறித்துப் பிற எதையும் உரைத்தற்கில்லை. இவர் பிறந்த உவர்க் கண்ணூர் யாண்டுளது என்பது குறித்தும் ஏதும் தெரிந்திலது. இவர் பாடிய மருதத்திணைப் பாட்டொன்று மணிமிடை பவளத்துள் வந்துளது.

வலிமிக்க திண்மையும், தலைமையும்கொண்ட எருமைக் கடாக்கள், மலர் பல மலர்ந்து தோன்றும் பொய்கைகளில் பகலெல்லாம் படிந்திருந்து, மடமையும் மாண்பும் கொண்ட நாகுகளோடு நடந்துசென்று தோட்டங்களில் மேய்ந்துவிட்டுக் கடைசியாக வயல்களில் வந்து தங்கும் வளத்தாற் சிறந்தன தமிழ்நாட்டு ஊர்கள்; அவ்வூர்களில் வாழும் மக்கள், மணி ஒலிக்கும் மாண்வினைத் தேரேறிச் செல்லும் செல்வ வாழ்வுடையர்; அந் நாட்டு மகளிர் ஒள்ளிய இழைபல அணிந்தவர்; ஆயினும், மகிழ்தற்குரிய மணாளரைப் பிரிந்து வாழுங்கால், தம் தாய் ஓம்பி வளர்த்த தம் உடல் அழகையும் விரும்பா மனநலம் உடையவர், என்றெல்லாம் கூறும் புலவர் பாடலால் பழந்தமிழ் நாட்டின் பண்பு நன்கு விளங்குதல் காண்க.

> "வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு,
> பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி,
> மடக்கண் எருமை மாண்நாகு தழீஇப்
> படப்பை நண்ணிப் பழனத்து அல்கும்
> கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்
> ஒள்ளிழை மகளிர்சேரி..................
> தாய்ஓம்பு ஆய்நலம் வேண்டா தோளே."
>
> (அகம்: கசசு)

## ௧௮. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

சோழர்களுள் ஒரு சாராரின் தலைநகராக விளங்கிய உறையூர், 'அறம் துஞ்சு உறந்தை' என்ற புகழுடைமையோடு, புலவர் பலரின் வாழ்விடமாம் புகழும் உடையது; ஏணிச்சேரி முடமோசியாரேயன்றி, இளம் பொன்வணிகனார், கதுவாய்ச் சாத்தன், சல்லியன் குமரன், சிறுகந்தன், பல்காயன், மருத்துவன் தாமோதரன், முடவன், முதுகண்ணன் சாத்தன், முதுகூத்தன், முதுகொற்றன் போன்ற பத்துப் பெரும்புலவர்கள் பிறந்து வாழ்ந்துள்ளனர் அவ்வுறையூரில். இவ்வாறு புலவராற் பொலிவுற்ற பேரூரில், அவ்வூரின் ஒருபகுதியாகிய ஏணிச்சேரியில் பிறந்தவராவர்; இவர் பெயர் மோசியார், மோசி என்றே வழங்கப்பெறும்; இவர் பெயர்க்கு முன்வரும் முடம் இவர் உறுப்புநலம் உணர்த்த வந்ததுபோலும். இவர் அந்தணர்; இது, "ஊரும், பெயரும்" என்ற தொல்காப்பியம் மரபியற் சூத்திரத்திற்குப் (74) பேராசிரியர் எழுதிய உரைக்கண், "உறையூர் ஏணிச்சேரி முடமோசி....அந்தணர்க்குரியன" என எழுதியிருப்பதால் உணரலாகும். முடமோசியார், புலவர் பாராட்டும் புலமை வாய்ந்தவராவர்; இவராற் பாடப்பெறுதல் அரசர்க்குப் பெரும்புகழாம்; குமணனைப் பாடிய புலவர் பெருஞ்சித்திரனார், தாம் பாடிய அப்பாட்டில் ஆயின் பெருமையினைப் பாராட்டுங்கால், அவன் மோசியால் பாடப்பெற்றவன் என்று கூறியதோடு, இவரைத் "திருந்துமொழி மோசி" என்றும் கூறிச் சிறப்பித்தார் எனின், மோசியாரின் பெருமையினைப் பகருதற் கியலுமோ?

ஏணிச்சேரி முடமோசியார், சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி என்ற சோழவேந்தன்பால் அன்பும், சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை என்ற சேர வேந்தன்பால் நட்பும் உடையவராவர். முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, அந்துவஞ்சேரல் இரும்பொறையோடு பகைகொண்டு, அவன் கருவூரை முற்றியிருந்தான்; ஒரு

நாள் புலவர் முடமோசியார், சேரமானோடு, வேண் மாடத்து வீற்றிருந்தார். அக்காலை, அக்கருவூர்த் தெரு வழியே களிறு ஒன்று மதம்பட்டு, திங்களைச் சூழ்ந்த விண்மீன்போல் வீரர் பலர் சூழ்ந்துநின்று அடக்கவும் அடங்காது, கடலைக் கிழித்தோடும் நாவாய்போல், வீரர் திரளினின்றும் பிரண்டு ஓடுவதையும், அவ் யானைமீது வீரன் ஒருவன் வீற்றிருப்பதையும், அந்துவஞ்சேரல் கண் டான். உடனே புலவர்க்கு அக்காட்சியைக் காட்டி, அவன் யார் என வினவினான். அவர், அவ் யானைமீது ஊர்ந்துசெல்வோன், முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி என்பதை அறிந்தவராதலின், அவனை இன்னான் என அவனுக்கு அறிவித்ததோடு அமையாது, பகைவர் நாட் டகத்தே வாழ்வுழி, மதம்பட்ட களிற்றின்மீது ஊர்ந்து நிற்றல் கேடுதரும் செயலாம் ஆதலின், அவன் நோயின்றிப் பெயர்வானாக என வேண்டி நிற்பாராயினர்; இந்நிகழ்ச்சி யினை அவர் பாடிய புறநானூற்றுப் பாட்டொன்று விளங்க உரைத்துளது.

புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரால் பெரிதும் பாராட்டப்பெற்றவன், ஆய் அண்டிரனாவன்; ஆயை, முடமோசியாரேயல்லாமல், உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார், காரிக்கண்ணனார், குட்டுவன்கீரனார், துறையூர் ஓடைகிழார், பரணர், பெருஞ்சித்திரனார், இடைக் கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் போன்ற புலவர்களும் பாடியுள்ளனரெனின், இவன் பெருமையினை எடுத்துக் கூறவும் ஒண்ணுமோ! ஆஅய் கடையெழுவள்ளல்களுள் ஒருவன்; தமிழக மலைகளுள் தலைசிறந்ததாய பொதிய மலைக்குரியவன்; பொதியமலைச்சாரலைச் சார்ந்த ஆய்குடி அவன் அரசிருக்கை; இவன் அண்டிரன் எனவும் அழைக் கப்பெறுவன்; அண்டிரன் என்பது ஆந்திரன் என்னும் தெலுங்குச் சொல்லின் திரிபாம் எனக்கொண்டு, இவன் தெலுங்கு நாட்டினன்; அகத்திய முனிவர், தமிழ்நாடு போந்தகாலை உடன்கொணர்ந்த பதினெண்குடி வேளிருள் ஒருவன் என்றெல்லாம் கூறுவர்; ஆயின் வள்ளல் தன்மை

யினை வியந்து பாராட்ட, ஆய், தனக்கு நாகம் நல்கிய நல்லாடை ஒன்றை ஆலமர் நீலகண்டனுக்கு அளித்து மகிழ்ந்தான் என்ற ஒரு கதையினை அக்கால மக்கள் கட்டி விட்டிருந்தனர்.

ஆயைப் பாடிய புலவர் அனைவரும் அவன் கொடைச் சிறப்பினையே பாடிப் பாராட்டியுள்ளனர். ஆய், தன்னைப் பாடிவரும் பாணர், பொருநர், புலவர் முதலாயினோர்க்கு யானை பல அளித்து மகிழும் இயல்புடையன்; அவன் அளிக்கும் யானைப் பரிசிலைக்கண்ட புலவர் முடமோசியார், "ஆய்! நீ பாடிவருநர்க்குப் பரிசாக அளிக்கும் யானைகள் எண்ணில் அடங்கா; இவ்வாறு வருவார்க்கெல்லாம் யானைகளையே அளிக்கவல்லனுமாறு, நின்நாட்டுப் பெண்யானைகள் ஒருமுறை கருவுற்றவழிப் பத்துக்கன்றுகளைப் பெற்றெடுக்குமோ?" என்றும்,

> "விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய்! நின்னாட்டு
> இளம்பிடி ஒருசூல் பத்தீ னும்மோ?" (புறம்: 130)

யானைகள் நிறைந்துள்ள காடொன்றைக் கண்டு, "இக்காடு இவ்வாறு யானைகளை மிகப்பலவாகக் கொண்டுவிளங்க, ஆயைப் பாடிப் பரிசில்பெறும் இரவலரைப்போன்று, இக் காடும் அவனைப்பாடி யானைப்பரிசில் பெற்றுளதுபோலும்!" என்றும்,

> "அண்டிரன்
> குன்றம் பாடின கொல்லோ?
> களிறுமிக வுடைய இக்கவின்பெறு காடே."
> (புறம்: 131)

ஆய், பரிசாக அளித்த யானைகளின் எண்ணிக்கையோடு வானத்துமீனின் எண்ணற்றொகையினை ஒருங்குவைத்துக் காணல் இயலாது. வானத்து மீனினும் அவன் அளித்த யானைகள் அதிகமாம்; விண்மீன்கள் வானத்தின் இடை யிடையே வெற்றிடம் தோன்ற விளங்குவதைப்போலன்றி, வானிடமெல்லாம் வெண்ணிறமே தோன்றுமாறு, வான் முழுதும் தோன்றின், அக்காலை அவற்றின் எண்ணிக்கை

அவன் அளித்த யானைகளின் எண்ணிக்கையோடு ஒரு வாறு ஒத்துநிற்கும் என்றும் பாராட்டி மகிழ்ந்துளார்.

> "ஆஅய் அண்டிரன் அடுபோர் அண்ணல்,
> இரவலர்க் கீத்த யானையிற், கரவின்று
> வானம் மீன்பல பூப்பின் ஆனாது;
> ஒருவழிக் கருவழி யின்றிப்
> பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே."
>
> (புறம் : கஉகூ)

ஆயின் யானைக் கொடையினைச் சிறப்பித்துப் பாடிய புலவர், அவன் பாணர் முதலாயினரைத் தன்னின் வேறாகக் கருதானாய்த், தன் பொருளெல்லாம் அவர் பொருளே எனக் கருதும் இனிய உள்ளமுடையனும் பண்பினைப் பாணர், பொருநர், கூத்தர் முதலாயினோர், அவன் யானை, குதிரை, தேர் ஆய இவற்றையேயன்றி, அவன் பொருள் எதையாயினும், தம்முடையது என்று வளைத்துக்கொள் வாராயின், அவன் அப்பொருளை 'எமது' எனக் கவர்ந்து கொள்வானல்லன்; அவர் வளைத்துக்கொண்டனவற்றை அவர்க்கே அளித்து மகிழும் மாண்புடையனவன் என்று பாராட்டியுள்ளார் :

> "களிறு மன்றே, மாவு மன்றே,
> ஒளிறுபடைப் புரவிய தேரு மன்றே
> பாணர் பாடுநர் பரிசிலர் ஆங்கவர்
> தமதெனத் தொடுக்குவ ராயின், எமதெனப்
> பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயம்." (புறம்: கநடு)

ஆயின் கொடைப்புகழை எத்துணைதான் புகழினும், அவர் உள்ளம் அமைதியுற்றிலது; உடனே அவன் கொடைச்சிறப்பினையும், கொடாதே சேர்த்துவைக்கும் செல்வர்தம் சிறுமையினையும் ஒருங்கே கூறி அவன் இறப்ப உயர்ந்தானாதலைக் கண்டு மகிழ விரும்பிற்று புலவர் உள்ளம்; "உண்டற்கினிய அறுசுவையோடுகூடிய உண வினைப் பிறர்க்கும் அளித்து உண்ண எண்ணாராய்த் தாமே தனித்து உண்டு கொழுத்து உயர்ந்தோரால் உயர்த்திக்

கூறப்பெறும் புகழினைப் பெறுதலின்றிப் பெருஞ் செல்வத்தைச் சேர்த்து வைத்துள்ள செல்வர் தம் சீரிலா மன்றம், தன்னைப் பாடிவந்தார்க்கு வழங்கிவிட்டமையால், கன்றுகள் இல்லாமையால், கானமயில்கள் களித்து ஆடும் கட்டுத் தறிகளையும், அவர்க்கு அணிகளை எல்லாம் அளித்துவிட்டமையால், எடுத்து வழங்கலாகா அணியாகிய மங்கல அணியன்றிப் பிறிதணி எதுவும் இல்லாத அவன் உரிமை மகளிரையும் கொண்டுள்ளமையால் பொலிவிழந்து தோன்றுகிறது எனப் பிறராற் கூறப்பெறும் ஆயின் அரண்மனை முன்றிலொடு நிகருடையதாகாது;" என்று கூறி, கொடுத்து வறியனாய இவனை வாழ்த்தியும், கொடாது கொழுத்தாரைப் பழித்துப் பாடியும் அமைதி காணுவாராயினர்.

> "களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
> பாடின் பனுவல் பாணர் உய்த்தெனக்
> களிறு இலவாகிய புல்லரை நெடுவெளில்
> கான மஞ்ஞை கணனொடு சேப்ப, '
> ஈகை யரிய இழையணி மகளிரொடு
> சாயின்று' என்ப ஆஅய் கோயில்;
> சுவைக்கு இனிதாகிய குய்யுடை அடிசில்
> பிறர்க் கீவின்றித் தம்வயிறு அருத்தி
> உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
> முரைசு கெழுசெல்வர் நகர் போலாதே." (புறம்: ௧௨௭)

ஆயின் கொடைக்குணம் கண்டார் சிலர், ஆய், இப் பிறப்பில் நல்லது செய்யின், மறுபிறப்பில் நல்லன பெற்று வாழலாம் என்ற எண்ணமுடையனாவன்; ஆதலினாலேயே அவன் இவ்வாறு அறம் செய்கின்றான் என்று எண்ணிவிடுவரோ! அதனால், ஆய் புகழிற்கு மாசுண்டாய்விடுமோ? என்று அஞ்சிற்று புலவர் உள்ளம்; "வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை" என்பதேபோல், ஆய் பொருளின்றி வந்தார்க்கே வழங்கும் வள்ளியோனாவன்; அவ்வாறு வழங்கும் இடத்தும், இம்மையில் வழங்கின், மறுமையில் வளமுடன் வாழலாம் என்ற வாணிக உள்ளம்கொண்டு வழங்குவா

னல்லன்; வறியார்க்கு வழங்குவது ஆன்றோர் கண்ட அறவழி ஆதலின் வழங்குகின்றேன் என்றே வழங்கும் வழக்கமுடையனுவன் என அவன் வள்ளன்மையின் வனப்பினை வரைந்துகாட்டி வாழ்த்துவாராயினர்.

> "இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
> அறவிலை வணிகன் ஆய்அலன்; பிறரும்
> சான்றோர் சென்ற நெறியென
> ஆங்குப் பட்டன்று அவன் கைவண்மையே."
>
> (புறம்: கங-ச)

இவ்வாறு கொடைக்குணம் சிறக்க உடையானையே புலவர்கள் பாராட்டுதல் வேண்டும்; அவர்கள் வாழ்வதினுலேயே புலவர்கள் வாழ்கின்றனர்; தாம் வாழத் துணை புரிவாரைப் பாடாது, பிறரைப் பாடித் தம் வாழ்நாளைக் கொன்னே கழியவிடுதல் அறிவுடைமையன்று; அவ்வாறு பாடிப் பாழாவதினும் அவர் அழிதலே நன்றும் என்ற கருத்தினை விளக்க விரும்பிய புலவர், "அவ்வாறே அழிக" எனப் பிறரைக் கூறுவதினும், "அவ்வியல் புடையேனுகிய யான் அழிக" எனத் தம்மேலிட்டுக் கூறியுள்ளார். தாம் வாழ்காலத்தில் வாழ்ந்தார் அனைவருள்ளும், ஆயே கொடையாற் சிறந்தோனுவன்; அவனையே முதற்கண் எண்ணியிருத்தல் வேண்டும்; அவன் புகழையே முதற்கண் கேட்டல் வேண்டும்; அவனையே முதற்கண் பாடியிருத்தல் வேண்டும்; அவ்வாறு அவனைப் பாடாது பிறரைப் பாடுவார் அழிதல் வேண்டும்; முடமோசியார், முன்னர் எண்ணவேண்டிய ஆயைப் பின்னர் எண்ணினுர்; முன்னர்ப் பாடவேண்டிய அவனைப் பின்னர்ப் பாடினுர்; முன்னர் கேட்கவேண்டிய அவன் புகழைப் பின்னர்க் கேட்டார்; இதனுல் வருத்தம் மிகக் கொண்டார்; உடனே " அழிக என் உள்ளம்; அற்று விழுக என் நா; பாழுற்ற கிணறேபோல் தூர்கஎன் செவி" எனத் தம்மைத்தாமே நொந்துகொள்வாராயினர்; ஆயின் புகழினையும், அவனைப் பாடத்தவறிய தம் இழிநிலையினையும் உணர்த்துவார்போல், புலவர்தம் கடமையினை உணர்த்திய முடமோசியாரின் பண்பே பண்பு!

" முன்னாள் ளுவோனைப் பின்னாள்ளி னேனே
ஆழ்கஎன் உள்ளம்; போழ்கஎன் நாவே;
பாழூர்க் கிணற்றின் தூர்கஎன் செவியே." (புறம்: கரு௨)

இவ்வாறு கொடையாற் சிறந்த குன்றென நின்ற ஆய் அண்டிரன் இறந்துவிட்டான்; ஆயின் கொடைப் பெருமை யினை உணர்ந்த புலவர்க்கு, அவன் மறுமையில், இந்திர லோகத்தில், அந்நாட்டு இறைவனும் பிறரும், முரசு முழக்கிப் பேராரவாரம் செய்து, மகளிர்சூழ வந்து வர வேற்கப் பெருமையுறுதல் வேண்டும் என்று விருப்பம் எழுந்தது; விரும்பிய அவர், தம் விருப்பம் நிறைவேறின தாகவே கொண்டார். ஆகவே, அவர் உள்ளம் கண்ட அவ் வரவேற்புக்காட்சி, அழகிய பாவாக வெளிவந்தது.

" திண்டேர் இரவலர்க்கு ஈத்த தண்தார்
அண்டிரன் வரூஉம் என்ன, ஒண்தொடி,
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்
போர்ப்புறு முரசம் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பினானே." (புறம்: ௨சக)

ஆயைப் பாடிய புலவர் பலராயினும், அவன் பெருமை யினை இத்துணைத் தெளிவாகவும், அழகாகவும் பாடியவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஒருவரே ஆதலின் அன்றோ, பெருஞ்சித்திரனார் என்ற புலமைமிக்க பெய ருடைய பெரியார், அவனைத் " திருந்துமொழி மோசிபாடிய ஆய்" எனப் பாடி, பாடிய புலவர் பெருமையும், பாடப் பெற்ற அவன் பெருமையும் ஒருங்கே தோன்றப் பாராட்டு வாராயினர்!

## கக. உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்

இவர் உறையூரிற் பிறந்தவர்; சாத்தனார் எனும் பெயர் உடையார். இவர் பெயர்க்கு முன்வரும் கதுவாய் என்ற சொல் முரிந்தவாய் எனப் பொருள்படும்; அச்சொல் இவர் பெயர்க்குமுன் ஏன் வழங்கப்பெறுகிறது என்பதை அறிந்து கூறுதற்கு இயலவில்லை. இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் வந்துளது.

மக்கட் பிறப்பால் அக்குடி விளங்கும், வளரும் என்று கூறுகிறார்; ஒரு பெண் மகவு ஈனும் காலத்தே அவள் சுற்றத்தாரெல்லாம் ஆண்டுக் கூடியிருப்பர்; அவளுக்கும் அவள் ஈன்ற மகவிற்கும் தீங்குண்டாகாவண்ணம் வெண் சிறுகடுகை வீடுமுற்றும் பூசிவைப்பர் என்றும் அவர் அறிவித்துள்ளார்; மகவீன்று மாண்புற்றுக் கிடப்பாளை, அவள் கிடக்கும் பாயல் அருகே சென்று, "மகவீன்ற மாண்பினால், மங்கை, மடந்தைபோலும் பெயர்கள் மறைய அரிவை தெரிவைபோலும் புதுப்பெயர் பெற்றனை; அதுவேயுமன்றி மூதறிவுற்ற முதுபெரும் பெண்டாம் பெருநிலையும் உற்றனை" என்று கணவன் பாராட்ட, அவன் பாராட்டுரை கேட்டு உள்ளம் மகிழ்ந்த அவள் சிறிதே முறுவல் தோன்ற அவனைப் பார்த்து, நாணத்தால் மேலும் காணமாட்டாளாய்த் கைகளால் கண்புதைப்பாள் அவள் எனப் புலவர் கூறுவது, கணவன் மனைவியின் களிப்புமிகு வாழ்க்கையினை விளங்கத் துணைபுரிதல் காண்க.

"நெரிமை, கடும்புஉடைக் கடுஞ்சூல் நம்குடிக்கு உதவி
நெய்யோ டிமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோள் குறுகிப்
புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து......
முதுபெண் டாகித்
துஞ்சுதியோ மெல்அஞ்சில் ஓதிஎன
.....................................
முகைநாண் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் புதைத்து வந்ததுவே."

(நற்: ௩௭௦)

## உ௦. உறையூர்ச் சல்லியன் குமரன்

உறையூர்ப் புலவர்ப் பேரவையுள் சல்லியன் குமரனாரும் ஒருவர். ஓர் ஆண்மகன், தன் மனைவியைப் பிரிந்து, பரத்தையரொழுக்கம் மேற்கொண்டு வாழ்வதினும் கொடிய துன்பத்தைத் தன் மனைவிக்குத் தருதல் இயலாது; பெண்டிர், தம் கணவர் எத்துணைக் கொடிய துன்பத்தைச் செய்யினும் பொறுப்பர்; ஆனால் அவர் பரத்தை வீடு புகுகின்றார் என அறியின் மாளாத் துயர் உறுவர்; மகளிர் அத்தகைய கொடுந்துன்பம் உற்றவிடத்தும், தம் கணவரை வெறுத்தலின்றி விரும்பி அவரோடு கூடி வாழ்தல்வேண்டும் என்று கூறுகிறது இவ்வுலகம்; இவ்வுலகநீதி மகளிர்க்கு உள்ளம்—உறுத்தும் உறுதுயர் தருவதை உலகிற்கு உணர்த்த விரும்பிய புலவர், பரத்தைவீடு புகுந்து திரும்பிய தன் கணவனிடத்தே, ஒருபெண் "ஐய! உழவர், தன் மணம்கெட்டுச் சிதையுமாறு தன்னைப் பறித்து வரப்பிலே வீசி எறியினும், தன்னை வெறுத்த நிலத்தை மீண்டும் அடைதல்கூடாது; வேறே இடம் சென்று வாழ்வோம் என எண்ணாது, மீண்டும் அந் நிலத்திலேயே மலரும் மானங்கெட்ட நெய்தல் மலரேபோல், நீ இன்னாதன பல செய்யினும், நின்னைப் பிரிந்து வாழ்தல் இயலாமாயினேம்," எனக் கூறினாள் எனப் பாடினார்:

"கைவினை மாக்கள்தம் செய்வினை முடிமார்
சுரும்புண மலர்ந்த வாசம் கீழ்ப்பட
நீடிய வரம்பின் வாடிய விடினும்,
கொடியரோ நிலம் பெயர்ந்து உறைவேம் என்னாது பெயர்த்தும்,
கடிந்த செறுவில் பூக்கும் நின்னூர்
நெய்தல் அனையேம்; பெரும நீ எமக்கு
இன்னா தனபல செய்யினும்
நின்னின்று அமைதல் வல்லா மாறே." (குறுந்: ௩௦௯)

## உக. உறையூர்ச் சிறு கந்தனர்

கந்தன் என்ற கடவுள் பெயரைத் தம்முடைய இயற் பெயராகக் கொண்டிருந்த இவர், அவ் வுறையூரில் பெருங் கந்தனர் என்பாரும் இருந்தமையால் சிறு கந்தனர் என அழைக்கப் பெற்றுளார்.

நீரின் தண்மையும், தீயின் வெம்மையும், அவற்றைத் தீண்டியவழி உறுத்தும்; அவற்றை விட்டவழி அகலும்; ஆனல் காமநோய், காதலர் உற்றவழித் தோன்றி, அவர் அற்றவழி அகலாது; அவர் அற்ற காலத்தில், அவர் உற்ற காலத்தினும் உறுதுயர் தரும் இயல்பிற்றும்; இக் கருத்தை விளக்கும் பழம் பாட்டொன்று உண்டு:

> நீரின் தண்மையும், தீயின் வெம்மையும்
> சாரச் சார்ந்து, தீரத் தீரும்,
> சாரல் நாடன் கேண்மை,
> சாரச் சாரச் சார்ந்து,
> தீரத் தீரத் தீர்பொல் லாதே."

காதல் நோயின் இவ் வியல்பினை, ஒரு பெண் தன் தோழிபால், "நம் தலைவன் வருந்தோறும் வெளிப்பட்டுத் தோன்றும் காமப்பகை, அவர் அகன்றவழி, அவரோடு அவனுவது செய்யாது பெருந்துயர் தாரா நின்றது; இதற்கு என் செய்வேன்?" எனக் கூறினளாகப் பாடி விளக்கியுள்ளார் புலவர் கந்தனர்:

> "ஆர்கலி வெற்பன் வருதொறும் வரூஉம்
> அகலினும் அகலா தாகி,
> இகலும் தோழி நம் காமத்துப் பகையே."

(குறுந்: உருஎ)

## உஉ. உறையூர்ப் பல்காயனார்

பல்காயனார் என்ற பெயருடையாரொருவர் தம் பெய ருடையதொரு யாப்பிலக்கணம் ஆக்கியுள்ளார் என யாப் பருங்கலவிருத்தி, யாப்பருங்கலக் காரிகைகளால் அறிகி றோம்; அவரும் இவ் வுறையூர்ப் பல்காயனாரும் ஒருவரோ, அன்றி வேறோ அறிகிலோம்.

ஊர்த் தலைவன் மகள் தகாவொழுக்கினள் எனப் பிறழக்கொண்ட காலத்தில், ஊர்த்தலைவன் மகள் ஒழுக் கத்திற் சிறந்தாளன்றே? அவள்பால் இத் தகாவொழுக்கம் உண்டாகுமா? இதோ ஊரார் பலரும் உண்டு என உரைக் கின்றனரே; இவர் பொய்யுரையாரன்றே? இவற்றுள் உண்மையென எதைத் துணிவது? என்பன போன்ற எண்ணங்களால் தெளிவன அறியாது மயங்கிய அவ் வூரார்பால் கண்ட அறிவு மயக்கத்திற்குத் தூக்கணங் குருவிகளின் கூடுகளில் பின்னப்பட்டிருக்கும் நார் பல வகையாக மயக்கம் கொண்டிருத்தலை உவமை கூறிய திறம் புலவர்தம் அறிவுத் தெளிவினை உணர்த்துவதாம்.

> "எந்தையும் யாயும் உணரக் காட்டி
> ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
> மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப
> நன்றுபுரி கொள்கையின் ஒன்றா கின்றே
> முடங்கல் இறைய தூங்கணம் குரீஇ
> நீடிரும் பெண்ணைத் தொடுத்த
> கூடினும் மயங்கிய மையல் ஊரே." (குறுந்: ௩௭௪)

கூறிய உவமையால், ஊரில் வாழும் உயர்ந்தோர், ஒன்றைத் துணிவதற்குமுன் எத்துணை விரிவாக ஆராய்ந்து பார்ப்பர் என்பதை அறியக்கூறிப் பழங்காலப் பெரியோர்களின் பண்பு உணர்த்தியுள்ளார் புலவர் உறை யூர்ப் பல்காயனார்.

## ௨௩. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

இளங்கண்ணன் என்பதைப்போன்றே, முதுகண்ணன் என்பதும், பண்டையோர் மக்கட்கு இட்டு வழங்கிய பெயர்களுள் ஒன்றும்; சாத்தனார் என்ற இயற்பெயருடைய இவர், உறையூர்வாழ் முதுகண்ணன் என்பாரின் மகனாராதலால், உறையூர் முதுகண்ணன் சாத்தனார் எனப்பட்டார். இனி, ஆண்டானும், அறிவானும் முதிர்ந்து, அரசர்க்கும், பிறர்க்கும் உசாத்துணையாய் இருந்து அறிவுரை கூறவல்லார்க்கு உரிய பெயராக முதுகண் என்ற சொல் வழங்கப்பெற்று வந்துளது. "முற்றிழை மகளிர்க்கு முதுகணுமென," (பெருங்கதை : க : ௩௯ : ௧௬௮), "வாச்சியன் இரவி கூத்தனை முதுகண்ணாகவுடைய இவன் பிராமணி தேவன் நீலியும், இவன் மகன் கூத்தன் இரவியும்," (S. I. I. Vol. iv No. 227) என வருதல் காண்க. முதுகண்ணன் சாத்தனாரும், உறையூர் அரசரிடத்தோ, அன்றி வேறு எவரிடத்தோ அத் தொழிலுடையராக இருந்தமையான், அவர்க்கும் அச் சிறப்பு உண்டாயிற்றுப்போலும் எனக் கருதுவாரும் உளர்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார், ஆலத்தூர்கிழார், கோவூர்கிழார் போன்ற அரும் பெரும் புலவர்களால் பாராட்டப் பெற்றோனும், பேராண்மையும், பெரும்புலமையும் வாய்ந்தோனும் ஆய நலங்கிள்ளியைப் பாடுவார்போல் நல்ல பல அறிவுரைகளை அள்ளி வீசியுள்ளார்.

"வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர்" என்று கூறுவர் வள்ளுவர். உலகிற் பிறந்தாருள் உயர்புகழ்பெற்று வாழ்ந்தாரே உண்மையிற் பிறந்து வாழ்ந்தார் எனப் போற்றப்படுவர்; ஆனால், அப்புகழ்பெற்று வாழ்ந்தாரோ, உலகில் மிகச் சிலராவர்! உலகிற் பிறந்தார் பெருந்தொகையினராவர்; அவர் தொகையினை எண்ணிக்காணல் இயலாது; அவர்கள் புகழ்பெற்று வாழாமையால், அவரைப் பிறந்தாராகவே

பேணார் பெரியோர்; கணங்கணம் தோன்றிக் கணம்கணம் மறையும் பல்பிணங்களாம் அவை என்றே பழிப்பர்; ஆதலின், உலகிற்றோன்றுவார் புகழொடு தோன்றுதல் வேண்டும்; ஆனால், அப்புகழ் எளிதில் எய்துவதன்று; உயர்குடிப் பிறப்போ, நிறைபெருஞ் செல்வமோ புகழ் அளிப்பன ஆகா; புகழ பெறுதற்காம் பெருங்குணம் அமையப்பெறுதல் வேண்டும்; அது அமையப்பெற்றுப் புகழ்பெற்றார், இம்மையிலும், மறுமையிலும் மாறாப் பெருநிலையுற்றுப் பெருகவாழ்வர் ஆதலின், உலகிற் பிறந்தார் ஒவ்வொருவரும் உயர்பெரும் புகழ்பெற்றுப் பிறர் போற்ற வாழ்தல்வேண்டும். தாம் பிறந்ததும், இறந்ததும் பிறர் எவரும் அறியாவாறு மாண்பிலராகி மறைந்த வாழ்வினராதலின், வாழாமையே நன்று; "தோன்றின் புகழொடு தோன்றுக! அஃதிலார், தோன்றலின் தோன்றாமை நன்று."

உயரிய உண்மையினை நலங்கிள்ளிக்கு உணர்த்த விரும்பிய புலவர், "சேட்சென்னி நலங்கிள்ளி! தாமரை பூத்த குளத்தில், காண்பார்க்குக் கவினளிக்கும் காட்சிய வாய் மலர்ந்து மணங்கமழும் மலர்களைப்போலும் மாண்பு நிறை குடியிற்பிறந்தார் பலராயினும், அவருள் மக்களும், மாபெரும் புலவர்களும் போற்ற வாழ்ந்தோர் மிகமிகச் சிலரேயாவர்; அக்குளத்தில் பயன்படாது கிடந்து அழியும் அத்தாமரை இலைகளைப்போலப் பிறர்க்கும் தமக்கும் பயன் படுதலின்றி மறைந்து மாண்டோரே மிகப் பலராவர்; புலவர் பாடும் புகழுடையோர், உயர்ந்தோர் உறையும் உம்பர் உலகில் உயர்நிலைபெற்றுப் பெருமையுறுவர் எனப் பெரியோர்கள் கூறக் கேட்டுளேன்; அப்புகழ், நின் பகைவரிடத்தோ, அன்றி வேறு பிறரிடத்தோ நிற்றலை யான் விரும்புகிலேன்; நின்பால் நிற்பதையே பெரிதும் வேண்டுகின்றேன்; ஆதலின், அப்புகழ்தருநிலை நினக்கே உண்டாம் வண்ணம், நீ நின்பால் வருந்தி வருவார்தம் தகுதி தகுதியின்மைகளை நோக்கி அளிப்பதும், மறுப்பதும் மேற்கொளாது, வருவார்தம் வாடிவருந்திய வயிறு ஒன்றையே

நோக்கி எல்லோர்க்கும் வழங்க வல்லனாகுக! அருளும், ஆண்மையும் அற்ற நின் பகைவர்பால் நின்னை வெல்லும் வன்மை நில்லாதாவிடினும், வருந்தி வருவார்க்கு வழங் காமையாகிய வன்குணம் நின்று நிலைபெறுவதாகுக," என்று வாழ்த்திய வனப்பு வரவேற்கத்தக்கதாம்.

புகழ்பட வாழ்தல் வேண்டும் என வாழ்த்துரை வழங்கிய புலவர், ஈதல் வேண்டும், இசைபட வாழ்தல் வேண்டும் என்ற எண்ணம், இப்பிறப்பு அழியாதது; இச் செல்வம் குறையாதது என்ற அறியாமை உடையார்பால் உண்டாதல் இல்லை; எடுத்த இவ் யாக்கை நிலையற்றது; பெற்ற இப்பெருஞ் செல்வம் நிலையற்றது என்ற எண்ண முடையார்க்கே அஃதுண்டாம்; அவரே நிலையாத இவற் றைப் பெற்றபோதே நிலைபேறுடைய புகழைப் பெறுதல் வேண்டும் என்று எண்ணுவர்; ஆகவே அந்நிலையாமையினை எடுத்துக்காட்டி அறிவுறுத்தலும் தம் கடனே என்று எண்ணி, "உலகீர்! திங்களைக்கண்டு மகிழும் நுங்கட்கு அத்திங்கள் உணர்த்தும் உண்மையொன்று தெரியாமல் போயது ஏனோ? 'உலகம் எவ்வாறு வளர்கிறதோ அவ் வாறே தேய்தலும் உண்டு; அஃது எவ்வாறு தேய்கிறதோ அவ்வாறே வளர்தலும் உண்டு; அதற்குத் தோற்றம் உண் டாதலைப்போல் மறைதலும் உண்டு; அதற்கு இறத்தலும் உண்டு; பிறத்தலும் உண்டு; இந்த உண்மையினை நுங்கட்கு உணர்த்தவே, யான் தேய்கின்றேன் சிலநாள்; மீண்டும் வளர்கின்றேன் சிலநாள்; மறைந்தே போகின்றேன் சில நாள்; தோன்றித் தோற்றம் தருகின்றேன் சிலநாள்' என அறியாரும் அறியுமாறு உணர்த்தும் உண்மையினை உணர்ந் தாவது உணர்வு பெறுவீராக!" என்று கூறி நிலையாமை எண்ணம் நெஞ்சிடம் கொள்ளவும் துணைசெய்துள்ளார்:

"சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரை கண்டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந்தோரை எண்ணுங்காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே;

மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே;
'புலவர் பாடும் புகழுடையோர், விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்ப தம்செய்வினை முடித்து எனக்
கேட்பல்; எந்தை ! சேட்சென்னி நலங்கிள்ளி !
தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்,
மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும், வல்லுந ராயினும்,
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி,
அருள வல்லை ஆகுமதி ! அருளிலர்,
கொடாமை வல்லராகுக,
கெடாத துப்பினின் பகை யெதிர்ந்தோரே."

(புறம் : உஎ)

உலகிடைப் பிறந்தார், பிறந்ததால் பெறும் பயனாவது உயர்ந்தோர் உறையும் உம்பர் உலகில் உயர்நிலைபெற்றுச் சிறத்தலாம் எனவும், அதற்கு வழி உலகில் வாழுங்கால், உயர்ந்தோர் பலரும் ஒருங்கே போற்றுமாறு புகழ்பெற்று வாழ்தலேயாம் எனவும், அப்புகழ் அறத்தால் வரும்; ஆகவே அன்றறிவாம் என்னாது அறம் செய்க எனவும் அறம் செய்தால் உண்டாம் ஆக்கத்தின் சிறப்புணர்த்திய புலவர், அவ்வறம் செய்யாமையால் உண்டாம் கேட்டினையும் எடுத்துக்காட்டி வற்புறுத்த விரும்பி, நலங்கிள்ளியை நோக்கி, "நலங்கிள்ளி! அரிது அரிது மானிடராதல் அரிது; அதிலும் கூன், குருடு, செவிடு, பேடுநீங்கிப் பிறத்தல் அரிது என்றெல்லாம் கூறுவர் பெரியோர்; மக்கட் பிறவியில் குருடாகவும், உருவற்று மணைபோலும் மாமிசப் பிண்டமாகவும், கூனாகவும், குறளாகவும், ஊமை யாகவும், செவிடாகவும், விலங்கின் வடிவாகவும், உணர்ச்சி யற்ற உருவாகவும் பிறக்கும் பிறவிகளும் உண்டு; அப் பிறவிகள் எல்லாம், மக்கட்பயனும் அறம் பொருள் இன் பங்களை அடைதல் இல்லை; ஆகவே பயனுறாப் பிறவிகள்

எனப் பழிக்கப்பெறும். அக் குறைபாடுகள் நீங்கி, அறிவும் வாய்க்கப் பிறந்தாரும், பிறவிப் பெரும்பயனும் அவ் அறம் பொருள் இன்பங்களை ஆற்றிப் பயனுறாராயின், அவர்களும் அப்பிறவிகளேபோல் பயனற்றோரேயாவர்; ஆதலின், பிறந்தார் ஒவ்வொருவரும், அவ்வறம் பொருள் இன்பங்களை ஆற்றப்பெறுதல் வேண்டும். நலங்கிள்ளி! அவற்றைப் பெறுதற்காம் வாய்ப்பு நினக்கு நிறைய உண்டு. நின் நாடு பகையற்றது; நின் பகைவரெல்லாம் நின்னொடு பகைத்தல் அஞ்சி, காட்டுட் புகுந்து ஒளிந்து வாழ்கின்றனர்; ஆகவே, நாடு காவற்பணி நினக்கு இல்லை; நின் நாட்களை எல்லாம் அப்பிறவிப் பயன்களைப் பெறுதற்கே கழித்தல் கூடுவதன்றோ? மேலும் நின் நாடும், அவற்றை ஆக்குதற்கு வேண்டும் பொருளால் பொலிவுற்று விளங்கவும் காண்கின்றேன்; கரும்புவிளை கழனியின் உள்ளே நிற்பார், அக்கழனியின் வெளிப்புறத்திருந்து கரும்பினை விரும்பும் மாக்கட்கு, அவை வேண்டியளவு வெட்டிவீசும் பொருள்வளம் நிறைந்தது நின் நாடு. ஆகவே, காலமும், பொருளும் பொருந்த வாய்க்கப்பெற்ற நீ, அவ் அறம் பொருள் இன்பங்களை ஆற்றப்பெற்றுப் பயனுறு வாழ்வுடையோனாகுக! இவை பெற்றும், நீ அவற்றைப் பெற்றிலையேல், நிறை பிறப்புடைய நீயும் குறைபிறப்புடையன போன்றே பயனற்றவனாகுவை; அது நினக்கு நீங்காப் பெரும்பழியாம்," என்று கூறிய அறிவுரை எத்துணை அருமையுடைத்து! நோக்குக!

"சிறப்பில் சிதடும், உறுப்பில் பிண்டமும்,
கூனும், குறளும், ஊமும், செவிடும்,
மாவும், மருளும் உளப்பட வாழ்நர்க்கு
எண்பே ரெச்சம் என்றிவை எல்லாம்,
பேதைமை அல்லது ஊதியம்இல் என,
முன்னும் அறிந்தோர் கூறினர்; இன்னும்
அதன் திறமத்தை யான் உரைக்க வந்தது;
வட்டவரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்

கானத்தோர் நின்தெவ்வர்; நீயே,
புறஞ்சிறை மாக்கட்கு அறம்குறித்து, அகத்தோர்
புய்த்துஎறி கரும்பின் விடுகழை, தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக், கூத்தர்
ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே;
அதனால், அறனும், பொருளும், இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெரும! நின்செல்வம்;
ஆற்றாமை, நின் போற்றாமையே." (புறம் : உஅ)

அறம் பொருள் இன்பங்களை ஆற்றப் பெறுக என அறிவுரைகூறிய புலவர், அவற்றைப் பெறவிரும்புவார், நாள்தோறும் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் இவையாம் என உணர்த்தவேண்டுவதும் தம் கடனே என உணர்ந்து, நலங்கிள்ளியை நோக்கி, "நலங்கிள்ளி! நாள் தோறும் நாளோலக்கத்தின்கண் இருந்து, நின் நயந்து வரும் பாணர்க்குப் பொற்றாமரைப் பூச்சூட்டல்போலும் பெருங்கொடை உடையனாகுக! அதன் பிறகு, நின் உரிமை மகளிர் உடனிருக்க, உண்டு அவரோடு மகிழ்ந்துறை வாழ்விலும் மணங்கொள்ளுக! பின்னர்ப் பேரத்தாணிக்கண், அறவர், சான்றோர் சூழஇருந்து, கொடியோரைத் தண்டித்தும், செவ்வழிநின்றாரைச் சிறப்பித்தும் முறை செய்வதற்கண் சிறிதும் 'சோம்புதல் இலனாகுக! நல்லதன் நலனும், தீயதன் தீமையும் இல்எனக் கூறும் இழிவுடையோரை இனமாகக் கொள்ளற்க! நின் ஆட்சியும், நீயும் அழியாது வாழ்தல் நின் படைவீரராலும், பெருஞ் சுற்றத்தாலும் ஆம் ஆதலின், அப் படைவீரர் நின்படையில் பணியாற்றவாராமுன் பெற்றிருந்த வறுமை வாழ்வு ஒழிந்து வளமிகு வாழ்வுடையராகுமாறும், நின் சுற்றம் நிறைமகிழ்வுடையராகுமாறும் பெரும் பொருள் வழங்குக! நின் படைவீரர், நின் பகைவரைப்போல் இலையால் வேயப்பட்ட நாற்காற் பந்தராம் சிற்றிலில் இருந்து வருந்தி வாழ்ந்த தம் பண்டைவாழ்வை ஒழித்துக் கழனியில் புள்ளோப்பிநிற்பார், பனங்கருக்காற் சுட்ட மீனையும், வெய்ய மதுவையும் உண்டும், மன அமைதி

உறுது, இளநீர் வேண்டும் வளம்நிறை நாட்டில் வாழ்வுடையராகுக! இவ்வாறு நீ தேடிப்பெற்ற நின் பெருஞ் செல்வம் நிறைபுகழ் உடையதாகுக!" என வாழ்த்துரை வழங்குவார்போல், வழிகள் பலவும் வகுத்துரைப்பாராயினர். சாத்தனார் கூறும் இவ்வறவுரைகளும், அவற்றை அவர் எடுத்துக்கூறும் முறைகளும், அவர் அரசர் முதலாயினார்க்கு முதுகண்ணாதற்கு முற்றிலும் ஏற்றவர் என இசைத்துநிற்றலைக் கண்டு களிப்புறுவோமாக!

"அழல்புரிந்த அடர் தாமரை
ஐதடர்ந்த நூற்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலநறுந்தெரியல்,
பாறுமயிர் இருந்தலை பொலியச் சூடிப்,
பாண்முற்றுக நின் நாண்மகிழ் இருக்கை;
பாண்முற்றொழிந்த பின்றை, மகளிர்
தோள்முற்றுக நின்சாந்துபுலர் அகலம்; ஆங்க,
முனிவில் முற்றத்து இனிது முரசியம்பக்,
கொடியோர்த் தெறுதலும், செவ்வியோர்க்கு அளித்தலும்,
ஒடியா முறையின் மடிவிலையாகி,
நல்லதன் நலனும், தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இனனாகிலியர்;
நெல்விளை கழனிப் படுபுள் ஓப்புநர்
ஒழிமடல் விறகில் கழிமீன் சுட்டு
வெங்கள் தொலைச்சியும் அமையார், தெங்கின்
இளநீர் உதிர்க்கும் வளமிகு நன்னாடு,
பெற்றனர் உவக்கும் நின்படைகொள் மாக்கள்,
பற்றா மாக்களிற் பரிவு முந்துறுத்துக்
கூவை துற்ற நாற்கால் பந்தர்ச்
சிறுமனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்கு
உதவியாற்றும் நண்பிற் பண்புடை
ஊழிற்றாக நின்செய்கை; விழவில்
கோடியர் நீர்மைபோல, முறை முறை
ஆடுநர் கழியும் இவ்வுலகத்துக், கூடிய
நகைப் புறனாக நின்சுற்றம்;
இசைப் புறனாக நீ ஓம்பிய பொருளே." (புறம்: உக)

இவ்வாறு அறம் செய்தல், இவ்வுலகமும், எடுத்த யாக்கையும், பெற்ற பெருவளமும் நிலையற்றன என்ற நினைப்புடையார்க்கே உண்டாம்; ஆதலின், அந்நினைப்பு அவர்பால் என்றும் நீங்காது நிற்றல்வேண்டும். முக்குணங்களும் ஒன்று தோன்றியவழி ஏனைய மறைந்துவிடும் என்ப; அவ்வாறு மறைவனவற்றுள் நிலையாமை உணர்வு மறைந்துவிடின் மக்கட்குப் பெருங்கேடு உண்டாம்; ஆதலின் அவ்வுணர்வு என்றும் நிலைபெற்று நிற்றல் வேண்டும் என விரும்பிய புலவர், அவரவர் கடன்கள் இவைஇவை என உணர்த்தத்தொடங்கியவர் ஈண்டும், கூத்தாடுவார் மாறி மாறிக் கொள்ளும் பல்வேறு கோலங்களைப்போல், இவ்வுலக வாழ்வும் மாறிமாறி வரும் இயல்பினது; நின்று நிலைக்கும் இயல்புடையதன்று என நிலையாமையினை எடுத்துக்கூறி வற்புறுத்தியுள்ளார்.

இவ்வாறு தாம் உரைத்த அறவழிநின்று நாடாண்ட காரணத்தால் நலங்கிள்ளி நிறைபுகழ் உடையனாக, அவன் புகழ் அளக்கலாகா அளவினதாதல் கண்டு அகமகிழ்ந்த புலவர், "நலங்கிள்ளி! ஞாயிறு செல்லும் வீதி இது; அது இத்துணை நாழிகைக்கு இத்துணை யோசனை செல்லும்; அஞ்ஞாயிற்றின் இயக்கத்தைச் சூழ்ந்த மண்டிலத்தின் அளவு இது; காற்றியங்கும் திக்குகளின் இயல்பு இது; தாங்கும் பொருளின்றித் தானே நிற்கும் ஆகாயத்தின் இயல் இது என அவற்றின் இயல்புகளை, ஆங்காங்குச் சென்று அவற்றினை அளந்தாரைப்போலவே அணுவும் பிழையாது அறிந்து கூறவல்ல ஆற்றல் வாய்ந்த பெரியோர்களாலும், அளந்து கூறலாகா அளவற்ற புகழ் உடைய நீ; நின் புகழ் எல்லாம், யானை, தன் கவுளுள் அடக்கிய கல்லேபோல் நின்பால் அடங்கியுள்ளமையால் அவற்றை அறிந்து பாடமாட்டாது புலவரெல்லாம் பெரிதும் துன்புறுகின்றனர்," என்று பாடிப் பாராட்டுவாராயினர் :

"செஞ்ஞாயிற்றுச் செலவும், அஞ்ஞாயிற்றுப்
பரிப்பும், பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்,
வளிதிரிதரு திசையும்,

வறிது நிலைஇய காயமும் என்றிவை
சென்றளந் தறிந்தோர்போல, என்றும்
இனைத்து என்போரும் உளரே அனைத்தும்
அறிவறிவாகாச் செறிவினையாகிக்,
களிறு கவுள் அடுத்த எறிகல் போல
ஒளித்த துப்பினையாதலின், வெளிப்பட
யாங்ஙனம் பாடுவர் புலவர்." (புறம்: ௩௦)

நலங்கிள்ளியின் நலங்களை இங்ஙனம் பாராட்டிய புலவர், அவன் நாட்டின் நலங்களையும் பாராட்ட விரும்பினார்; அவன் நாட்டு நில நீர் வளங்களை முன்னரே பாராட்டியுள்ளமையால், அவன் நாட்டுக் கடல் வாணிப வளத்தினைப் பாராட்ட விரும்பி, "நலங்கிள்ளி! நின் நாடு, கடல் வளம் சிறந்தது; நின் கடற்கரை பெருங்கடல் ஓடும் பெரும்பெரும் நாவாய்களும் நலிவின்றி உள்புக்கு நிற்குமாறு ஆழம் அமைந்த துறைமுகங்களை நிறையக் கொண்டது; தம் கூம்புகளிடத்தே கட்டப்பெற்ற பாய்களைக் களையப்பெறாமலும், தாம் ஏற்றிவந்த பாரங்கள் குறைக்கப் பெறாமலும் அவை ஆண்டுப் புக்குத் தங்கும்; ஆங்கு அவை வந்தபின்னரே, மீன் பிடிக்கும் பரதவரும், உப்பு விளைவிக்கும் அளவரும் உட்புகுந்து பொருள்களைக் கரை சேர்ப்பர்; அவ்வாறு சேர்த்த கடற்செல்வத்தால் சிறப்புற்றது நின் நாடு," என்று பாராட்டினார்.

"கூம்பொடு
மீப்பாய் களையாது, மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம், தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடல்பல் தாரத்த நாடுகிழ வோயே." (புறம்: ௩௦)

புறத்துறைப் பாடல்களைப்போன்றே, புலவர் பாடிய அகத்துறைப் பாடலும் அழகு செறிந்து காணப்படுகிறது. தலைவன், வரைவிடை வைத்துப் பிரிந்தானாக வாடிய தலைவியின் வருத்தம்கண்டு வருந்திய தோழிக்கு, "தோழி! அவர் விரைவில் வரைய வந்திலரே என்ற ஏக்கத்தால் வருந்தினேனாயினும், அவர் வருவர் என்ற உறுதியால்

உயிர்பெற்று வாழ்கிறேன்; அவர் வருதலும் உறுதி; வரக்கண்டு, அவர் வாராமையால் இழந்த என் நலங்களை யெல்லாம் மீண்டும் பெற்றுப் பண்டேபோல் பொலிவுறத் தோன்றலும் உறுதி," எனக் கூறித் தேற்றினாள் தலைவி எனப் பாடியுள்ளார். இதில், தலைவன் வாராமையால் நலனிழந்து வருந்திய தலைவிக்கு, கிளி ஒடித்துச் சென்றமையால் மொட்டையான தினைத்தாளையும், தலைவி அவன் வருவான் என்ற உறுதியால் உயிர் தாங்குவதற்கு, மழை வரும் என்ற எண்ணத்தால் அத் தாள் நிற்பதையும், அவன் வந்தால் அவள் பண்டேபோல் கவின் பெறுதற்கு, மழை பெய்யின், தினை மீண்டும் தழைத்துக் கதிர் ஈனுவதையும் உவமை காட்டி உரைத்த திறம், உள்ளுந்தோறும் இன்பம் தருவதாம்.

> "புனவன் துடவைப் பொன்போற் சிறுதினை
> கிளிகுறைத்து உண்ட கூழை இருவி,
> பெரும்பெயல் உண்மையின், இலைஒலித் தாங்குஎன்
> உரம் செத்தும், உளனே! தோழி! என்
> நலம் புதிதுஉண்ட புலம்பி னோனே." (குறுந் : கஉஉ)

## உச. உறையூர் முதுகொற்றனுர்

உறையூர்வாழ் புலவர்களுள் இவரும் ஒருவர்; இவர் பாடிய பாடல்கள் இரண்டு குறுந்தொகைக்கண் இடம் பெற்றுள்ளன. ஒரு தலைவன், தான் மணக்க விரும்பிய, தன்பால் நிறையன்புடையாள் ஒரு பெண்ணை, அவள் பெற்ருேர் தனக்கு மணஞ்செய்து தர மறுத்தல் அறிந்து, அவளை அவர் அறியாவண்ணம் தன்னூர்க்கு அழைத்துச் செல்கின்ருன்; இடைவழியில் அவர்களைச் சிலர் கண்டனர்; பெண்யானைபோன்ற பேரழகு நிறைந்த அப் பெண்ணையும், அவளுக்குச் சிறிதும் துயர் உருவண்ணம் துணை புரிந்து செல்லும் அவன் அன்பையும் கண்ட அவர்கள், அவ் விருவரும் இனிதுவாழ விரும்பினர்; அவர்களைக் கண்ட காலம், பொழுது மறையும் அந்திக்காலம் என்பதையும், அவர்கள் செல்லும்வழி ஆறலைகள்வர் தொல்லை நிறைந்த நெடுவழியாம் என்பதையும் அறிந்து, அத்தகைய கொடுவழியில் அவர்கள் அப்போது மேலும் செல்லுதல் செவ்விதன்று என எண்ணினர்; உடனே அவருட் பெரியராயினர் சிலர், அவ் வாண்மகனை அடுத்து, "அன்ப! பொழுதும் போய்விட்டது; வழியும் கொடுமை நிறைந்தது; வணிகர்களை அலைத்து அவர் பொருளைக் கொள்ளைக் கொள்ளக் கருதிய ஆறலைகள்வர்கள், அவர்களை அலைத்தற்காம் இடம் நோக்கிப் பின்தொடர்ந்து வந்து, அவ் வணிகர்கள் எம் சிற்றூரில் தங்கிவிட்டாராதல் அறிந்து வறிதே திரும்புங்கால் எழுப்பிய அவர் பறையொலியும் அதோ கேட்கிறது; ஆகவே அவர்கள் அண்மையிலேயே உள்ளனர் என்பதையும் உணர்வாயாக; இவ்வாறு கொடுமை நிறைந்த வழியில் மேலும் செல்லாது இன்று இரவு இங்குத் தங்கிச் செல்வாயாக," என்று கூறினர் எனப் பாடி, அக்கால இளைஞர்களின் அன்பு உள்ளத்தையும், ஆன்ருேர்களின் அருள் உள்ளத்தையும், அன்பும், அருளும் நிறைந்தார் இடையே வாழும், ஆறலைகள்வர்போலும் அறவுள்ளம் இல்லார்தம் மறவுள்ளத்தையும் உணரத் துணைபுரிந்துள்ளார் புலவர்.

"எல்லும் எல்லின்று ; பாடும் கேளாய் ;
செல்லாதீமோ, சிறுபிடி துணையே !
வேற்றுமுனை வெம்மையின் சாத்துவந்து இறுத்தென
வளையணி நெடுவேல் ஏந்தி
மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே."
(குறுந் : ௩௯0)

ஆயர், நல்லினத்தாயர், புல்லினத்தாயர், கோட்டினத் தாயர் என மூவகைப்படுவர் ; நல்லினம் பசுக்கள் ; புல்லினம் ஆடுகள் ; கோட்டினம் எருமைகள். புல்லினத்தாயர், தம் ஆடுகளை ஓட்டிச் செல்வராயின், பலநாள் வீடு திரும்பார். அவற்றைத் தாம் மேய்க்கும் இடங்களிலேயே வைத்திருப்பதால், அவற்றினின்றும் பெற்ற பாலைமட்டும், நாள் தோறும் ஒருவன் நாட்டுட் கொண்டுசென்று விற்று, தமக்கு வேண்டும் உணவுப்பொருள்களைப் பெற்றுச் செல்வன் ; அப் பாலைத் தம் வீட்டிற்குக் கொண்டுசென்று கொடுத்துவிட்டு, ஆங்கே தமக்கு வேண்டும் உணவைக் கொண்டுசெல்வதும் உண்டு. இவ்விரு வழக்கமும் ஒருங்கே தோன்ற உணர்த்திய ஒரு தொடர் அவர் பாடிய குறுந் தொகைக்கண் வந்துளது.

"பாலொடு வந்து கூழொடு பெயரும்
ஆடுடை இடை மகன்." (குறுந் : உஉக)

# ௨௫. எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்

தாயங்கண்ணனார் எனவும், எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் எனவும் வழங்கப்பெறும் இவர் பிறந்த எருக் காட்டூர், சோணாட்டின்கண் உளது; தஞ்சை மாவட்டம், நன்னிலம் வட்டத்தில் காவாலகுடிக்குக் கிழக்கிலும், குளிக்கரைப் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கிலும் உளது என்ப. இவ்வூரைச் சார்ந்த மணற்குன்று என்னும் ஊர், கல்வெட்டுக்களில், "எருக்காட்டூர்ச் சேரிக்குப் பிடாகை யான மணற்குன்று," என வழங்கப்பெறும். தாயன் என்பாரின் மகனாராதலின், இவர் தாயங் கண்ணனார் எனப் பெயர் பெற்றுளார்; ஏடெழுதுவோர்பிழையால், இவர் பெயர், கதையங் கண்ணனார் எனவும், ஏர்க்காட்டூர்த் தாயங் கண்ணனார் எனவும் காணப்படும். இவர் பாடிய பாக்கள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நான்கு நூல்களினும் இடம் பெற்றுள்ளன; இவரால் பாடப்பெற்றோன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனாவன். வளவனைப் பாராட்டிய புலவர், வடுக ரையும், தொண்டையரையும், பெயர் அறியாப் பாண்டியன் ஒருவனையும், சேரன்கொல்லி, முசிறி, சோழன், உறந்தை, அவன் காவிரி, பாண்டியர் பரங்குன்று ஆகிய இடங்களையும் உம்பற் காட்டினையும் தம் பாட்டில் பாராட்டியுள்ளார்.

கிள்ளிவளவன் தன்னை உள்ளி வருவார்க்கு, நெய் மிகப் பெய்து தாளிக்கப்பெற்ற இறைச்சியும், மணங்கமழும் கட்டெளிவும், பாம்பின் உரிபோலும் மென்மையும் தொழில் வன்மையும் உடைய ஆடையும் அளித்து, கோடைக்காலத்து வெப்பம்போலும், அவர் வறுமையின் ஆய துன்பமாம் வெப்பத்தைப் போக்கிப் பெருங்கலம் பலவும் அள்ளிக்கொடுக்கும் வள்ளன்மை யுடையன்; அவன் அருளைப்பெற்ற இரவலர், ஊழிவெள்ளத்தே உலகமே அழியினும், ஞாயிறு கீழ்த்திசையில் தோன்றல் இன்றித் தென்திசைக்கண் தோன்றலால் இயற்கையல்லன செயற்கையில் தோன்றும் காலமேயாயினும், வருந்துவ திலர் எனக்கூறி வளவன்தன் மாரியன்ன வண்மையினை வாயாரப் பாராட்டியுள்ளார்.

"நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கலன் நிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்க மொடு
மாரியன்ன வண்மையிற் சொரிந்து
வேனில் அன்ன என் வெப்பு நீங்க
அருங்கலம் நல்கி யோனே." (புறம்: ௩௯௭)

"எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கண் செலினும்,
தெறுகதிர்க் கனலி தென்திசைத் தோன்றினும்
என்னென்று அஞ்சலம் யாமே." (புறம்: ௩௯௭)

வேங்கடத்திற்கு அப்பால் வாழ்வார் வடுகராவர்; அவர் பகைவர் நாட்டுப் பசுநிரைகளை வென்று கொணர் வான்வேண்டி, தாம் வழிபடு கடவுளர்க்கு நல்ல பலியாக நறவினைத் தருவர்—"இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெரு நிரை, நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும், வால்நிரைப் புகவின் வடுகர் தேயம்," என்றும், தொண்டைநாடு என இந்நாட்டிற்குப் பெயர் தருதற்குக் காரணராய தொண்டை யர், பழந்தமிழ்க் காலத்திருந்தே வாழ்ந்த பழம்பெருங் குடியினராவர்; அவர்கள் போர்த்தொழிற் பழகிய யானைப் படை உடையவர்; அவர்க்கு உரியது வேங்கட நெடுவரை- "வினைநவில் யானை விறற்போர்த்தொண்டையர், இனமழை தவழும் ஏற்றரும் நெடுங்கோட்டு, ஓங்கு வெள்ளருவி வேங்கடம்," என்றும், சேரர்க்குரிய முசிறித்துறையினை முற்றி அரும்போர் ஆற்றி வென்று, அச்சேரர்க்குரியதாய் ஆண்டிருந்த பொற்படிமம் ஒன்றைக் கைப்பற்றி மீண்டான் ஒரு செழியன்; அவனுக்குரியது, கொடிபல அசையும் நெடிய பல தெருக்களையுடைய கூடல்மா நகரம்—"முசிறி ஆர்ப்பெழ வளைஇ அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய நெடுநல்யானை அடுபோர்ச் செழியன் கொடிநுடங்கு மறு கின் கூடல்," என்றும், வெல்லும் போர்வல்ல சேரர்க்குரி யது கொல்லிமலை; அது மேற்குத்தொடர்ச்சி மலைக் கண்ணே உளது—"வெல்போர் வானவன் கொல்லிக் குட வரை" என்றும், சேரர்க்கு உரியது முசிறித்துறை; அது சுள்ளி எனும் பெயருடையதொரு பேராற்றங் கரைக்கண்

கடலை அடுத்துளது; ஆண்டு யவனர் எனும் பெயரினராய புறநாட்டு வணிகமக்கள், கலங்களில் நிறையக் கொணர்ந்த பொன்னைக் கொடுத்து, மிளகினைப் பெற்று மீள்வர்; இத்தகு கடல் வாணிபத்தால் வளம்செறிந்தது அம்முசிறி—“சேரலர் சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க, யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளங்கெழு முசிறி,” என்றும், கரும்பைப் பிழிந்துகொண்ட சாற்றினைக் காய்ச்சி ஆக்கிய வெல்லப் பாகோடு பாலையும் கலந்து, அக்கலவையுள் இட்டுக் கலந்த அவல் உணவை, வருவார்க்கெல்லாம் வழங்கிப் பின் உண்ணும் வளம்சால் பெருமக்கள் வாழும் சிறப்புடையது உறந்தை—“கரும்பின் விளைகழை பிழிந்த அந்தீஞ் சேற்றோடு பால்பெய் செந்நெல் பாசவல் பகுக்கும் புனல்பொரு புதவின் உறந்தை,” என்றும், சோழர், வன்மையாற்கொண்ட வெற்றி பல உடையவர்; அவ்வெற்றி அவர் வாட்போர் வன்மையால் உண்டாம்; அவர்க்குரியது காவிரிப் பேராறு—“வலம்படு வென்றி வாய்வாட் சோழர், இலங்குநீர்க் காவிரி” என்றும், பரங்குன்று கூடல் நகருக்கு மேற்பால் உளது; மயிற்கொடியுடையான் முருகன் மகிழ்ந்துறையும் மலையது; இடையறா விழாப் பல உடையது அக்குன்று—“கூடற் குடாஅது, பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய ஒடியா விழவின் நெடியோன் குன்றத்தும்” என்றும், உம்பற்காடு சேரர்க்குரியது; அது யானைகளை மிகுதியாக உடையது; அதனாலேயே அதற்கும் அப்பெயர் உண்டாயிற்று; உம்பல் யானை எனும் பொருள் உடையது; அக்காட்டுவாழ் யானைகள் பலாவினைப் பிளந்து உண்ணும் இயல்பின—“பெருங்களிற்று இனநிரை கை தொடூஉப் பெயரும், தீஞ்சுளைப் பலவின் தொழுதிஉம்பற் பெருங்காடு,” என்றும் கூறும் வரலாற்று விளக்கங்களை உணர்க.

வெள்ளி வானத்தே எழ, பறவைகள் மரத்தின் உயரத்தே உள்ள தம் கூட்டில் இருந்து குரல் எழுப்ப, தண்ணீர்க் குளத்தில் தாமரை மலர, திங்கள் தன் தண்

ணொளி குன்ற, முரசும் சங்கும் முழங்க இரவின் கடை யாமம் கழியக் காலைத்தோன்றும் எனக்கூறும் காலைக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாதல் காண்க.

> " வெள்ளியும் இருவிசும்பு ஏர்தரும்; புள்ளும்
> உயர்சினைக் குடம்பைக் குரல் தோற்றினவே;
> பொய்கையும் போதுகண் விழித்தன; பையச்
> சுடரும் சுருங்கின்று ஒளியே; மாடெழுந்து
> இரங்குகுரல் முரசமொடு வலம்புரி யார்ப்ப,
> இரவுப் புறங்கண்ட காலை " (புறம்: 397)

சுடுகாடு, இறந்ததம் காதலரை எண்ணி அழுதார்தம் கண்ணினின்றும் ஓடிய நீரால், எலும்புகள் இடையிடையே மயங்கக்கிடந்த வெண்ணிறச் சாம்பல் நனைந்து அவியும் கொடுமையுடையது; அச்சுடுகாடு, உலகத்தார் அனைவர்க்கும் தானே முடிவிடமாய், அவர் எல்லார் முதுகையும் தான் காணுமேயன்றித் தன் முதுகினைக்காண எண்ணு வாரைக் காண அறியாதாம் கொடுமையும் உடையது; மக்கள் பிறப்பர்; இறப்பர்; யான் பிறப்பதும் இல்லேன்; இறப்பதும் இல்லேன், "Men may come; and Men may go; But I go on for ever" என்ற கருத்தோடு ஒத்து இடுகாட்டின் கொடுமையினை எத்துணைத் தெளிவாக உணர்த்தியுள்ளார் புலவர்! நோக்குக!

> " முதுகாடு
> நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்
> என்புபடு சுடலை வெண்ணீறு அவிப்ப
> எல்லார் புறனும் தான்கண்டு, உலகத்து
> மன்பதைக் கெல்லாம் தானாய்த்
> தன்புறங் காண்போர்க் காண்பறியாதே." (புறம்: 356)

## உக. எருமை வெளியனார்

மைசூர் நாடும், அதன் தலைநகர் மைசூர் நகரும் பண்டைநாளில் முறையே எருமை நாடு எனவும், எருமை யூர் எனவும் பெயர்பெற்றிருந்தன. பாண்டியன் நெடுஞ் செழியனோடு, தலையாலங்கானத்தே போரிட்டோருள் எருமையூரன் என்பவனும் ஒருவன்; அவனை, "நாரறி நறவின் எருமையூரன்" என்றும், "வடுகர் பெருமகன் பேரிசை எருமை" என்றும் புகழும் நக்கீரர், அவன் நாட்டில் ஓடுவது அயிரியாறு என்றும கூறுவர். எருமைக் குரிய நாடு குடநாடு என்பர் மாமூலனார். அவ்வூரிற் பிறந்து வெளியன் என்ற இயற்பெயருடைமையால் நம் புலவர் எருமை வெளியனார் எனப்பட்டார் என்பர் சிலர்; சிலர், வீரைவெளி என்பதேபோல், எருமைவெளி என்பதும் ஓர் ஊரின் பெயராம்; அவ்வூரினராதலின் இவர் எருமை வெளியனார் என்று அழைக்கப்பெற்றார் என்ப. எருமை நாட்டிலேயே வெளியம் என்றோர் ஊர் உண்டு; அதுவே இவர் ஊராதலும் கூடும். இவருக்குக் கடலனார் என்ற புலமைநலம் சான்ற மகனார் ஒருவர் உளர்.

"தம்பொருள் என்பதம் மக்கள்" என்றும், "பெறு மவற்றுள் யாமறிவதில்லை, அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற" என்றும் கூறுபவாதலின், மக்கட்பேறுற்றாரைப் பெருஞ்செல்வர் எனக் கருதினர் பண்டையோர் என்பது பெற்றாம்; அவர்காலப் புலவராய நம் எருமை வெளியனார், ஒரு பெண், தன் கணவனைக் குறிப்பிடுங்கால், புதல்வர்ப் பயந்த பெருஞ்செல்வன் என்று குறிப்பிட்டாள் எனப் பாடியுள்ளார். "எம்மில் புல்லுளைக் குடுமிப் புதல்வன் தந்த செல்வன்" (புறம்: உஎங). இவர் குதிரை மறம் பாடுவதில் வல்லராவர்.

மறக்குடி வந்தானொருவன், அவ்வூர் ஏனை மறவ ரோடும் கூடிக் குதிரை ஊர்ந்து போர்க்குச் சென்றான்; போர் முடிந்தபின் குதிரைகள் வரிசையாக ஊர்நோக்கி

வந்துகொண்டிருந்தன; நம் மறவன் மனைவி, தன் கணவன் ஊர்ந்துவரும் குதிரையின் வருகையினைக் கண்கொட்டாது நோக்கி நின்றுகொண்டுள்ளாள்; ஆனால் எல்லாக் குதிரையும் வருகின்றன; அவன் குதிரைமட்டும் வந்திலது; அவளுக்கு ஐயம் உண்டாயிற்று; அவன் குதிரை களத்தில் மாண்டு விட்டதோ என எண்ணினாள்; உடனே ஆங்கு மாண்டிருப்பின், அது வறிதே மாண்டிராது; அதை எளிதில் அழிக்க எவர்க்கும் ஆகாது; பெரும்போர் ஆற்றிய பின்னரே அது அழிந்திருக்கும் என்ற உறுதி உண்டாயிற்று; அஃது ஆற்றிய அவ் அரும போர்க்காட்சி அவள் அகக்கண் முன் தோன்றியது. உடனே, அவளுக்கு ஓர் அரிய காட்சி கட்புலனாயிற்று; இருபெரும ஆறுகள் ஒன்றுகூடும் கூடலில் நிற்கும் ஒரு பெரிய மரம், அவ்வாற்றுப் பெருக்கினைப் பலகாலும் தாங்கித் தாங்கி இறுதியில் அடியற்று வீழ்ந்துவிட்டது; இந்தக் காட்சி அவள் கண்முன் தோன்றியவுடனே, நம தலைவன் ஊர்ந்து சென்ற குதிரையும் இவ்வாறு பெரும்படையால் பலகாலும் தாக்குதலுற்றே இறுதியில் மாண்டிருத்தல் கூடும் என்ற எண்ணம் உண்டாயிற்று; அவன் வராமையால் தோன்றிய வருத்தத்திற்கிடையே இக்காட்சி ஓர் அமைதியினை உண்டாக்கிற்று. மறக்குடி மகளின் இந்நிலையினைக்கண்ட புலவர் அழகிய ஒரு பாட்டால் பாடிப் பாராட்டுகிறார் :

> "மா வாராதே; மா வாராதே;
> எல்லார் மாவும் வந்தன; எம்மில்
> புல்உளைக் குடுமிப் புதல்வன் தந்த
> செல்வன் ஊரும் மா வாராதே;
> இருபேர் யாற்ற ஒருபெருங் கூடல்
> விலங்கிடு பெருமரம் போல
> உலந்தன்று கொல் அவன் மலைந்த மாவே."
>
> (புறம் : உஎங)

தோழியும், தலைமகளும் ஒருவரின் ஒருவர் வேறு அல்லர்; உடலால் வேறுபட்டுத் தோன்றினும் உணர்வால் ஒருவரே என்று கூறுவர் பழந்தமிழ் ஆசிரியர். இந்த

உண்மையினை, "தோழி! தலைவன் வாராமையால் தனித்து நின்று உறும் நின் நோய்க்கேயல்லாமல், நின் துயர்நிலை கண்டு வருந்தும் என் நோய்க்கும் வருந்துகின்றனை நீ; யானோ, நீ ஒன்றை நினைப்பின், அஃது அறத்தாறு அன்று என மாறுபடக்கருதாது நீ நினைத்த அதனையே நினைக்கும் இயல்புடையேன்," என்று தோழி கூறினாளாகப் பாடிக் காட்டுகின்றார் :

"நின்நோய்த் தலையையும் அல்லை; தெறுவர
என்னாகுவள் கொல்! அளியள் தான்! என
என்அழிபு இரங்கும் நின்னொடு யானும்
ஆறன்று என்னா வேறல் காட்சி
இருவேம்." (அகம் : எந)

## ௨எ. எருமை வெளியனார் மகனார் கடலனார்

இவர் முன் கூறிய எருமை வெளியனாரின் மகனும் மாண்புடையராவர்; இவர் பாடிய பாட்டொன்று நெடுந்தொகையுள் இடம் பெற்றுளது; இரவில், மின்மினி மொய்க்கும் புற்றினை, அம் மின்மினிகள் ஓடுமாறு பெயர்த்து, அப்புற்றினுள் கைவிட்டுக் குரும்பி கெண்டி உண்ணும் கரடி, ஒளிவிடும் இரும்புத் தூள்கள் சிதறுமாறு இரும்பினைக் காய்ச்சியடிக்கும் கொல்லன்போல் தோன்றும் என்று கூறும் உவமை மிகவும் அழகு வாய்ந்தது.

> "மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
> பொன்எறி பிதிரிற் சுடர வாங்கிக்
> குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை
> இரும்புசெய் கொல் எனத் தோன்றும்." (அகம்: எ௨)

இருள் செறிந்த நள்ளிரவில் மின்னல் தோன்றுவது இருளை இரண்டாகக் கிழிப்பதுபோலும், "இருள் கிழிப் பதுபோல் மின்னி" எனவும், கருவுற்றிருக்கும் புலியினை, இரண்டு உயிர்களையுடைய பெண்புலி "ஈருயிர்ப் பிணவு" எனவும் கூறுவது அவர் புலமை நலத்தினைப் புலப்படுத்துவதாம்.

அரவும், புலியும், கரடியும், முதலையும் வாழும் கொடிய வழியில், தன்மேல் கொண்ட அன்பின் மிகுதியால், அஞ்சாது வரும் தலைமகனுக்கு ஏதம் உண்டாம் என அஞ்சும் தலைமகள், அவ்வாறு அவன் வரும் கொடுஞ்செயலுக்கு அவனும் காரணமல்லன்; அவன் வரத்துணைபுரியும் தோழியும் காரணமல்லள்; அவன் வருதற்காம் வேட்கையினை உண்டாக்கும் தானே காரணமாவள் எனக்கூறி வருந்தும் துயர்தரு காட்சியினை நன்கு காட்டுகிறார் புலவர்:

> "வந்தோன் கொடியனும் அல்லன்; தந்த
> நீ தவறுடையையும் அல்லை; நின்வயின்
> ஆனு அரும்படர் செய்த
> யானே, தோழி! தவறுடையேனே." (அகம்: எ௨)

## உ அ. எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனுர்

பழைய புதுக்கோட்டைத் தனியரசு நாட்டிற்குப் பண்டைத் தமிழர் வைத்து வழங்கிய பெயரே கோனடு. இதன் பரப்பு இருபத்துநாற்காத வட்டகையாகும். கோனடு, இரட்டபாடி கொண்ட சோழவளநாடான கோனடு என்றும், கோளாந்தக வளநாடான கோனடு என்றும் கல்வெட்டுக்களில் பெயர்பெறும். கோனடு, வட கோனடு, தென் கோனடு, கீழ் கோனடு என மூவகைப் படும். சோழநாட்டிற்கும், பாண்டி நாட்டிற்கும் எல்லை யாக ஓடும் தென் வெள்ளாற்றின் தென்கரை தென் கோனடு என்றும், வடகரை வடகோனடு என்றும் பெயர் பெறும். கீழ்கோனடு, இளங்கோனடு என்றும் வழங்கும். தஞ்சை மாவட்டம், அறந்தாங்கி வட்டத்தின் மேலைப் பகுதியே கீழ்கோனடாகும். மதுரைக்குமரனரின் எறிச் சிலூர் கீழ்கோனட்டில் உளது. குமரனர், மதுரையி னின்றும் வந்து கோனட்டு எறிச்சிலூரில் வாழ்ந்த அந்தணராவர்.

மதுரைக்குமரனர், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, குராப்பள்ளித்துஞ்சிய பெருந் திருமாவளவன் ஆய இரு சோழ வேந்தர்களையும் குட்டு வன் கோதை என்ற சேரவேந்தன் ஒருவனையும், ஏனதி திருக்கிள்ளி, ஏனதி திருக்குட்டுவன் ஆய இரு சோழர் படைத்தலைவர்களையும், ஈர்ந்தூர்க்கிழான் தோயன்மாறன் என்ற குறுநிலத் தலைவன் ஒருவனையும் பாடிப் பாராட்டி யுள்ளார். இவர் பாடல்கள் புலமைநலம் சான்று அரிய அறமுறைக்கும் அழகுவாய்ந்தனவாய்க் காணப்படுகின்றன.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி, நலங்கிள்ளி என்பானின் மகன் என்றும், வேனிற் காலத்தே வெய்யிலின் வெப்பம் பொருத வேந்தர்கள் விரும்பியுறையும் இலவந்திகைச் சோலைக்கண் அமைந்த அரண்மனையில் இருந்து உயிர்விட்டவன் என்றும் கூறுவர்

ஆராய்ச்சியாளர்; "எஃகு விளங்குதடக்கை இயல்தேர்ச் சென்னி" என இவன் பெயர்கூறிப் பாராட்டியுள்ளார் புலவர் மதுரைக்குமரனார். சேட்சென்னி, தன்னைச் சேர்ந்தார்க்கு மிகமிக எளியனாய், அவர்க்குச் சிறு துயரும் உண்டாகாவண்ணம் பேணிக்காக்கும் இயல்புடையவன்; ஆனால், தன்னை எதிர்த்துநிற்பார், இவ்வுலகில் வாழவும் காணப்பொறாக் கொடுமையும் உடையனாவன்; ஆதலின் அவனை எதிர்ப்பார், அவ்வாறு எதிர்ப்பதால் தமக்கு உண்டாம் கேடு எவ்வளவு என்பதை அவர் தாமே அறிய வேண்டியவரேயன்றிப் பிறர் எவரும் அதை அளவிட்டுக் கூறல் இயலாது என அவன் ஆற்றலும், அன்பும் தோன்றப் பாடியுள்ளார்:

"சிலைத்தார் அகலம் மலைக்குநர் உளர்எனில்
தாமறிகுவர் தமக்குறுதி; யாம், அவன்
எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்
வாழக் கண்டன்று மிலமே; தாழாது
திருந்தடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்டல் அதனினும் இலமே."

(புறம்: சுக)

குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன், அவன் காலத்தே வாழ்ந்த பிற அரசர்போலாது, குலப் பகைவர், குடிப் பகைவர் என்று கருதப்பட்டோரையும் தம் நண்பர்களாகக்கொண்டு அன்புநெறி தழைக்க அரசாண்டவனாவன்; பெருந்திருமாவளன்பால் காணலாம் இப் பண்பு பாராட்டற்குரியதாதலின், அவன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியோடு நட்புப் பூண்டு ஒழுகிய காட்சியினைப் புலவர் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார், பலபடப் பாராட்டிப் புகழ்ந்துள்ளார்; இவ்வாறு புலவர் பாராட்ட வாழும் பண்புடையான் பெருந் திருமாவளவன் என்பதறிந்த மதுரைக் குமரனார், ஆண்டுச்சென்று அவனைப் பாராட்டினார்; அவன் தன் படைப் பெருமையினாலோ, அன்றிச் செல்வச் செருக்காலோ, புலவரை உடனே அழைத்து

அவர் வேண்டும் பரிசிற் பொருளைத் தாராராயினன்; அதனால் சினங்கொண்ட புலவர், அவனுக்கும் அவனைப் போன்ற ஏனைப் பெருவேந்தர்க்கும் அறிவு வரும்வண்ணம் அழகிய பாட்டொன்றைப் பாடிச் சென்றார்.

"வேந்தே! அரசர்கள், காற்றெனக் கடிதுசெல்லும் குதிரைகளை உடையரென்றோ, நெடிய பல தேர்களை உடையரென்றோ, கடல்போலும் படையினை உடைய ரென்றோ, மலைபோலும் களிறுகளை யுடையரென்றோ, முரசு முழங்கச்சென்று அரசர் அடிபணியப் பெறும் வெற்றி யுடையரென்றோ கருதி, அவர்கள் ஆற்றல் ஒன்றையே கண்டு வியந்து பாராட்டும் பண்பினேமல் லேம்; எம்மால் வியந்து பாராட்டத்தக்கார், முள்வேலி உள்ளே புளைத்து, மறியும், மாடும் மேய்ந்து ஒழித்த முன்னைக்கீரையும், வரகரிசிச்சோறும் ஆய புல்லிய உண வினையே அளிக்கவல்ல, செல்வத்தாற் செழிக்கப் பெறாத சிற்றார் மன்னரேயாயினும், எம்பெருமையறிந்து பேணும் பண்புடையாளரே யாவர்; எத்துணைக் கொடிய துன்பம் வந்துற்றபோதும், உயரிய புலவர்களை உணர்ந்து பாராட் டத்தக்க உணர்ச்சியில்லார் தம் உறுபொருள் விரும்பேம்: நல்லறிவும், நற்பண்பும் உடையார் நல்குரவினராயின், அவர் நல்குரவினையே நயந்து பாராட்டுவோம்." மதுரைக் குமரனார், தம் மதித்துப் பரிசளியாத பெருந்திருமாவள வனை நோக்கிப் பாடிய இப் பாட்டின் பொருள், புலவர் தம் பெருமிதப் பண்பினை உணர்த்திப் பெருமையுற்று விளங்கு வது காண்க.

> வளி நடந்தன்ன வாச்செலல் இவுளியொடு
> கொடி நுடங்கு மிசைய தேரினர் எனாஅக்,
> கடல் கண்டன்ன ஒண்படைத் தானை யொடு
> மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ,
> உரும் உரற்றன்ன உட்குவரு முரசமொடு
> செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ,
> மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
> வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே;

எம்மால் வியக்கப் படூஉ மோரே,
இடுமுட் படப்பை, மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கண் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்,
சீறூர் மன்னரா யினும், எம்வயின்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே;
மிகப்பேர் எவ்வம் உறினும், எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்;
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெரும, யாம் உவந்து நனி பெரிதே."

(புறம்: ௧௯௭)

சேர வேந்தர், குட்டுவர், குடவர், பொறையர் எனக் குடிவகையாற் பலராவர்; சேரநாட்டின் ஒரு பகுதியாகிய குட்ட நாட்டை ஆண்டவர் குட்டுவர் எனப்படுவர்; மதுரைக் குமரனார் காலத்தே, அக் குட்டுவர் குடியில், கோதை என்பான் ஒரு கோ, கோலோச்சி யிருந்தான்; அவன் புலவர்களை விரும்பி வரவேற்று, வாரிவழங்கும் வள்ளியோனவன்; பகைவர்க்குப் புலிபோலும் பெரு வீரமும் உடையவன்; அவன் ஆற்றலும் அருட்குணமும் அறிந்த மதுரைக் குமரனார், அவன் அரசவை நோக்கிச் சென்றார்; அவன் ஆங்களித்த அன்பும், அரும்பொருளும் கண்ட புலவர், "ஒரு நாட்டிற்குரிய ஓர் அரசன், அந் நாட்டுள், தன்னை எதிர்நின்று தடுப்பார் எவரும் இன்றி, எவரையும் கேளாதே, மாறாக, எல்லோரும் எதிர்வந்து போற்ற, இறுமாந்து, தன் தலைதூக்கிச் செல்வதேபோல், குட்டுவன் கோதையின் அரசவையுள், சென்று இருத்தல், எம்போலும் புலவர்க்கு மிக மிக எளிது; ஆனால், அவனோடு பகைகொண்டு வாழ்வார்க்கு, அவன் நாடு, ஆட்டிடையர்க்குப் புக அரிதாய, புலிவாழும் காடேபோல், புகுதற்கரிதாம்," என்று பாராட்டிப் பரவிப் போந்தார்.

"எங்கோன் இருந்த கம்பலை மூதூர்,
உடையோர் போல இடையின்று குறுகிச்
செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்,

எம்மன வாழ்க்கை இரவலர்க் கெளிதே;
இரவலர்க்கு எண்மை அல்லது,.........
..........................................
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்கும் காலைப்
பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி
மாசுண் உடுக்கை மடிவாய் இடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை அவனுடை நாடே." (புறம்: ருச)

மதுரைக் குமரனார் காலத்தில், திருக்கிள்ளி என்ற பெயருடைய சோழர்குலச் சேனபதி ஒருவன் இருந்தான்; சோழ அரசிற்குப் பணிந்த சிற்றரசர்களும், அவர் படையில் பணியாற்றுவோரும், அச் சோழர்க்குரிய பெயரைத் தாமும் மேற்கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்; அவ்வாறு, அச் சோழர்க்குரிய திருக்கிள்ளி என்ற பெயருடையானாய இவன், அவர் படைத்தலைமை மேற்கொண்டிருந்தமையால் ஏனாதி என்ற பட்டமும் பெற்றிருந்தான்; அவன் போர் பல வென்றவனாதலின், அவன் உடல் முழுதும், வீரப் புண்களால் ஆய வடுக்கள் நிறைந்து, காண்டற்குக் கவின் குறைந்து விளங்கினான்; ஆனால், அவன் வெற்றிப் புகழ், தமிழகமெங்கும் விளங்கிப் பரவியிருந்தது. இத்தகைய பெருமையுடையானைக் கண்டு மகிழ எண்ணினார் மதுரைக் குமரனார்; அவன் வாழிடம் சென்றார்; அவனைக் கண்டார்; "கிள்ளி! நீ, வாள்வடுப் பொருந்திய யாக்கையை உடையை; ஆதலின் காண்டற்கு இனியையல்லை; ஆனால், வெற்றிச் சிறப்புடையையாதலின், கேட்டற்கினிய புகழ் உடையை; நின் பகைவரோ, நின்னோடு எதிர்த்துப் போரிடுதற்கஞ்சிப் புறங்கொடுத்து ஓடிவிடுவராதலின், பழிநிறைந்து கேட்டற்கின்னாராயினும், வாள் வடுப்பொரு வனப்புடைய உடலினராய்க் காண்டற்கினியராவர்; இதனால், நீ இனியனாதலைப்போன்றே, அவரும் ஒருவாற்றான் இனியராவர்; இவ்வாறு, இனிமைப் பண்பு இருவர்பாலும் அமைந்திருப்பவும், உலகத்தார் நின்னை

மட்டும் புகழ்ந்து கூறுகின்றீரே! அதற்கு என்னையோ காரணம்?' என்று அவனைப் பழிப்பார்போல் புகழ்ந்தும், அவன் பகைவரைப் புகழ்வார்போல் பழித்தும் மீண்டார். இவ்வாறு பாராட்டிய இப் பாராட்டுரைவழியே, காட்சி அறிவினும், கேள்வி அறிவே சிறந்தது; உண்மையாயது என்பதையும் உணர்த்தினார்.

"நீயே, அமர்காணின் அமர்கடந்து அவர்
படைவிலக்கி எதிர் நிற்றலின்,
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக்கு இனியை; கட்கு இன்னையே;
அவரே, நிற்காணின், புறம் கொடுத்தலின்,
ஊறு அறியா மெய்யாக்கை யொடு
கண்ணுக்கு இனியர்; செவிக்கு இன்னரே;
அதனால், நீயும்ஒன்று இனியை; அவரும்ஒன்று இனியர்;
ஒவ்வா யாவுள? மற்றே; வெல் போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி!
நின்னை வியக்கும் இவ்வுலகம்; அஃது
என்னோ? பெரும! உரைத்திசின் எமக்கே." (புறம்: கசு௭)

சோழர் படைத்தலைவருள் ஒருவனாய ஏனாதி திருக் கிள்ளியைப் பாராட்டிய புலவர் மதுரைக்குமரனார், திருக் கிள்ளியைப் போன்றே, சோழர் படையின் மற்றொரு படைத்தலைவனாய திருக்குட்டுவன் என்பானையும் பாராட்ட விரும்பினார். திருக்குட்டுவன், சோழ அரசின் கீழ்ப் பணியாற்றுவோனாயினும், சேரர் வழிவந்தவனாவன்; இவன் பெயர் அவன் ஒரு சேரன் என்பதை அறிவிக்கும் ஆதலின் ஏனாதி திருக்குட்டுவன் என்றுமட்டும் கூறினால், அவன் சேர அரசின் கீழ்ப் படைத்தலைமைப் பணிமேற்கொண்டவனாவன் என்று பின்னுள்ளோர் எண்ணிவிடுவர் என்று எண்ணிய அக்காலத்தார், அவனைச் சோழிய ஏனாதி திருக்குட்டுவன் என்று அழைப்பாராயினர்; இவன் வெண்குடை என்ற ஊரில் வாழ்ந்தவனாவன்; இவன் வள்ளியோன் என்பதை வையகத்தில் உள்ளார் அனைவரும் அறிந்து பாராட்டினர்; இவன்பால்சென்ற புலவர் மாடலன்

மதுரைக்குமரனார்க்கு, அவனோர் ஆற்றல் மிக்க யானை ஒன்றைப் பரிசு அளித்தான்; யானையைக் கொண்டுபோதற்கு அஞ்சிய அவர் அதை அவன்பாலே திருப்பி அனுப்பி விட்டார். புலவர், தான் கொடுத்த பொருளைத் தன்பாலே அனுப்பியது கண்ட அவன், "அவர் அது சிறிது என எண்ணிவிட்டார்போலும்," என்று எண்ணி, மற்றுமோர் யானையைப் பரிசளித்தான்; அவன் அளித்த இரு யானைகளையும் பெற்று, அவற்றால் தம் வறுமை ஒழிந்துவிட்டமையால், அவன்பால் மீட்டும் சென்று பொருள் வேண்டி நிற்கும் நிலை ஒழிந்தமைகண்ட புலவர் மகிழ்ந்து, அம் மகிழ்ச்சியால், "புலவர்களே! யான் குட்டுவன்பால் சென்று பொருள்வேண்டி நின்றேன்; அவன் அணுகற்கரிய யானையைப் பரிசாக அளித்தான்; அதுகொண்டு அவன்பால் செல்லின், நாம் அணுகற்கரிய பொருளையே பரிசாக அளிப்பான் என அஞ்சி, அவன்பால் என்றும் செல்லேன்; உலகம் அவனை வள்ளியோன் எனப் புகழினும், நீவிர் அவனை நினைத்துச் செல்வதைக் கைவிடுவீராக!" என அவனைப் பழிப்பார்போல் புகழ்ந்து பாராட்டி வந்தார்.

"வாய்வாள் குட்டுவன்,
வள்ளியனாதல், வையகம் புகழினும்,
உள்ளல் ஓம்புமின்; உயர்மொழிப் புலவீர்!
.................. .................... ........
வாடாவஞ்சி பாடினேனாக,
அகமலி உவகையொடு அணுகல் வேண்டிக்
கொன்றுசினம் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சினவேழம் நல்கினன்; அஞ்சி
யானது பெயர்த்தனெனாகத், தான்அது
சிறிதென உணர்ந்தமை நாணிப், பிறிதுமோர்
பெருங்களிறு நல்கியோனே; அதற்கொண்டு
இரும்பேர் ஒக்கல் பெரும்புலம் புறினும்
துன்னரும் பரிசில் தருமென
என்றும் செல்லேன்; அவன் குன்றுகெழு நாட்டே."
(புறம்: ௩௯௪)

இவ்வாறு இருபெரும் படைவீரர்களின் வண்மையினை விளங்கப்பாடிய புலவர் மாடலன் மதுரைக்குமரனுர், தமிழகத்தே மற்ருெரு வீரனும், சிறந்த கொடையாளனுய் விளங்குவதைக் கண்டார். அவன் கொங்குநாட்டில் ஈர்ந்தூர் என்ற ஊரில் வாழ்ந்திருந்தான்; பெருஞ்செல்வனல்லன்; ஆயினும், தன்பால் வந்து இரந்தார்க்கு இல்லை என்ருது ஈயும் சிறப்புடையவன்; இரப்பார்க்கு அளிக்கத் தன்பால் பொருள் இல்லையாயின், உடனே பகைவர் நாடு சென்று போர்செய்து பெரும்பொருள் கொணர்ந்து கொடுக்கும் குணமுடையவன்; இவன் பெருமையுணர்ந்த புலவர், அவன்பால் சென்று அவனைப் பாராட்டி, அவன் அளித்த பரிசில் பெற்று மகிழ்ந்தார். உடனே அவன்பால் பொருள் பெற்ற பாணன் ஒருவன், வறுமையால் வாடிப் பொருள் அளிப்பாரைத் தேடி எதிர்வரும் பாணன் ஒருவனை நோக்கி, "பாண! நம்போலும் பாணர்தம் பசி போக்கிப் பாண்பசிப் பகைஞன் என்ற பெயர்கொண்டான் ஒருவன் ஈர்ந்தையில் உள்ளான்; அவன் வருவார்க்கு வாரி வாரி வழங்கத்தக்க வளமுடையனல்லன்; ஆயினும், வருவார்க்கு இல்லெனக்கூறி வறிதே அனுப்பும் சிறுமையும் உடையனல்லன்; நின் வறுமை கெடவேண்டுமாயின், எம்மோடு வருக; யாம் சென்று அவன்பால் இரந்துநிற் போமாயின், அவன் தன்னூர்க் கொல்லன்பால் சென்று, அவனுக்கு வறுமையால் உண்ணுது வாடிய நம் வயிற்றினைக் காட்டி, 'இவர் பசிதீரப் பொருள் கொண்டுவருதல் வேண்டும்; ஆதலின் அதற்குவேண்டும் வேல் வடித்துக் கொடுக்க வேண்டுகின்றேன்' என்று இரந்துநிற்பன்," என்று கூறுவதாகப் பாடிப் பாராட்டினுர் :

"நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே;
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே;
..........................................
கருங்கைக் கொல்லனை இரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே." (புறம்: கஅ0)

## உ௯. ஐயாதிச் சிறுவெண்தேரையார்

முற்காலத்தும், பிற்காலத்தும் வாழ்ந்த புலவர்கள் எல்லாம் விரும்பி மேற்கொண்ட பெயர்களுள் தேரையார் என்பதும் ஒன்று; பதார்த்தகுண சிந்தாமணி என்னும் நூலை எழுதியவரும் ஒரு தேரையார் என்பது உணர்க. ஐயாதிச் சிறுவெண் தேரையார், ஊர்ப்பெயர் குறிக்கப் பெறாமல், சிறுவெண் தேரையார் என அழைக்கப்பெறு தலும் உண்டு. இவர் பிறந்த ஊர் ஐயாதி எனும் பெய ருடையது. அஃது யாண்டுளது என்பதை அறிதற்கு இல்லை. தொண்டைநாட்டு ஊர்களுள் ஒன்றாய சலவாறு என்பது, சலவாரி என வழங்கப்பெறுதல்போல், இவ் ஐயாதி என்பதுவே இடைக்காலத்தில் ஐயாறு என ஆயிற்றோ என எண்ணுதற்கும் இடனுண்டாம். வேந்தர் தம் போர் வேட்கைக்காம் காரணம் குறித்தும், நிலையாமை கூறி அறம் வலியுறுத்தல் குறித்தும் இவர் பாடிய பாக்கள் மிகமிக அழகுடையனவாம்.

உலகிற் பிறந்தார் ஒவ்வொருவரும் இம்மையில் உயர் பெரும்புகழ் பெற்று வாழவும், மறுமையில் மாற்றரும் மகிழ்ச்சிநிறை மறையோர் உலகெய்தி இன்புறவும் எண்ணும் இயல்பினராவர்; உலகில் புகழ் உண்டாதல், அந்தணர் முதலாம் அறிஞர் பெருமக்கட்கு நாடு பல நல்கு வதாலும், இரவலர்க்குச் சோறளிப்பதாலும், பரிசிலர்க்குப் பொருள் பல அளிப்பதாலும் ஆம்; அது, பெரும்பொருள் உடையார்க்கே இயலும்; அப்பொருள் பகைவர் நாட்டைப் பாழாக்கிப் பெறுதலாலேயே பேரரசர்க்குண்டாம்; உம்பர் உலகில் உடலோடு சென்று உறைதல், போரிற் பெற்ற புண் உடையார்க்கும் உண்டாம். ஆக எவ்வகை நோக் கினும், இம்மையிற் புகழும், மறுமையில் இன்பமும் பெறத் துணைபுரிதல் போரேயாதல் புலனும். ஆகவே, அரசர் போர் மேற்கொள்வதில் பெருவிருப்பினராகின்றனர்; அரசர் மேற்கொள்ளும் அப்போர்ச்செயல், அருள்நெறிக்கு அப்பாற்பட்டது ஆகலின், அது அருள்நெறி உரைக்கும் அந்தணர் நூல்களுள் கூறப்படுவதில்லை. அது புறத்துறை

பற்றிய பொருள் குறித்து நிற்றலின், ஒழுக்கநெறி உரைக்கும் அறநூல்களானும் அறியப்படுவதன்று. இவ்வாறு வேந்தர்தம் போர் வேட்கைக்காம் காரணம் இது; அவ்வேட்கையால் உண்டாம் விளைவு இது என விளங்க உரைத்துள்ளார் புலவர்.

உலகும் பொருளும் நிலைபேறுடையன என்ற நெஞ்சுடையார், புகழும் புத்தேளுலக வாழ்வும் வேண்டும் என எண்ணார்; அவை நிலையற்றனவாம் என்று எண்ணுவார்க்கே, அவ் ஆசை உண்டாம்; ஆகவே, அவ்வெண்ணம் மயக்கத்தின் நீங்கிய மதியுடையார்க்கே உண்டாம்; அவ்வெண்ணம் வரப்பெற்றோர், கடல்போல் பெருகிய சுற்றத்தார், தம்மைச்சூழ வாழினும், தாம் அழியாது நிற்றல் ஆகாது என்பதை உணர்வர்; அவரே தம் புகழ் உலகெலாம் பரவியதனல், அது மேலும் பரத்தற்காம் இடம் இன்மை கண்டு, இனி ஈண்டில்லை நமக்கு இடம் என்று எண்ணியவராய், ஈண்டிய புகழும், வேண்டிய புண்ணும் பெற்று விண்ணுலகெய்துவர் என வேந்தர்க்கு விண்ணுலகு எய்துதல்வேண்டும் என்ற எண்ணம் உண்டாதற்காம் காரணம் இஃது எனவும் விளக்கியுள்ளமை யுணர்க.

"நான்மறைக் குறித்தன்று அருளாகாமையின்!
அறங்குறித்தன்று பொருளாகுதலின்;
மருள்தீர்ந்து மயக்கு ஒரீஇக்,
கைபெய்த நீர் கடல் பரப்ப
ஆம்இருந்த அடை நல்கிச்,
சோறு கொடுத்து, மிகப் பெரிதும்
வீறுசால் நன்கலம் வீசி, நன்றும்
......... .................. ........
காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொடு
இல்என்று இல்வயிற் பெயர, மெல்ல
இடம் சிறிது ஒதுங்கல் அஞ்சி
உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே."

(புறம் : ௩௬௨)

புறநானூற்றில் இடம் பெற்றுள்ள புலவரின் மற்றொரு செய்யுட்கண், புலவர் நிலையாமை கூறி, அறன் அறிவுறுத்தும் முறை மிகமிக அழகாக அமைந்துள்ளது.

கடல்சூழ்ந்த இப் பேருலகினை, இடையே, உடைவேல மரத்தின் இலையளவு சிற்றிடமும் பிறர்க்கு உரியதன்று எனப் போற்றிப் புகழுமாறு தாமே ஆண்ட பேரரசர் மிக மிகப் பலராம்; கடல்அலை கொழிக்கக் குவிந்த மணலை எண்ணிக் காணினும், அவ்வாறு உலகாண்ட உயர்ந்தோர் தொகையினை எண்ணிக் காணல் இயலாது; அவ்வாறு ஆண்ட அவர்களும் மாளாது வாழ்ந்தாரல்லர்; தாம் ஆண்ட, தமக்குரிய அந்நாட்டைத் தமக்குப் பின்னே, பிறர்பற்றி ஆளுமாறு கைவிட்டு மாண்டு மறைந்தே போயினர்; வேந்தர்தம் நிலைமையே அஃது எனின், ஏனையோர் தம் நிலைமையினை எடுத்துக்கூறலோ வேண்டுவதின்று; அவரெல்லாம் இறத்தல் உண்மை; இது பொய்யுரையன்று; இறப்பு எப்போது வரும் என அறிந்து கூறுவார் உலகத்தில் ஒருவரும் இலர்; அஃது எந்தக் கணத்திலும் வந்துறும். ஆதலின், அது வாராதமுன்னரே, தம் எதிர்கால வாழ்விற்காம் நல்வினையினை முடித்து விடுதல் மூதறிவுடைமையாம்; ஆகவே, அந்நாள் வாரா முன்னரே, துறவுநெறி பூண்டு தவமேற் கொள்க! என அவர் கூறும் அறிவுரையினை உளங்கொண்டு உய்வோமாக!

"இருங்கடல் உடுத்த இப் பெருங்கண் மாநிலம்
உடைஇலை நடுவணது இடை பிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்,
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணக்
காடு பதியாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்று மாய்ந்தனரே;
அதனால், நீயும் கேண்மதி யத்தை! வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை; மாயமோ அன்றே:
........................................
இன்னு வைகல் வாரா முன்னே
செய், நீ முன்னிய வினையே,
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே."
(புறம்: ௩௬௩)

## ௯௦. ஒக்கூர் மாசாத்தனர்

சோழ நாடு, பாண்டி நாடு ஆகிய இரு நாடுகளிலும் இப் பெயருடைய ஊர்கள் பல இருத்தலின், மாசாத்தனர் பிறந்த ஒக்கூர் யாண்டுளது என்பதைத் துணிந்து கூறுதற்கில்லை; இவ்வூர் புலவர் பலர் வாழ்ந்த பெருமையுடையதாம்; மாசாத்தியார் என்ற பெண்பாற் புலவரொருவர் இவ்வூரிற் பிறந்து பெருமையுற்றுளார்.

கணவனோடு கலந்துறையும் இளமைக் காலத்தே அல்லித் தழையாலாய ஆடை உடுத்து அழகுமிக்கு வாழ்ந்தாளொருத்தி, கணவன் இறந்தபின்னர்த், தனக்கு ஆடைக்காம் அழகிய தழை அளித்த ஆம்பல் உண்ணுதற்காம் புல்லரிசி அளித்துத் துணைபுரியும் கொடுங்காட்சியினைக் கண்டு கண்ணீர்விடும் தாபதநிலையினைப் புலவர் ஒக்கூர் மாசாத்தனர் நன்கு விளங்கப் பாடியுள்ளார்.

> "அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
> இளைய மாகத் தழையா யினவே
> இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது
> தின்று வைக லுண்ணும் [மறுத்
> அல்லிப் படூஉம் புல்லா யினவே." (புறம்: உ௪அ)

காலையில் காடுசென்று, அறுகம்புல்லாம் நல்லுணவுண்டு, மடிநிறையப் பால்கொண்டு, தம் கன்றுகளை நினைந்து அழைக்கும் அம்மா எனும் ஒலியோடு வீடுநோக்கி ஓடிவரும் கறவைகளைக் கண்டாளொருத்தி, பொருள் கருதிப் பிரிந்த தலைமகன் வாராமையால் வருந்தி, தம் தொழில் முடிந்தவுடன் விரைந்து வீடு திரும்புதல்வேண்டும் எனக் கறவைகளும் எண்ணுகின்றன; ஆனல் நம் தலைவர்க்கு அக் கருத்தில்லையோ எனக் கலங்கும் காட்சியினையும், அவளுக்கு யாதும் கூறமாட்டாமையால், தன்கை யாழிசைத்து, அவள் துயர்தீரக் கடவுளைப் பரவுவான் போல் ஆண்டிருந்து மீண்டுசெல்லும் பாணன் செய்கையினையும் புலவர் ஒருங்கே பாடி மகிழ்கிறார்.

"..................................................
பதவுமேயல் அருந்து மதவுநடை நல்லான்
வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு
மாலையும் உள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண வென்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்
செவ்வழி நல்யாழ் இசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்ந்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே
விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்
கல்பொரு திரங்கும் பல்லார் நேமிக்
கார்மழை முழக்கிசை கடுக்கும்
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே." (அகம்: கச)

கழக வெளியீடு: சுகூஅ

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை - கக

# மாநகர்ப் புலவர்கள் - உ

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது

:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

சங்ககாலத்துச் சான்றோரான தண்டமிழ்ப் புலவர்கள், பிறந்தும் இருந்தும் வந்த ஊர்கள் பல்லனவாகும். அவர்கள் தம் பெயர்களோடு சார, ஊர்ப்பெயர்களைச் சூடியும் சூட்டு வித்தும் திகழ்ந்தோராவர்.

அவர்களுள் இதில் இடம் பெற்றோர் 'கச்சிப் பேட்டுக் காஞ்சிக் கொற்றனார்' முதலாக, 'குளம்பனார்' ஈறாக, முப்பதின்மராவர். இவர்தம் வரலாற்றையும் **புலவர், திரு. கா. கோவிந்தன்** அவர்கள், தம் கூர்த்த மதிநலத்தால் ஆக்கி உதவினர்.

இதற்கு '**மாநகர்ப் புலவர்கள் - உ**' என்னும் பெயரமைத்து, இரண்டாவதாக இதனை வெளியிட்டுச் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் பதினொன்றாவதாகத் தொடர்பு படுத்தியுள்ளோம்.

இதனையடுத்து வெளியாகும் 'மாநகர்ப் புலவர்கள் ௩' என்னும் வரலாற்றினையும் அதற்கு அடுத்தடுத்து வரும் ஏனைய சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை நூல்களையும் அறிவுதிருந்தறிஞருலகம், வாங்கிக் கற்றுத் தமிழ்ப் பெருஞ் செல்வப் பேறெய்துமென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

பக்கம்

# மாநகர்ப் புலவர்கள் - உ.

## தோற்றுவாய்

"தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செய்தல் வேண்டும்" என இன்று விரும்புகின்றோம் நாம். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்டது நம் பண்டைத் தமிழகத்தில், தமிழ்நாட்டுப் பேரூர்த் தெருக்களிலேயே யல்லாமல், சிற்றூர்களிலும், சேரிகளிலும் கேட்டது அத்தமிழ் முழக்கம். பண்டைத் தமிழகத்தில் பிறந்தார் ஒவ்வொருவரும், தம் தாய்மொழியாம் தமிழ் மொழியினை அறிந்திருந்தனர்; "உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று" என்ற அறிவினை அக்கால மக்களும், அரசரும் ஒருங்கே பெற்றிருந்தனர். அதனால், நாட்டு மக்கள் அனைவரும் கற்றாராய்த் திகழ்வதிற் காவலரும் கருத்துடையராயினர்; கற்றல் நம் கடன்; அதற்கு அரசரை எதிர்நோக்கல் அறியாமை என அறிந்து கற்றனர் மக்களும்; கல்லாதவனைப் பொல்லாதவன் எனப் பழித்தனர்; இதனால் அக்கால மக்கள் எல்லோரும் கற்றனர். கற்றனர் எனின், எழுதப்படிக்க ஆம் அத்துணை அளவே கற்றனரல்லர்; அருங்கவி பாடும் அளவு கற்றனர்; இதனால், தமிழகத்தின் ஊர்தோறும் புலவர்கள் வாழக் காண்கிறோம்.

புலவர்கள் வரலாற்றினை விளங்க உணரும் வாய்ப்பில்லாமையால், அவர்கள் ஒவ்வொருவரும் பிறந்த ஊர்ப் பெயரனைத்தையும் அறிந்துகொள்வதற்கில்லை. தாம் பிறந்த ஊர்ப்பெயரைத் தம் இயற்பெயரோடு சேர்த்து வழங்கினர்

சிலரின் ஊர்ப்பெயர்களை மட்டுமே உணர்தல் இயலும். அவ்வாறு அப்பெயர்கொண்டு நோக்கியவழி, புலவர்கள் பிறந்த பெருமைசால் ஊர்களாக நூறு ஊர்ப்பெயர்களை அறிகிறோம். அவ் வூர்ப்பெயர்களைத்தான் அறிகிறோமே யன்றி அவை யாண்டுள்ளன? அவற்றின் வரலாறு யாது என்பனவற்றை அறிதற்கில்லை. அவ்வூர்ப் பெயர்களுள் சிலவே ஊர்ப் பெயர்களாக உள்ளன; ஏனைய, உண்மையில் ஊர்ப் பெயர்கள்தாமா? அல்லது வேறு சிறப்புக் குறித்து, அப்புலவர் பெயரோடு வந்து வழங்கும் அடைமொழிகளா என்று ஐயுறத்தக்கனவாகவும் உள்ளன. புலவர்களின் வரலாறு, பெண்பாற் புலவர்கள், உவமையாற் பெயர்பெற்றோர், காவல பாவலர், வணிகரிற் புலவர்கள், கிழார்ப்பெயர்பெற்றோர், உறுப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர், மதுரைப் புலவர்கள் என்ற பல்வேறு தலைப்பின்கீழ் வகைப்படுத்தி உரைக்கப் பெறுவதால், அவ்வத் தலைப்பின்கீழ்ச் சில புலவர்களின் ஊர்ப்பெயர்கள் அடங்கிவிடும். அவ்வாறு அடங்காத ஊர்களில் வாழ்ந்தார் வரலாறு மட்டுமே ஈண்டு உரைக்கப்பெறும். இவ்வாறு ஆராய்ந்து கொண்ட எழுபத்தேழு ஊர்களில் வாழ்ந்த நூற்றுப்பத்து புலவர்களின் வரலாற்றினை "மாநகர்ப் புலவர்கள்" என்ற வரிசையிற் கூறத்தொடங்கி, அவ் வரிசையுள் இரண்டாவது நூலாகிய இதன்கண், பதினாறு ஊர்களில் வாழ்ந்த முப்பது புலவர்களின் வரலாறு உரைக்கப்படுகிறது. இந்நூலால் அறியப்படும் புலவர்களின் ஊர்கள், (1) கச்சிப்பேடு, (2) கடம்பனூர், (3) கடியலூர், (4) கருவூர், (5) கல்லாடம், (6) கழாத்தலை, (7) கழார், (8) கள்ளம்பால், (9) கள்ளிக்குடி, (10) கள்ளில், (11) காப்பியாறு, (12) காவிரிப்பூம்பட்டினம், (13) கிடங்கில், (14) குடவாயில், (15) குதிரைத்தளி, (16) குமட்டூர் முதலாயினவாம்.

## க. கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றனார்

காஞ்சியைச் சேர்ந்த கொற்றனார், கச்சிப்பேட்டுப் புக்கு வாழ்ந்தமையால் கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றனார் என அழைக்கப்பெற்றார். கச்சிப்பேட்டு காஞ்சிபுரத்தை அடுத்துள்ளதொரு பேரூர். ஒரு நகரின்புறத்தே அதைச் சார்ந்து, இக்காலத்துச் சந்தைபோல் நாள்தோறும் நிகழும் வணிக நிலையத்தைக் குறிக்க வழங்கிய பேட்டு என்பது, இன்று பேட்டை எனத் திரிந்து வழங்குகிறது. புலவர் பலர் வாழ்வால் பெருமையுற்றது. நன்னாகையார், இளந்தச்சனார், பெருந்தச்சனார் முதலிய புலவர்கள் அவ்வூரில் வாழ்ந்தவரே ஆவர். இவர் பெயர்க்கு முன்வரும் காஞ்சி என்ற சிறப்பு, ஊர்பற்றி வந்ததன்று; காஞ்சித் திணை பாடிய சிறப்பால் வந்தது எனக் கூறுவாரும் உளர். ஆனால் அதை உறுதி செய்தற்காம் சான்று ஒன்றும் இல்லை.

ஒரு தலைவன் பொருள்கருதிப் பிரிந்துசென்றுளான்; அவனோ தன் மனைவிமாட்டுப் பேரன்பு உடையவன்; அதனால் சென்ற அவன், இடைவழியில் தன்னை நினைந்து தான் மேற்கொண்டு வந்த வினையையும் மறந்து மீண்டு விடுதலும் செய்வரோ என அஞ்சினாள் அவன் மனைவி. அஃதறிந்த அவள் தோழி, அவர் நின்பால் கொண்டுள்ள அன்பு அவரை மீளத்தூண்டினும், அவர் சென்ற வழியில் கடமையில் பிறழ்வது கவினுடையதன்று என்ற அறிவுரை வழங்கும் அரிய காட்சிகள் பல உண்டு; அவற்றை அவர் காண்பர்; உடனே காதலினும் கடமையே பெரிது எனும் எண்ணம் அவர் உளத்தே தோன்றும்; வறிதே மீள்வதைக் கைவிடுவர்; ஆகவே கவலற்க எனத் தேற்றினாள். அவ்வாறு தேற்றிய தோழி, அவற்குக் கடமையுணர்ச்சியை உணர்த்தும் காட்சிகளுள் ஒன்றைக் கூறத்தொடங்கி, அக்காட்டு நெறிவாழ் கலைமான் ஒன்று பசிநோயைப் போக்குதற்பொருட்டுத் தன் கால்களால் உதைத்து வளைத்த மரத்தின் பட்டைகளைத் தன் குட்டி தின்று எஞ்சியிருந்

தால் உண்டு, துள்ளி ஓடும் அக்குட்டி, வெயிலால் துன்புறா வாறு தன் உடல் நிழலால் காத்து, வெயிலின் வெப்பத்தைத் தான் ஏற்றுக்கொள்ளும் தன் தாயர் அறியாத் தகைமைசால் பண்புடையது அவர் சென்ற நெறி எனக் கூறினாள் எனப் பாடியுள்ளார் புலவர். இதில் தன் பசியைப் போக்கிக்கொள்ளுதலில் நாட்டம் இன்றித் தன் குட்டியின் பசியை முதலில் போக்கியும், வெயிலின் வெப்பத்தால் தான் வருந்துவதைப் பொருட்படுத்தாது தன் குட்டிக்கு தன் நிழல்கொடுத்துதவியும் கடனாற்றும் அக்கலை, வழுவில் நெஞ்சுடையதாம் எனப் போற்றும் புலவரின் பொன்னுரையினைப் போற்றுவோமாக!

> "நசைநன்கு உடையர் தோழி! ஞெரேரெனக்
> கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்
> பசிப்பிணிக்கு இறைஞ்சிய பரூஉப்பெரும் சுதரல்
> ஒழியின் உண்டு, வழுவில் நெஞ்சின்
> தெறிநடை மரையின்தன் மறிக்குநிழ லாகி
> நின்று வெயில் கழிக்கும் என்ப நம்
> இன்துயில் முனிநர் சென்ற ஆறே." (குறுந் : உகங)

தலைவன் இளமையும், இன்பமும் குறியாது பிரிந்துவிட்டானே எனப் பெரிதும் அழியாது, அவன், ஈந்து இசைபட வாழ்தற்குத் துணைபுரியவல்ல புகழ்நிறை பொருள்தேடிப் பிரிந்துள்ளான் என மகிழ்ந்தாளொரு தலைமகளைப புலவர் நமக்கு அறிமுகம் ஆக்கியுள்ளார் ஒரு பாட்டில்.

> "அவரே, கேடில் விழுப் பொருள் தருமார், பாசிலை
> வாடா வள்ளியம் காடிறந் தோரே." (குறுந் : உகசு)

## உ. கடம்பனூர்ச் சாண்டிலியனார்

கடம்பனூர் என்பது ஓர் ஊர்; இது யாண்டுளது என்பது விளங்கவில்லை. கடம்பன் என்பது முருகனுக்குரிய பெயர்களுள் ஒன்று; ஆதலின் இவ்வூர் அவன் பெயரால் ஆகிய ஊர்களுள் ஒன்றுபோலும் என எண்ணுதற்கும் இடம் உண்டு. சாண்டிலியன் என்பது ஒரு முனிவரின் பெயர்; தெய்வங்களின் பெயரை மக்களுக்கு இடுவதே போல், முனிவர்களின் பெயர்களையும் மக்களுக்கு இட்டு வழங்கினர் அக்காலத்தார்.

வானத்தே வளைந்த மெல்லிய கோடுபோல் தோன்றும் மூன்றாம் பிறைக்கு உடைந்த வளையலை உவமைகூறிப் பாடிய புலமை போற்றற்குரியதாமன்றோ? பிறை, இறைவன் சென்னியை இருப்பிடமாக்கொண்டமையால், பிறையினைக் கண்டார், அப்பெருமானைக் கண்டதேபோல் கருதிக் கைகூப்பித் தொழுதல் தமிழகத்து வழக்கமாம்; அப்பிறையை மக்களேயன்றி முனிவரும், தேவரும் தொழுவர் என நூல்கள் கூறுகின்றன; இவ்வாறு பிறை பலராலும் தொழப்படும் எனப்பதை நம் புலவரும் அறிவித்துள்ளார். இதனால் அவர் தெய்வக் கொள்கை தெளிவாதல் காண்க.

> "வளை உடைந்தனையதாகிப் பலர் தொழச்
> செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி
> இன்னம் பிறந்தன்று பிறையே." (குறுந் : ௩0௭)

---

## ௩. கடியலூர் உருத்திரங் கண்ணனார்

உருத்திரங் கண்ணனாருக்குரிய கடியலூர் யாண்டுளது என்பது தெளிவாகத் தெரிந்திலது; கடியலூர் பாண்டி நாட்டு ஊர்களுள் ஒன்று; அது திருநெல்வேலி மாவட்டத்தில் உளது என்பர் சிலர்; சிலர், இவரால் பாடப் பெற்றோர் இருவரும் சோணாட்டினும், அதற்கு வடக்கின் கண்ணதாய தொண்டை நாட்டினும் அரசோச்சியவராதலின், உருத்திரங் கண்ணனார் சோணாட்டைச் சேர்ந்தோராவர் எனக் கூறுவர் அவர் எந்நாட்டினராயினும், சோணாட்டின் இயல்புகளைச் சிறக்க அறிந்தவர் என்பது அவர் பாடல்களால் புலனும் உருத்திரங் கண்ணனார், உருத்திரன் என்பாரின் மகனாராவர். இவர் அந்தணர்; இது, "ஊரும, பெயரும" என்ற தொல்காப்பியம் மரபியற் சூத்திரத்திற்கு உரை கண்ட பேராசிரியர், "கடியலூர் உருத்திரங் கண்ணன் என்பன அந்தணர்க்கு உரியன," எனக் கூறுவதால் தெளிவாம். "இருநிலம் கடந்த திருமறு மார்பின் முந்நீர் வண்ணன்," எனத் திருமாலையும், "காந்தளம் சிலம்பில் களிறு படிந்தாங்குப் பாம்பணைப் பள்ளி அமர்ந்தோனாங்கண்," என அவன் பாம்பணைக் கோலம் கிடக்கும் திருவெஃகாவையும், "நின்ற வுருவின் நெடியோன் கொப்பூழ், நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த் தாமரைப் பொகுட்டு," எனத் திருமாலின் திருவுந்திக் கமலத்தையும் பாராட்டி யிருத்தலின், இவர் திருமாலே வழிபடும் வைதிக சமயத்தினராவர் எனக் கோடல் பொருந்தும். பத்துப் பாட்டினுள், பெரும் பாணாற்றுப் படை, பட்டினப்பாலை ஆய இரு பாட்டுக்களைப் பாடிய பெருமை நம உருத்திரங் கண்ணனாருக்கு உரித்து. இவ் விருபெரும் பாக்களே அல்லாமல், நெடுந்தொகை, குறுந் தொகை ஆகிய இரு நூல்களிலும் ஒவ்வொரு செய்யுள் இவர் பாடியனவாகக் காணப்படுகின்றன. பட்டினப்பாலை யினைப் பாடக் கேட்ட பெருந்திருமாவளவன், இவர் பெருமை யறிந்து, பதினாறு நூறாயிரம் பொற்காசு பரிசு

ளித்தான் எனப் பாராட்டுவர். 'பரணிக்கோர் செயங் கொண்டான்,' என்ற பாராட்டிற்குரிய புலவர் சயங்கொண் டாரும் பிறரும் எனின், இவர் புலமையின் பெருமை யினைப் பகரவும் ஒண்ணுமோ ?

"தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
பத்தொடு ஆறுநூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்."

"பாடிய தோர் வஞ்சி நெடும் பாட்டால் பதினாறு
கோடிபொன் கொண்டதும் நின்கொற்றமே"

கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் பாராட்டப் பெற்றோர் தொண்டைமான் இளந்திரையனும், சோழன் கரிகாற் பெருவளத்தானுமாவர்; இவ் விருவர் குறித்தும் பாராட்டி எழுந்த பாடல்கள் முறையே பெரும்பாணாற்றுப் படையும், பட்டினப்பாலையுமாம்.

தொண்டைமான் இளந்திரையன் வரலாறு விளங்க உரைக்கப்பட்டிலது; "நாகப்பட்டினத்துச் சோழன் பிலத் துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னியைப் புணர்ந்த காலத்து, அவள் யான்பெற்ற புதல்வனை என் செய்வேன் என்றபொழுது, தொண்டையை அடையாள மாகக் கட்டிக் கடலிலேவிட அவன் வந்து கரையேறின், அவற்கு யான் அரச வுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பல் என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ங னம் வரவிடத் திரைதருதலின் திரையன் என்று பெயர் பெற்றான்," என நச்சினார்க்கினியர் கூறும் செய்திகளை ஏற்றுக்கொண்டு, அச் சோழன், கிள்ளிவளவனாவன்; நாக கன்னி, பீலிவளையாவர் என்று கொள்வர் சிலர்; பல்லவன், அசுவத்தாமனுக்கும், மதனி என்ற அரமகள் ஒருத்திக்கும் பிறந்தவனாவன்; அசுவத்தாமன், துரோணரின் மகன்; துரோணர், கங்கை நீரிற்பிறந்தவளாய "க்ருதாசி" என்ற நீரரமகளுக்கும், பாரத்வாஜ முனிவருக்கும் பிறந்தவராவர்; இதனால் பல்லவர், திரை தருமகளிர் மரபினராதல் தெளிக. இப் பல்லவரைக் குறிக்க வழங்கும் தொண்டையர் என்ற

பெயரின்கண் வரும் தொண்டை என்ற சொல், துரோணம் என்ற சொல்லின் மரூஉ முடிபாம் எனக் கூறித் திரையன் வரலாறு குறித்து நச்சினார்க்கினியர் கூறியதை மறுத்து வேறு கூறுவர், வேறு சிலர். இது, கடியலூர் உருத்திரங் கண்ணனார்பற்றிக் கூறவந்த நூல்; திரையனைப்பற்றிக் கூறுவது அல்ல இதன் குறிக்கோள்; ஆதலின், அவன் வரலாறுபற்றிய ஆராய்ச்சியினை ஈண்டு மேற்கொண்டிலேன்; அவன் குறித்து அவர் கூறுவனவற்றைமட்டும் குறிப்பிடல் பொருந்தும.

திரையன், திருமாலை முதல்வனாகக்கொண்ட குடியிற் பிறந்தவன்: திரைதரு மரபின்வழி வந்தவன்; சேர, சோழ, பாண்டியர் மூவரினும் சிறந்தவன்; கடலிற் பிறந்த வளைகள் பலவற்றுள்ளும் வலம்புரிச்சங்கு சிறந்ததாதல் போல் சிறப்புடையான்; அல்லது கடிந்து அறம் விளங்க நாடாண்டவன்; வேற்படை பல வுடையான்; திரையன் எனும் பெயருடையான்; நீர்ப்பேர் எனும் பெயருடைய தொரு ஊர் இவனுக்கு உரித்து; காஞ்சியைத் தலைநக ராகக்கொண்டு நாடாண்டவன்; யானைகள் கொணரும் விறகினால் வேள்விமேட்டும் அந்தணர்கள் நிறைந்த வேங் கடமலையும் அவன் ஆட்சிக் குட்பட்டதே; திரையன், தொண்டையர்குடி வந்தவன்; தொண்டையர், பகைவர் பணிந்து திறைதர முன்வரினும், அதை ஏற்றுக்கொள்ள எண்ணாராய், அவரை அழித்து அவர் பொருள்கள் அனைத் தையும கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவராவர். இவ்வளவே இந்நூலால் அறியத்தக்கன.

> "இருநிலங் கடந்த திருமறு மார்பின்
> முந்நீர் வண்ணன் பிறங்கடை, அந்நீர்த்
> திரைதரு மரபின் உரவோன் உம்பல் :
> மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்
> முரசுமுழங்கு தானை மூவருள்ளும்
> இலங்கு நீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
> வலம்புரி அன்ன வசைநீங்கு சிறப்பின்
> அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
> பல் வேல் திரையன்."

"நீர்ப் பெயற் றெல்லை போகி."

"கச்சி யோனே கைவண் தோன்றல்."

"செந்தீப் பேணிய முனிவர், வெண் கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங்கு அருவிய மலைகிழ வோனே."

"பகைவர், கடிமதில் எறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினும்
ஒன்றல் செல்லா உரவுவாள் தடக்கைக்
கொண்டி உண்டித் தொண்டையோர் மருக!"

(பெரும்பாண்: ௨௯-௩௭; ௩௧௯-௪௨௦,
௪௧௮-௫௦௦, ௪௫௦-௪)

தொண்டைமான் இளந்திரையன், முடியுடை மன்னர் மூவரோடும் ஒருங்குவைத்து எண்ணப்படும் பெருமை உடையனேனும், பேராசிரியர் உள்ளிட்ட பலரும் இவனைக் குறுநில மன்னனாகவே கருதினர்; இது, "வில்லும், வேலும்," என்ற தொல்காப்பியம் மரபியற் சூத்திரத்திற்கு எழுதிய உரையில், "மன்பெறு மரபின் ஏனோர் எனப்படுவார், அரசுபெறு மரபிற் குறுநில மன்னர் எனக் கொள்க. அவை, பெரும் பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளும் காணப் படும்," எனக் கூறும் பேராசிரியர் கூற்றான் தெளிவாதல் காண்க. இளந்திரையன், நல்லிசைப் புலவர் வரிசையில் வைத்து எணணத்தக்க பெருமை வாய்ந்தவனாவன். இவன் பாடிய பாக்கள் நற்றிணையிலும், புறநானூற்றிலும் இடம் பெற்றுள்ளன இறையனார் அகப்பொருள் உரை, நன்னூல் மயிலைநாதர் உரை முதலாயினவற்றுள் இளந்திரையம் என்றொரு நூற்பெயர் குறிக்கப்பட்டுளது; அந்நூலை ஆக்கினான் இவனே என்ப. மயிலைநாதர், நன்னூல் உரைக்கண் திரையனூர், திரையனாற் செய்யப்பட்ட ஊர்; திரையனது ஊர் எனப் பொருள்படும் எனக் கூறுவதை நோக்கின், இவன் தன் பெயரால் ஊர் ஒன்று ஆக்கினான் என உணர்தல் தகும்.

கரிகாற் பெருவளத்தான், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியும், அழுந்தூர் வேள்மகள் ஒருத்

தியும் அருந்தவம் பல ஆற்றிப் பெற்ற மகனுவன்; இவன், பிறப்பதற்குச் சின்னுட்களுக்கு முன்னரே தந்தையை இழந்துவிட்டானுதலின், பிறக்கும்போதே பேரரசு உரிமை பெற்றுப் பிறந்தான் என்ப. இளமையில் நாடாட்சியில் நாட்டம் கொண்டிருந்த தாயத்தாரால் சிறையுற்றுப் பின்னர்த் தன் வாள்துணையும், அம்மான் இரும்பிடர்த் தலையாரின் அருந்துணையும்பெற்றுப் பகைவர் தம திண்ணிய காவலை அழித்து வெளிப்போந்தான்; வெளியேறுங்கால், பகைவர் வைத்த தீயால் கால் வெந்துற்றுக் கருகக், கரிகால் என்ற பெயருடையனுயினுன்; வெளியேறி, விடுதலைபெற்றுத் தன் அரசுரிமையினை அடைந்தபின்னர்ச் சேரமான் பெருஞ்சேரலாதனும், செழியன் ஒருவனும், பதினெரு வேளிரும் கூடி எதிர்க்க, எதிர்த்தாரைக் கோயில்வெண்ணெயில் வெற்றிகொண்டு, தாய் பிறந்த அழுந்தூரில் அது குறித்து விழாக்கொண்டாடி மகிழ்ந்தான்; வாகைப் பறந்தலை எனும் இடத்தே மீண்டும் வந்தெதிர்த்த ஒன்பது மன்னர்களின் குடைகளையும், முரசுகளையும் கைக்கொண்டு வென்று அரசு வீறுகொண்டான்; தமிழ்நாட்டில் ஆங்காங்கே வாழ்ந்துவந்த ஒளியர், அருவாளர், பொதுவர் போன்றாரையும், வடக்கே கங்கைக் கரைவரை வாழ் பேரரசுகளாகிய வச்சிரம், மகதம், அவந்தி நாட்டு அரசர்களையும தன் ஆணை உணருமாறு செய்தான்; காவிரிக்குக் கரை அமைத்து நாட்டுவளம் பெருக்கினுன்; புகார்ப பெருந்துறையைப் புதுப்பித்துப் புறநாட்டு வாணிபத்தை வளர்த்துத் தன் நாட்டுச் செல்வ நிலையினைச் செழிப்புறச்செய்தான்; கடியலூர் உருத்திரங் கண்ணனுர் பாடிய பட்டினப்பாலை கேட்டுப் பதினறு நூறுயிரம் பொன் பரிசளித்துப் பெருமைகொண்டான்.

கரிகாலன் வரலாற்றில் அவன் சிறையினின்றும் வெளிப்போந்த நிகழ்ச்சியும், அவன் ஒளியர், அருவாளர் ஆகியோரை அடக்கியதும, நாடு வளம்பெறச் செய்ததும், கடியலூர் உருத்திரங்கண்ணனுரால் விளங்க உரைக்கப்பட்டுள்ளன. கூரிய நகமும், வளைந்த வரியும் கொண்ட புலிக்

குட்டி கூட்டுள் அடையுண்டு வளர்வதேபோல், கரிகாலன் பகைவர்தம் சிறையகத்தே வாழ்ந்திருந்தான்; பகைவரைப் பாழ்செய்யும் ஆற்றல் வந்துற்றது என அறிந்தவுடனே, தன்னைப் பிடிப்பார் வெட்டிய பள்ளத்தே வீழ்ந்த ஆண் யானை, வருந்திச் செயலற்றுப்போகாமல், தன் இரு கோடுகளாலும், கரைகளைக் குத்திக் குழியினைத் தூர்த்து வெளியேறித் தன் பிடியை அடைந்தாற்போல், அச்சிறையினின்றும் வெளியேறுதற்காம் வழிவகைகளை நுணுகி ஆராய்ந்து முடிவுசெய்து, தன் வாள்துணையால் அப்பகைவரைத் திடுமெனத் தாக்கி அழித்து வெளிப்பட்டுத் தனக்குரிய அரசினைத் தான்பெற்றுச் சிறப்புற்றான் எனக்கூறும் புலவர்தம் உவமை, புலமைநலம் பொலிய விளங்குவதோடு கரிகாலன் அறிவு, ஆண்மை, உரம் ஊக்கம் ஆகியவற்றை உணர்த்தி நிற்பதும் காண்க.

"கூருகிர்க், கொடுவரிகுருளை, கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர், பிணியகத் திருந்து பீடுகொழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு,
நுண்ணிதின் உணர நாடி, நண்ணார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி வாள்கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி."

(பட்டினப்: உஉ0-எ)

"பல் ஒளியர் பணி பொடுங்க,
தொல் அருவாளர் தொழில் கேட்ப,
வடவர் வாட, குடவர் கூம்பத்,
தென்னவன் திறல் கெட
............ ........ .. .........."

"புன் பொதுவர் வழிபொன்ற
இருங்கோ வேள் மருங்கு சாய."

(பட்டினப்: உஎச-அஉ)

என்ற அடிகள் கரிகாலன், ஒளியர், அருவாளர், வடநாட்டரசர், சேரர், பாண்டியர், பொதுவர், இருங்கோவேள்

முதலாயினோரை வென்ற வெற்றிச் சிறப்பினை விளக்கிநிற்றல் காண்க. கரிகாலன், தன் நாட்டு வளம்பெருகச் செய்த வகைகளை விரித்துக்கூறாது, அவன் நாட்டிற் பரவியிருந்த பெரும்பெருங் காடுகளை எல்லாம் அழித்து வயலும், வாய்க்காலும விளங்கும் வளப்புநிறை நாடாக்கி, அவ் வயலும் வாய்க்காலும் நற்பயன் அளித்தற்கு இன்றியமையாததாய நீர்வளம் தருவான் வேண்டி, நிறைநீர்க் குளங்கள் பல தோண்டித் துணைபுரிந்தான் எனச் சுருங்க உரைத்து விளங்க வைத்துள்ளார்; "காடு கொன்று நாடாக்கிக், குளம் தொட்டு வளம் பெருக்கி" திருமாவளவன் என அழைக்கபபெறும் கரிகாலனின் வேலின் விறலையும் கோலின் அருளையும் பாராட்ட எண்ணிய புலவர், அவன் வேல், தலைவன் சென்ற பாலைநிலம் போவார்க்குப் பெருந்துயர் அளித்தலேபோல், பகைவர்க்குப் பெருந்துயா அளிக்கும கொடுமை உடையது; அவன் செங்கோல், தலைமகள் ஒருத்தியின் தோள், அவள் தலைவனுக்கு இன்பம் அளிப்பதேபோல், அவன் நாட்டு வாழ் மக்களுக்கு இன்பம் அளிக்கும் தண்ணளி நிறைந்தது என்று கூறுவாராயினர்.

> "திருமா வளவன் தெவ்வர்க்கு ஓக்கிய
> வேலினும் வெய்ய கானம்; அவன்
> கோலினும் தண்ணிய தடமென் தோளே."
>
> (பட்டினப் : உ௯௯-௩௦௧)

கடியலூர் உருத்திரங்கண்ணனார், தொண்டைமான் இளந்திரையனையும், கரிகாற் பெருவளத்தானையும் பாடமுற்பட்டுத் தமிழ்நாட்டின் இயற்கை வளமும், செல்வ வளமும் ஒருங்கே விளங்கப் பாடியுள்ளார். அந்தணர், ஆயர், உமணர், உழவர் முதலாம உள்நாட்டு மக்கள் குறித்தும், பரதவர் வணிகர் முதலாம் கடற்கரை நகர்வாழ் மக்கள் குறித்தும் அவர் கூறுவன, அக்காலத் தமிழ்நாட்டு நிலையினைத் தெளிய உணரத் துணைபுரிவனவாம்.

மனை முன்னிடத்தே அழகிய சிறு பந்தல்; அப்பந்தர்க் காலொன்றில் கட்டப்பெற்று செழுமையுற வளர்ந்த ஓர்

ஆன் கன்று; ஆப்பியால் மெழுகப்பெற்ற அழகிய வீடு; வீட்டின் அகத்தே அவர் வழிபடு கடவுளரின் படிவங்கள்; நாயும், கோழியும் நாடவும் எண்ணா நல்லிடம்; வேதியர் ஓதும் வேத ஒலிகளைத் தாமும் அறிந்து, அறிந்தவாறே ஓதும் கிளிகள்; இவற்றால் சிறந்து விளங்கும் அந்தணர் சேரி.

> “செழுங்கன்று யாத்த சிறுதாள் பந்தர்ப்
> பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
> மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
> வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
> மறை காப்பாளர் உறைபதி,” (பெரும்பாண் : ௨௯௭ - ௩௦௧)

ஆயர் மகள், புள்ளொலிக்கும் விடியற்காலத்தே எழுந்து, புலி ஒலித்தக்கால் எழும் ஒலிபோல் ஒலி எழுமாறு தயிரைக் கடைந்து மோரும், நெய்யும் கொண்ட கூடையினைப் பூவாற்செய்த சுமையடைமீது கொண்டு சென்று விற்று, மோர் விற்ற பணத்திற்கு உணவுப்பொருள் முதலியனவற்றையும், நெய் விற்ற பணத்திற்குப் பால் கறக்கும் எருமை, பசு, எருமைநாகு இவற்றையும் வாங்கி வருவள்; ஆயர் மகளிர் பொன்னினும், எருமை முதலாயின வாங்கவே விரும்பும் இயல்பினராவர் எனக் கூறி, ஆயர் மகளிரின் மனமாட்சியினை மாண்புறக் காட்டியுள்ளார் புலவர்.

> “நள்ளிருள் விடியல் புள்ளெழப் போகிப்
> புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி,
> ஆம்பி வான்முகை அன்ன கூம்பு முகிழ்
> உறையமை தீந்தயிர் கலக்கி, நுரை தெரிந்து
> புகாவாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
> நாண்மோர் மாறும் நன்மா மேனிச்
> சிறுகுழைத் துயல்வரும் காதின் பணைத்தோள்
> குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்
> அளைவிலை உணவிற் கிளையுடன் அருத்தி,
> நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
> எருமை நல்லான் கருநாகு பெறூஉம்
> மடிவாய்க் கோவலர் குடி.” (பெரும்பாண்: ௧௫௫-௬௬.)

கடற்கரை நகரங்களில், ஏணி இட்டும் ஏறமாட்டா உயரிய மாடங்கள் அமைத்து, கடலிற்செல்லும் கலங்களுக்கு வழிகாட்டும் விளக்குகளை அமைத்து வாழ்ந்தனர் தமிழர். "ஏணி சாத்திய ஏற்றரும் சென்னி, விண்பொர நிவந்த வேயா மாடத்து, இரவில் மாட்டிய இலங்குசுடர் ஒருசிழி, உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும் துறை." (பெரும்பாண்: 347-351) கடல்விளை வெள்ளுப்பைக் கொண்டுசென்று விற்று, அதற்கு விலையாகப் பெற்ற நெல்லை ஏற்றிவந்த சிறுசிறு படகுகள் பல வரிசையாக நிற்கும் படப்பைகளைத் தமிழ்நாட்டின் கடற்கரைநெடுகக் காணலாம். "வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி, நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி, பணைநிலைப் புரவியின் அணைமுதற் பிணிக்கும், கழிசூழ் படப்பை" (பட்டினப்பாலை: 29-32). பால்போலும் வெண்ணிறம் வாய்ந்த குதிரைகளோடு, வடநாட்டு வளம் பலவற்றையும் கொணர்ந்த பெரிய பெரிய நாவாய்கள் பலவும் அப் படப்பைக்கண் வந்துநிற்கும். "பாற்கேழ், வால்உளைப் புரவியொடு வடவளம் தரூஉம், நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை" (பெரும்பாண்: 319-21) கடல் அலைகளால் அசைந்து, அசைந்து நிற்கும் நாவாய்கள், கட்டுத்தறியில் பிணிப்புண்டு ஆடிநிற்கும் களிறுகள்போல் தோன்றும்; கொடி விளங்கும் கூம்புகளையுடைய அத்தகைய, நாவாய்கள் பல புகார்த் துறைக்கண் நின்று காட்சி தரும். "வெளில் இளக்கும் களிறுபோலத், தீம்புகார்த் திரைமுன் துறைத், தூங்கு நாவாய் துவன்றிருக்கை, மிசைக்கூம்பின் நசைக் கொடியும்." (பட்டினப்: 172-5). அக்கால நாவாய்கள் தாமே இயங்கும் இயந்திரப் பொறிகளை உடையன அல்ல; அவை காற்றுச் செலுத்தச்செல்லும் இயல்புடையனவாம்; இத்தகைய நாவாய்களின் துணையைக்கொண்டே தமிழர்கள், குதிரைகள், கரியமிளகு, வடமலையிற் பிறந்த மணி, பொன், குடமலையில் தோன்றிய சந்தனம், அகில், தென்திசைக் கடலிற் பிறந்த முத்து, கீழ்க்கடலில் பிறந்த பவளம், கங்கைக் கரைக்கண் உளவாம் அரும் பொருள், காவிரியாற்றுப் பயனால் உண்டாய பல பொருள், ஈழநாட்டு

உணவுப் பொருள்கள், கடாரநாட்டு அரும்பொருள் ஆய அரிய பெரிய பொருள்கள் பலவும் கொணரவும், கொண்டு செல்லவும்படும்.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்,
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்,
கங்கை வாரியும், காவிரிப் பயனும்,
ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்
அரியவும், பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு."

(பட்டினப் : க அரு-கசுரு.)

உள்நாட்டில் மிக்குத் தோன்றிய பொருள்களை வெளி நாட்டிற்குக் கொண்டுசென்று விற்கவந்தனவும், உள்நாட்டார்க்கு வேண்டும் பொருள்களைத் தருதற்கு வெளிநாட்டினின்றும் கொணர வந்தனவும் ஆய பொருள்கள், நிலத்தினின்றும் நாவாய்களில் ஏற்றவும், நாவாய்களினின்றும் நிலத்தில் இறக்கவும்படும். இத்தகைய பொருள்கள் அளந்தறியமாட்டா அளவினவாயினும், அவற்றை முறையே அளந்தறிந்து, அவற்றிற்காம் சுங்கம் கொள்வோர், ஞாயிற்றின் தேரிற்பூண்ட குதிரைகளேபோல் கடமை தவறாது, தளர்ச்சி நோக்காது தம் கடனாற்றி, உரிய சுங்கத்தினைப் பெற்று, பெறப்பட்ட பொருள்கள்மீது, பெற்றதற்காம் அறிகுறியாகத் தங்கள் அரச இலாஞ்சனையாகிய புலியைப் பொறித்துப் போகவிடுவர்.

"நல்லிறைவன் பொருள் காக்கும்
தொல்லிசைத் தொழின் மாக்கள்
காய்சினத்த கதிர்ச் செல்வன்
தேர்பூண்ட மாஅ போல
வைகல் தொறும் அசைவின்றி
உல்கு செயக் குறை படாது

................................
நீரினின்று நிலத் தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்
அளந் தறியாப் பல பண்டம்
வரம்பறி யாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங் காப்பின்
வலியுடை வல்லணங் கினோன்
புலி பொறித்துப் புறம்போக்கி." (பட்டினப் :கஉ0-நடு.)

வாணிகத் தொழிலின் வளம், வணிகர் தம் நல்லொழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டது; அவர் தம் வருவாயே குறியாய்த் தம் வணிகப் பொருளின் வளத்தினைக் கருதாராயின் வாணிகம் வீழ்ந்துபோம்; அவ்வாறின்றி, தம் வருவாயினும், வாணிகப் பொருள்களின் நேர்மையே பெரிது எனப் பேணும் அறிவினராயின், அவர்கள் வாணிகம் வளரும். வணிகத் தொழிலின் இந் நுட்பத்தை அறிந்தவர் அக் காலத் தமிழ்நாட்டு வணிகர் எனக் கூறுகிறார் கடியலூர் உருத்திரங் கண்ணனார். அவர்கள் நீதி தவறா நெஞ்சுடையவர்; தமக்கும் தம் தொழிலுக்கும் உண்டாம் பழிகண்டு அஞ்சும் பண்புடையவர்; என்றும் வாய்மையே வழங்கும் வாழ்வுடையவர்; தம் பொருள் போன்றே பிறர் பொருளையும் பேணும் பேரறம் படைத்தவர்; கொள்ளும் சரக்கைத் தாம் கொடுக்கும்பொருட்கு மிகையாகக் கொள்ளார்: தாம் கொடுக்கும் சரக்கைத் தாம் வாங்கும்பொருட்குக் குறைத்துக் கொடார்; இத்தகைய வாணிக நெறியால்வந்த வளத்தால் சிறந்தார் என அவ் வணிகர் தம் பண்புகுறித்துப் புலவர் பகர்வன நோக்குக.

"நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது, கொடுப்பதூஉம் குறை
பல்பண்டம் பகர்ந்து வீசும் [கொடாது
தொல்கொண்டித் துவன்றிருக்கை."

(பட்டினப்: உ0எ-கஉ.)

வாணிகம் கருதி வெளிநாடுபோம் பொருள்களுக்கும், வெளிநாட்டினின்றும் போதரும் பொருள்களுக்கும் கடற்றுறையிடத்தே சுங்கம் கொள்வதோடு, உப்பு முதலாம் பொருள்களை உள்நாட்டிற் கொண்டு விற்போரிடத்தும் சுங்கம கொள்வது உண்டு. உமணர் முதலாம் உள்நாட்டு வணிகர்கள் தம் பொருள்களைப் பண்டிகளிலும், கழுதைகள் மீதும் கொண்டு செல்லுங்கால், இடைவழியில் அவர்க்கு இடையூறு நேராவண்ணம் நின்று காக்கும் வில்வீரர் வாழ் சிற்றரண் பலவற்றை ஆங்காங்கே அமைத்து, அவ்விடங்களிலேயே, அவ்வழி வருவாரிடத்தே அவர் பொருட்காம் சுங்கம் கொள்வதையும் அக்கால அரசர்கள் மேற்கொண்டிருந்தனர் எனக் கூறுவர் புலவர் :

> "மிரியல், புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து
> அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
> உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
> வில்லுடை வைப்பின் வியன்காட்டு இயவு."
>
> (பெரும்பாண் : எக-அஉ)

ஒரு நாடு, இவ்வாறு செல்வத்தால் சிறந்து விளங்க வேண்டுமாயின், அந்நாடு குறையாத நீர்வளத்தால் நிறைவுற்றுத் திகழ்தல் வேண்டும்; நீர்வளம், நாட்டில் மழை பெய்வதாலேயே உண்டாம்; ஆனால், அம்மழை என்றும் கிடைத்தல் இன்று; அது பெய்யாதே பொய்த்துப் போவதும், வேண்டுங்காலத்துப் பெய்யாது, வேண்டாக் காலத்துப் பெய்வதும். வேண்டும் அளவிற்கு மேலும் பெய்வதும் உண்டு. இதனால் நீர்வளம் குன்றும்; இக்குறைபாடு உண்டாகாமை வேண்டின், அந்நாடு நீர் அறுப் பேராறுகளைப் பெறுதல் வேண்டும்; பேராறுகள் நீரறாது ஓடவேண்டின், அவ்வாறுகள் பெரிய மலையிடங்களைத் தாம் தோன்றும் இடங்களாகப் பெறுதல் வேண்டும்; அவ்வாறு பெற்ற ஆறுகள் நீர் அறா; அத்தகைய ஆறுகளை உடைய நாடுகள் நீர்வளங்குன்றா; நீர்வளம் குன்றாமையால் நாடு வளம்பெறும். இவ்வுண்மைகளை உணர்ந்தவர் புலவர். காவிரியாறு, சோழநாட்டை வளர்க்கும் தாய்; அக்காவிரி

பாய்வதால், சோழநாடு சோற்றுவளம் படைத்துத் திகழ்கிறது; அவ்வாறு சோணாட்டிற்கு வளம்பல வழங்கும் காவிரி, அவ்வாற்றலைப் பெறுதற்குக் காரணமாயது அதன் பிறப்பிடமே; அது மழையறா மலைகளிடையே பிறந்த பெருமையுடையது. காவிரியாற்றைப் பாராட்ட விரும்பிய புலவர், அதன் பிறப்பிடம் கூறிப் பாராட்டும் புலமைநலம் போற்றற்குரியது.

"வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்." (பட்டினப்: ரு-எ)

கடியலூர் உருத்திரங்கண்ணனார் புலமைநலம் சான்ற பெரியாராவர். அவர் பாக்கள் அரிய நயம் பல செறிந்து தோன்றும்; அவர் எதைக் கூறினும் ஏதேனும் ஓர் அரும் பொருளை உளளடககியன்றிக் கூறார். தொண்டைமான் இளந்திரையனைப் பாராட்ட முன்வந்த புலவர், "அகலிரு விசும்பின் பாயிருள் பருகிப் பகல் கான்று எழுதரு பல் கதிர்ப் பருதி," என்று தொடங்கிப் பாடியுள்ளார். இருள் ஒழித்து ஒளிவிட்டு எழுந்த ஞாயிறு என்பதே இதன் பொருள். இறை இருளைக் குடித்துப் பகலைக் கக்கி எழுந்த ஞாயிறு என்று கூறியுள்ளார்; உலகில் நல்லனவற்றை உட்கொடலும், தீயனவற்றைக் கக்குதலுமே இயற்கை; இவ்வியற்கைக்கு மாறான செய்கையினை ஞாயிற்றுக்கு ஏற்றி, "செயற்கரிய செய்வார் பெரியர்" என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாகிச் சிறந்தான் ஞாயிறு என்று பாராட்டியுள்ளார்; கடற்றிரைதந்த தொண்டைமான் இளந்திரையனைப் பாராட்டவந்த இப்பாட்டின் தொடக்கத்தே, இருள் போக்கி, ஒளிவிட்டுக் கடலிடையே தோன்றும் ஞாயிற்றைக் குறிப்பிட்டது, அவன் பிறந்த குடியை உட்கொண்டாதல் உணர்க. திரையன் பிறந்த பல்லவர் குடிக்கும் சளுக்கியர்க்கும் தொன்றுதொட்டே பகைமை உண்டு. அவன் தன் பகைவராகிய சளுக்கியரை வென்றான்; சளுக்கியர்க்குக் கொடி பன்றி; பன்றி இருள்நிறம் உடையது; ஞாயிறுபோல் கடற்றிரையிடத்தே தோன்றிய திரையன்,

இருள்நிறப் பன்றிக் கொடியராய சளுக்கியரை வென்றான் என்ற நிகழ்ச்சியை உளத்தே கொண்டவராய புலவர், அது குறிப்பாற் றோன்றுமாறு பாயிருள் பருகிப் பகல் கான்று எழுதரு ஞாயிற்றினை அவனைப் பாடிய பாட்டின் முதற்கண் வைத்துப் பாடிய புலமைநலம் நவிலுந்தொறும் நயம் நல்கிநிற்றல் காண்க.

திரையனைப் பாராட்டிய பிறிதோரிடத்தே, புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார், திரையன் யானையைத் தாக்கி வென்ற சிங்கஏறு, பின்னர்ப் புலிக்குட்டியையும் தாக்கினாற் போலும் ஆற்றல் உடையான் என்று கூறுகிறார்; இவ்வுவமை, அஞ்சாமை, ஆண்மை, ஆற்றல் ஆகிய பண்புகளைப் புலப்படுத்தி நிற்பதோடு, அவன் போர்ச்செயல் சிலவற்றையும் குறித்துநிற்கிறது. பல்லவர்க்குச் சிங்கக்கொடியும், சோழர்க்குப் புலிக்கொடியும், கங்கர்க்கு யானைக் கொடியும் உண்டு என்பது அனைவரும் அறிந்ததே; பல்லவர்க்கு வடக்கே வாழ் கங்கரும், தெற்கே வாழ் சோழரும் பகைவராவர்; பல்லவர் வடபுலவாழ்நராகிய கங்கரை வென்றார் என்பதும், பல்லவர் எனப்படும் தொண்டையர் சோழரோடும் போர் செய்தனர் என்பதும் வரலாறு கண்ட உண்மைகளாகும்; இவ்வரலாற்று நிகழ்ச்சிகளை உணர்த்தவே புலவர், இவ்வழகிய உவமைகூறி அவனைப் பாராட்டுவாராயினர்.

> "பொறிவரிப் புகர்முகம் தாக்கிய வயமான்
> கொடுவரிக்குருளை கொளவேட் டாங்கு."
>
> (பெரும்பாண்: ௪௪௮-௯)

இவ்வுவமையுள் வயமான், புகர்முகத்தைத் தாக்கிற்று, கொடுவரிக்குருளையைக் கொளவிரும்பிற்று என்று கூறியது, பல்லவர் கங்கரைத் தாக்கினர்; சோழரைத் தாக்க விரும்பினர்; ஆனால் தாக்கினாரல்லர் என்ற வரலாற்றுச் செய்திகளோடு ஒத்துநிற்றல் காண்க.

ஒரு நாட்டில் வாழும் மக்களுக்கு அந்நாட்டு அரசராலும், அணங்குகளாலும், விலங்குகளாலும், கள்வர்

களாலும் அச்சம் உண்டாம் என்ப; நல்லரசராவார் தம்மால், தம் அமைச்சர் முதலாம் சுற்றத்தாரால், தம் பகைவரால், கள்வரால், காட்டுவாழ் கொடுவிலங்குகளால், கடவுளரால் கேடுறுவண்ணம் நாடாள்தல்வேண்டும் என்ப; இந்நல்லாட்சி, திரையன் ஆண்ட தொண்டைநாட்டில் நிலவிற்று என்பதைக் கூறவந்த புலவர், அந்நாட்டிற்குப் புதியனாய ஓர் இரவலனை நோக்கி, "இரவல! திரையன் அல்லனை கடிந்து நல்லனை ஓம்பும் அறநெறி நிற்போன் ஆதலின் அரசரால் உண்டாம் ஏதம் கண்டு அஞ்சவேண்டுவதின்று; அவன் நாடு காவல்செறிந்த நன்னாடு; அவனுடைய இப்பரந்த நாட்டுள் எங்குச் செல்லினும் வழிப் போவாரை வருத்தி அவர் கைப்பொருளைக் கொள்ளை கொள்ளும் கள்வர்களை யாண்டும் காணல் அரிதாம்; ஆகவே, கள்வரால் வரும் ஏதத்துக்கு அஞ்சவேண்டுவதின்று; அவன் நாட்டில் இடியும் இடித்து இடையூறு செய்யா; பாம்புகளும் கடித்துக் கொல்லுதல் அறியா; காட்டுவாழ் புலி முதலாம் கொடுவிலங்குகளும் கொடுமை செய்யா; ஆதலின் அவைகண்டும் அஞ்சவேண்டுவதின்று; ஆகவே, நீ விரும்பியவாறு வேண்டிய இடத்தே இருந்து இளைப்பாறி இளைப்பாறிச் செல்வாயாக!" என்று கூறியுள்ளார்; "பல்குழுவும், பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும், கொல்குறும்பும் இல்லது நாடு" என்ப. "ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் யான் வாழும் ஊரே" எனப் புலவர் ஒருவர் தம் நாட்டின் சான்றோர் வாழ்பெருமையினைப் பாராட்டுவதும் நோக்குக! தொண்டைநாடு சான்றோர் வாழ்வால் சிறப்புற்றது என்ப; "தொண்டைநாடு சான்றோருடைத்து" என்ற செய்யுளும் உண்டு. தொண்டைநாட்டின் இத் தொன்மைச் சிறப்புத் தோன்றவே புலவர் திரையன் நாடு, கொடியோர் அற்றது எனக் கூறுவாராயினர்; இவ்வாறு, "அணங்கே, விலங்கே, கள்வர், தம்இறை எனப், பிணங்கல் சாலா அச்சம் நான்கே" எனத் தொல்காப்பியர் காட்டும் அச்சம் நான்கும் அவன் நாட்டில் இல்லை எனக்கூறிய நயம் நோக்கி மகிழ்வோமாக!

"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன் படர்குவி ராயின்,
கேள் அவன் நிலையே; கெடுகநின் அவலம்!
அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வெளவும் களவுஏர் வாழ்க்கைக்
கொடியோர் இன்று அவன் கடியுடை வியன்புலம்
உருமும் உரறாது; அரவும் தப்பா;
காட்டு மாவும் உறுகண் செய்யா; வேட்டாங்கு
அசைவுழி அசைஇ, நசையுழித் தங்கிச்
சென்மோ இரவல!" (பெரும்பாண்: ௩௫-௪௫)

தொண்டைநாடு கள்வர் அற்றது எனக்கூறிய புலவர் அதற்கு ஓர் எடுத்துக்காட்டினைக் காட்ட விரும்பினார்; உழவர்கள் அரிந்து கொணர்ந்துபோட்ட கட்டுப்போர் நாள் பல ஆயினும் கள்வரால் களவாடப்பெறாப் பெருமை யுடையது என்று கூறினார்: அப் போர் கள்வர் கைப் படாதது என்பதைக் கூற விரும்பிய புலவர், அதை அவ்வாறே கூறாமல், அப் போரைச் சூழச் சுற்றிய சிலந்தி யின் வலைகள் சிதையாமல் நிற்கும் என்று கூறித் தாம் கருதிய பொருள் விளங்கச் செய்துள்ளார் "சிலம்பி வால் நூல் வலந்த மருங்கின், குழுமுநிலைப் போரின் முழு முதல்," (பெரும்பாண்: ௨௩௬-௨௩௭.)

தொண்டைநாடு வற்றாத வளம் நிறைந்தது; அந் நாட்டில் பல்லாண்டிற்குமுன் விளைந்த பண்டங்களும் தின்னப் பெறாமல் திரண்டுகிடக்கும; அவ் வுணவுப் பொருள்கள் இட்டு வைக்கப்பெற்ற கூடுகள், பல்லாண் டாகியும் கை வைக்கப்பெறாமல் கிடக்கும். இந்த வளத் தின் வனப்பினைக் கண்டார் புலவர்; கன்னிப் பெண்கள், கன்னியராகவே காலங் கழியின், அவர் அழகு அனுபவிப் பார் இன்றியே அழிந்து கெடும்; அவ்வாறு கெட்டாரைக் குமரி மூத்தார் என்ப; இது உலக வழக்கு; இவ் வுலக வழக்கினை உணவுக் கூடுகளுக்கு ஏற்றிக் கூறியுள்ளார் புலவர்; அக் கூடுகளில் இட்ட உணவு ஆண்டு பலவாகியும் உண்ணப்பெறாது கிடக்க, அக் கூடுகள்மட்டும் ஆண்டுப்

பன்மையால் அழியும்நிலை பெறுவது குமரிகள் மூத்ததைப் போலும் எனக்கூறும் அவர் சொல்லோவியம் சுவைமிக்குத் தோன்றல் காண்க!

"ஏணி எய்தா நீள்நெடும் மார்பின்
முகடுதுமித்து அடுக்கிய பழம்பல் உணவின்
குமரி மூத்தகூடு ஓங்கு நல்லில்."
(பெரும்பாண் : ௨௪௫-௭)

சோழநாடு செல்வத்தாற் சிறந்தது; பகைவரால் உறும் அச்சம் அற்றது கரிகாற் பெருவளத்தானின் ஆட்சிச் சிறப்பாலும், ஆற்றலாலும் சோணாடு பெற்ற இப் பெரும பேற்றினை விளக்கவந்த புலவர், தங்கள் தங்கள் மனைகளின் முன்னிடத்தே உணவுப் பொருள்களை உலரவிட்டுக் காவல்புரிந்து நிற்கும் மகளிர் அவ்வுணவுப் பொருள்களை உண்ணவரும் கோழிகளை விரட்ட வேறொன்றும் காணாராய்த் தம் காதில் அணிந்துள்ள குழைகளையே கழற்றி அவற்றை நோக்கி எறிந்து ஓட்டுவர் எனக் கூறும்முகத்தான் அந்நாட்டின் வளத்தின் சிறப்பினையும், மகளிர் உணவினைக் காதத்துநிற்கும் தெருவழியே நடைத்தேர் ஓட்டிவரும் சிறுவர், தாம் உருட்டிவரும் அத்தேர் உருளைகளை, அம் மகளிர் எறிந்த பொற்குழைகள் தடுத்து நிறுத்தல் கண்டு அழுவர்; இவ்வாறு நடை பயில்சிறார் தம் தேரை மகளிர் பொற்குழை தடுத்து நிறுத்தும் பகையல்லது வேறு பகைவர் அந் நாட்டார் அறிந்திலா எனக் கூறுமுகத்தான் அந் நாட்டின் பகையற்ற பெருமையினையும் பாராட்டியுள்ளமை காண்க!

"அகன்நகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதல் மடநோக்கின்
நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
கோழிஎறிந்த கொடுங்கால் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்கால் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்கு பகை யல்லது கலங்குபகை அறியாக்
கொழும் பல் குடி." (பட்டினப் : ௨0-௨௭)

கடியலூர் உருத்திரங் கண்ணனார், அழகிய உவமைகளை எடுத்து ஆளவேண்டிய இடம் அறிந்து ஆளும் அறிவினராவர்; "தானறி பொருள்வயின் உவமை வேண்டும்," என்ப; அறியாத ஒருபொருளை அறிவிக்கவே உவமை ஆளுதல் வழக்கமாம்; ஆதலின், அவ்வாறு ஆளும் உவமை, அறிவிப்பானும், அறிவிக்கப்படுவானும் அறிந்த பொருளாதல் வேண்டும்; பாணன் ஒருவன், வழிவரும் மற்றொரு பாணனுக்கு உமணர் உப்பேற்றிச்செல்லும் பண்டியின் உறுப்புக்களை விளக்கிக் கூறத்தொடங்கி, அப் பண்டியின் குடத்தினைக் கூறுங்கால், அது முழவுபோலும் என்று கூறியுள்ளார். முழவு, இடை பருத்து இரு தலையும் சிறுத்து விளங்கும்; இது, முழவுயோகம் என்பது. பிறக்கும்போதும், இறக்கும்போதும் வளங் குறைந்தும் இடைக்காலத்தே வளம் பல பெற்றும் வாழும் வாழ்வினைக் குறிக்கும் என்பதால் தெளிவாம்; முழவின் இவ் வியல்பினை ஈண்டுக் கூறுவோனும், கேட்போனும் ஆய இருவரும் அறிவர்; இருவரும் பாணர் ஆதலின்; ஆகவே அவர் அறிந்த முழவினை, முழுமரத்தைக் கடைந்து நடுப் பருக்கவும், இரு தலையும் சிறுக்கவும் செய்யப்பெற்ற வண்டியின் குடத்திற்கு உவமை கூறியது மிக மிகப் பொருந்தி நிற்றல் காண்க. "முழவின் அன்ன முழுமர உருளி" (பெரும்பாண்: சஎ.)

திரையன் நட்பினைப் பெறவேண்டிய அரசர்களும், திரையனைத் தம் படைத்துணையாளனைப் பெற விரும்பிய அரசர்களும் பலராவர்; அவர்கள் அனைவரும் தம் எண்ணம் ஈடேறவேண்டி, அத் திரையன் விரும்பும் பொருள் பலவும் கொண்டு, அவன் கச்சி நகர்ப்புக்கு, அரண்மனை வாயிலில் காத்துக் கிடப்பாராயினர்; ஆங்கு வந்துற்ற அரசர் மிகப் பலராதலின், அவர் அனைவரும் ஒருசேரச் சென்று அவனைக் காணுதல் இயலாது; ஒருவர் ஒருவராகவே உட்சென்று மீளல் இயலும்; உள்ளே சென்றார் மீளுங்காறும் வெளியே நிற்பார் காத்துக்கிடத்தல் வேண்டும்; இந்தக் காட்சியைக் கண்ணுற்ற புலவர், கங்கைக்கரையில் கண்ட

காட்சியொன்றை நினைந்து உவமை காணுவாராயினர்; கங்கையாறு கடத்தற்கு அரிய பெருமையுடையது; வறுமையாலோ, அன்றி வேறு கொடுமையாலோ, அக் கங்கையைக் கடந்து வேற்றுநாடு செல்ல விரும்பினர், அக் கங்கைக் கரைவாழ் மக்கள்; விரும்பிய மக்கள் அனைவரும், கங்கைக் கரைக்கண் குவிந்து நின்றனர்; அவர்கள் குவிந்து நிற்பினும், அக் கங்கையைக் கடக்கத் துணைபுரிவது ஒரு தோணியே; அத்தோணி சிலரை ஏற்றிக்கொண்டு அக்கரை சென்று, ஆங்கு அவரை விடுத்து மீளும்வரை இக் கரையில் இருப்பார் கவலையோடு காத்துக் கிடத்தலன்றி வேறு செய்வதறியார். இவ்வாறு கங்கைக்கரையில் காத்துக் கிடக்கும் கவலைநிறை மக்களைக் கண்ட புலவர், அவர்களைத் திரையனைக் காணவேண்டி அவன் அரண்மனை முன்னிடத்தே காத்துக்கிடக்கும் அரசர்களுக்கு உவமை கூறியுள்ளார்:

"நட்புக் கொளல் வேண்டி நயந்திசி னோரும்,
துப்புக் கொளல் வேண்டிய துணையி லோரும்,
.................. ..................................
பொன் கொழித்து இழிதரும் போக்கரும் கங்கைப்
பெருநீர் போகும் இரியல் மாக்கள்
ஒருமரப் பாணியில் தூங்கி யாங்குத்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றம்."

(பெரும்பாண்: ௪௨௫-௩௫)

தம்மைப் போற்றிக் கூறும் புகழுரைகள் பொன்றாது மேலும் மேலும் வளர்தலை விரும்பிய மக்கள் அமைத்த அறச்சாலைகளில் ஆக்கிய சோற்றை வடித்துவிட்ட கஞ்சி ஆறுபோல் பரந்தோடி, பரந்தோடிய அவ்விடத்தே எருதுகள் பல கூடிப் போர்புரிந்தமையால் சேறாகி, அச் சேற்றின்மீதே தேர் பல பகைாலும் ஓடித்திரிந்தமையால், பொடியாகிப் பறந்து எழுந்து, அருகே இருந்த வெண்ணிறக் கோயிலின்மீது படிந்து அதைச் சாம்பற் பூசப் பெற்ற களிறுகள்போல் தோன்றச்செய்யும் எனக்கூறி,

அக்கால அறச்சாலைகள், அவற்றை அமைத்து அறம் வளர்ப்பார் ஆகியோர்தம் அருமைபெருமைகளையும், தம் புலமையினையும் உலகோர் போற்ற உணர்த்திய திறம் உணர்ந்து உளம் மகிழ்வோமாக!

> "புகழ் நிலைஇய மொழிவளர
> அறம் நிலைஇய அகன் அட்டில்
> சோறு வாக்கிய கொழுங்கஞ்சி
> யாறுபோலப் பரந் தொழுகி
> ஏறுபொரச் சேறாகித்
> தேரோடத் துகள் கெழுமி
> நீறுஆடிய களிறு போல
> வேறுபட்ட வினை ஓவத்து
> வெண்கோயில் மாசு ஊட்டும்." (பட்டினப்: சஉ - ருO)

யானை, அரவு, இடியேறு இவைகண்டு அஞ்சாதார் இக்காலத்தும் அரியர்; ஆனால் பழந்தமிழ்நாட்டு மகளிரும் இவைகண்டு அஞ்சார்; மகளிர் அஞ்சாமை மட்டும் அன்று; அம்மகளிருள் முதற்சூல் உற்ற மகளிரும் அவைகண்டு அஞ்சார் எனின் அவர்தம் ஆற்றலை என்னெனக் கூறுவது? இத்தகைய வீரம் செறிந்த வயிற்றிற்பிறந்த அக்கால ஆடவர் புலிபோலும் பெருவிறலுடையராய் விளங்கினர் என்பதில் வியப்பும் உண்டோ? கடியலூர் உருத்திரங் கண்ணனார், நாம் கண்ட வீரத்தாய்மார்களையும், அவர் வயிற்றகத்தே பிறந்த பேராண்மையாளர்களையும் நம்முன் காட்டுகிறார் நாம் அறிவுபெற; அறிந்து அறிவுபெறு வோமாக!

> "யானை தாக்கினும், அரவுமேற் செலினும்
> நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
> சூன்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை
> வலிக்கூட்டுணவின் வாட்குடிப் பிறந்த
> புலிப் போத்து அன்ன புல்லணற் காளை."
> (பெரும்பாண்: கஙௌ - அ)

பொருள் தேடிப் புறப்படத் தூண்டும் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! நாம் போகும் காடு, கரிகாலன் பகை

வரை நோக்கி ஏந்திய வேலினும் கொடுமை மிக உடைய தாம்; நம் தலைவியின் தோள்களோ, அக்கரிகாற் பெரு வளத்தான் செங்கோல் நிலவும் ஆட்சியினும் மிக்க இன் பத்தைத்தரும் தண்ணளி நிறைந்தனவாம்; ஆதலின் நெஞ்சே பிரிந்து சென்று பெறும் பொருள், அக் கரிகால னுக்கு உரியதும், பல்வளமும் பொருந்தியுள்ளமையால் குறைவறு வாழ்வுடையதுமாய காவிரிப்பூம்பட்டினமே யாயினும், யான் இவளைப் பிரிந்துவாரேன்," எனக் கூறினன் ஒரு தலைமகன் எனப் பாடிய பட்டினப்பாலையால் அக்கால ஆண்மகன் உள்ளத்தை உணரத் துணைபுரிந் துள்ளார் புலவர்.

"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய
வாரேன்; வாழிய நெஞ்சே" ..... (பட்டினப்: உகஅ-உ0)

.......................................

திருமாவளவன் தெவ்வர்க்கு ஓக்கிய
வேலினும் வெய்ய கானம்; அவன்
கோலினும் தண்ணிய தடமென் தோளே."
(பட்டினப்: உகூகூ-ௗ0க)

வெளவால்கள் பகற்காலமெல்லாம் பழைய மரங்களில் பதுங்கியிருந்துவிட்டு, மாலை வந்துற்றதும் பழம் நிறைந்த மரங்களைத் தேடிச்சேறல் என்றும் நிகழ்வது; ஆனால், கணவன் பிரியாதிருக்கப் பெண்டிர்க்கு, அவனோடு அள வளாவிநிற்பதற்கே நேரமின்மையால், அவர்கள் அப்போது மாலைக் காலத்தையோ, அக்காலத்தே பழம் தேடிச் செல்லும் பறவையினையோ காணல் இயலாது; அவர் பிரிந்துவிட்டாராயின், அம்மகளிர் மாலையைக் காணக்காண வருந்துவர்; அவர்க்கு அக்காலை வேறு தொழில் இன்மை யால், தம் தொழிலாற்றித் தம் கூடு அடையும் பறவை களையே அன்றி, அப்பறவைகளுக்கு மாறாக, அவை கூடு திரும்பும் அக்காலத்தே தன் வாழிடம் விட்டுப் பழமரம் தேடிப்போகும் வெளவாலையும் நோக்கிநிற்பள்; அதன் தொழிலே அன்றி, அதன் உடலமைப்பும் அவளால்

உணரல் இயலும்; வௌவாலை அவள் நன்கு அறிதற்கு, அதற்கும் தலைவற்கும் உள்ள ஓர் ஒற்றுமையும் காரணமாம்; அது, தான் பகற்காலமெல்லாம் வாழ்ந்திருந்த மரத்தைத் தனியேவிட்டுப் பழம் தேடிப் போகிறது; தலைவனும் தான் தனித்திருக்கப் பொருள் தேடிப் போயுளான். இதனால் வௌவாலை அவள் நன்கு அறிந்துளாள்; அதிலும், தலைவன் பிரிந்திருக்கும் காலத்தில் அறிந்துளாள். இவ்வாறு அறிந்து வருந்தினாள் ஒரு பெண், தன் கணவன் பொருள் தேடிப் பிரிந்து போன காலத்து எனப்பாடி அக்காலப் பெண் ஒருத்தியின் உள்ளத்தையும் உணர்த்தியுள்ளார் :

> "நெடுநீர் ஆம்பல் அடைப்புறத் தன்ன
> கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை
> அகல்இலைப் பலவின் சாரல் முன்னிப்
> பகல்உறை முதுமரம் புலம்பப் போகும்
> சிறுபுன் மாலை உண்மை
> அறிவேன் தோழி! அவர்க் காணா ஊங்கே."
>
> (குறுந் : ௩௱௫௨)

கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் பெருமையினையும் அவர் பாக்களின் நலத்தினையும் கூறிக்கொண்டே செல்லின் ஏடு விரியும்; அவற்றின் நலத்தினை எல்லாம் அவற்றை அறிந்து அகமகிழ்வாராக.

## ௬. கருங்குள வாதனார்

ஆதனார் என்ற இயற்பெயருடைய இவர் பிறந்த ஊராகிய கருங்குளம் பாண்டிநாட்டில் உளது; அஃது இக்காலே, கோட்டைக் கருங்குளம் என வழங்குகிறது. கல்வெட்டுக் காலத்தே, "கருங்குள வளநாட்டுக் கரிகால சோழ நல்லூரான கருங்குளம்" (A. R. No 269 of 1928) என வழங்கப்பட்டுளது. இவர், கரிகாற் பெருவளத் தானைப் பாடியுள்ளமையாலும், இக் கருங்குளம், கரிகால் சோழ நல்லூரான கருங்குளம் என அழைக்கப்பெற்றுள்ள மையாலும், இவ்வூர், கரிகாற் சோழனால், தன்னைப் பாடிய ஆதனார்க்குத் தன் பெயரால் தரப்பட்ட தனிச்சிறப்புடைய தாம் எனக்கோடல் பொருந்தும். ஆதன் என்ற பெயர், சேர வேந்தருள் சிலர்க்கு இட்டு வழங்கும் இயற்பெயரா தலின், இப்புலவர் கருங்குள ஆதனார், அச்சேரவரச இனத் தோடு தொடர்புடையவராவா எனவும் கொள்க. இவர் பெயர் ஏடுகளில் கருங்குழலாதனார் என இருத்தல் கொண்டு, இவரைப் பெண்பாற் புலவருள் ஒருவராகக் கொள்வதும் உண்டு. இவர், கரிகாற் பெருவளத்தான் காலத்தே வாழ்ந்து அவன் வெற்றிச்சிறப்பினை விளங்கப் பாடிப் பரவியதோடு, அவன் இறந்தபின்னரும் இருந்து பாடி இரங்கியும் உள்ளார்.

கரிகாற் பெருவளத்தான், இரவென்றும் பகலென்றும் பாராது பகைவர் நாடுகளைப் பாழ்செய்து மகிழ்வதே தொழிலாகக்கொண்ட போர் வெறியுடையனாய் விளங்கு வதால், அவன் பகைவர் நாடுகள் அனைத்தும், தம் வளம் முற்றும் இழந்து வறுமையுற்று, வனப்பிழந்து வாடிக் கெடுதலைக் கண்டுகண்டு கலங்கிய கருணைநிறை உள்ளத் தராய நம் புலவர், கரிகாற்பெருவளத்தான் முன்சென்று அவன் பகைவர் நாட்டில் எழுப்பிய பெருந்தீவிளக்கம், தங்கள் நாடு அவன் இட்ட பெருந்தீயால் பாழாவது கண்டு அம்மக்கள் எழுப்பும் அழுகைப் பெருங்குரல், அவன் அப் பகைவர் நாட்டினின்றும் கைப்பற்றிய கணக்கிடலாகாப்

பெரும்பொருள், ஆறுகளிலும் ஏரிகளிலும் நிறைந்துள நீர் உடைத்த உடைப்புக்களை அடைத்தற்கு மண் கிடைக்கப்பெறுமையால், ஆங்கு அளவிறந்து கிடைக்கும் மீன்களைக்கொண்டே அவ்வுடைப்புக்களை அடைக்கும் அப்பகைவர் நாட்டு வளம், அவனோடு பகை மேற்கொண்டமையால் அழிந்து ஒழிதல் ஆய இவற்றையெல்லாம் எடுத்துக் கூறி அவன் வெற்றிச் சிறப்புக்களை விரித்துக்கூறிப் பாராட்டுவார்போல், அவன் போர் வெறியால் உண்டாம் விளைவுகளை விளங்கக்கூறி அவன் உளம் திருந்தும் வகை அறிவுரை கூறியுள்ளார் நம் புலவர்.

> "எல்லையும், இரவும் எண்ணாய், பகைவர்
> ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்
> கொள்ளை மேவலை யாகலின் நல்ல
> இல்ல வாகுபவால் இயல்தேர் வளவ!
> தண்புனல் பரந்த பூசல், மண் மறுத்து,
> மீனிற் செறுக்கும் யாணர்ப்
> பயன்திகழ் வைப்பின் பிறர் அகன்தலை நாடே."
>
> (புறம்: எ)

கரிகாற் பெருவளத்தான், பற்றற்கரியது பகைவர் அரண் எனக் கருதும் பண்புடையானல்லன்; ஆற்றல் நிறை அரண் பலவற்றை அழித்துப் பற்றிய பேராண்மையாளன்; இரவும் பகலும் போர் நிகழ்ச்சியே பொருளாகக் கொண்ட அவன் மனைவியோடிருந்து மகிழ்ந்துறையும் இல்லற மாண்பறியானல்லன்; அவரோடு இருந்து அன்பு நிறை வாழ்க்கையுடையவன்; போர் மேற்கொண்டு பெரும் பொருள் ஈட்டுவதும், ஈட்டியபெரும்பொருளை இல்லறத்தே இனிய மனைவியோடு இருந்து நுகர்வதுமே வாழ்க்கையின் பயனும் எனக்கருதும் வளமிலா உளத்தனல்லன்; பெற்ற பெரும்பொருளைப் பாடிவரும் பாணர் முதலாயினோர்க்கு வழங்கி வாழ்ந்த வளம்நிறை உள்ளத்தன் ஆவன்; அரசராவார், முறைவேண்டினோர்க்கும், குறை வேண்டினோர்க்கும் அரசவை அமர்ந்து அறமுரைக்கும் ஆற்றல் உடையராதல் வேண்டும் என்ற அரசியல் அறிவிலும் குறையுடையா

னல்லன்; இப்பண்புகளால், இவ்வுலகத்தே இறப்ப உயர்ந்த பெருவாழ்வு பெற்ற கரிகாற் பெருவளத்தான், மறுமையிலும் மாண்புநிறை வாழ்க்கையினை வேண்டி, அது தரும் வேள்வி பலவற்றையும் ஈண்டே விரும்பி ஆற்றிய அறநெறியாளன்.

இவ்வாறு உயர்ந்த பண்புகளால் உலகம் புகழ வாழ்ந்த கரிகாலன் இறந்தானாதல் கண்ட புலவர் கருங்குள ஆதனார், அவன்பால் தாம் கண்ட அவ் அருங்குணங்களை எல்லாம் எண்ணி எண்ணி ஏங்கி இரங்கியுள்ளார்; அவன் பிரிவால் உண்டாய துயரினும், அவன் பிரிவு கண்டு பெரிதும் வருந்தும் அவன் உரிமை மகளிரின் இழை களைந்து நின்ற இரங்கத்தக்க நிலை காண்டலால் உண்டாய துயரே புலவர் உள்ளத்தைப் பெரிதும் துன்புறுத்தியுளது. அவன் வாழ்ந்த காலத்தே உச்சிமுதல் உள்ளங்கால் வரை உள்ள ஒவ்வொரு உறுப்பும்தோறும் அணிபல அணிந்து அழகு மிக்கு நின்ற அவர்கள், அவன் இறந்துவிட்டானாக, அவ்வணிகளை எல்லாம் அறவே இழந்து நின்றனர்; அணி இழந்து நின்ற அவர்தம் காட்சி இடையர் தம் ஆடுகள் தின்னற்பொருட்டுக் கொய்து விட்டாராகத் தழை முற்றும் இழந்துநின்ற வேங்கை மரத்தினை அவர் மனக் கண்முன் கொணர்ந்து காட்டிக் கழிபெரும் கலக்கம் தருவதாயிற்று. அக்காலை அவர் அழுது பாடிய பாடல் இது:

"அருப்பம் பேணாது அமர்கடந் ததூஉம்
துணைபுணர் ஆயமொடு தசும்புடன் தொலைச்சி
இரும்பாண் ஒக்கல் கடும்பு புரந்ததூஉம்,
அறம் அறக்கண்ட நெறிமாண் அவையத்து
முறைநற்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கை துகளறு மகளிரொடு
பருதி உருவிற் பல்படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழில் முடித் ததூஉம்
அறிந்தோன் மன்ற அறிவுடை யாளன்;
இறந்தோன் தானே; அளித்து இவ்வுலகம்;

அருவிமாறி அஞ்சுவரக் கடுகிப்
பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த ஆயத்துப் பயனிரை தருமார்
பூவாள் கோவலர் பூவுடன் உதிரக்
கொய்துகட்டழித்த வேங்கையின்
மெல்லியல் மகளிரும் இழைகளைந் தனரே."

(புறம் : உஉச)

மகளிர் இழை களைந்து நின்ற நிலைக்குத் தழை இழந்து நிற்கும் வேங்கையினை உவமை கூறிய புலவர், அத் தழை, அருவி நீர் அற்று, வறுமையுற்ற காலத்தே ஆடு களுக்கு உணவாகிப் பயன்படும் எனக் கூறியது, பாணர் முதலாம் இரவலர், கரிகாலன் இறந்துவிட்டானாகத் தம்மைப் புரப்பாரை இழந்து வருந்திய காலத்தே, அவன் மகளிர் கழித்த இழைகள் அவர்க்குக் கிடைத்துப் பயன் அளிக்கும் எனப் பொருள் தந்து, அவன் மகளிர்தம் கொடைக்குணத்தினைக் குறிப்பால் போற்றுதற்குப் போலும்! என்னே புலவர்தம் புலமை!

## ரு. கருவூர் ஓதஞானி

ஓதஞானி, பரந்த அறிவுடையான் எனப் பொருள் படும் ஒரு பெயர்; இவர்பால் அமைந்துகிடந்த பேரறிவின் திறங்கண்டு வியந்த அக் காலமக்கள், இவரை ஓத ஞானி எனப் பெயரிட்டுப் போற்றினர்.

பொருள் வேண்டிப் பிரியும் நிலை வந்துற்றது ஒருவனுக்கு; தலைமகளைப் பிரிந்தால், காமநோய் அவனைப்பற்றி வருத்தும்; வருத்தும் அந் நோய்க்கு, அவன் செல்லும் நாட்டில் மருந்து கிடைத்தல் அரிதாம்; அதற்கு மருந்தாவாள் அவளே ஆவள்; செல்வம் வேண்டிச் செல்லுதல், அச் செல்வத்தால் இன்பம் நுகர்தற் பொருட்டேயாம்: அச் செல்வத்தாலாம் இன்பத்தினும் மிக்க இன்பமாவாள் தலைமகளே; இவ்வாறு, தலைமகள் தன் நோய் நீக்கும் மருந்தாகவும், தான் நுகரும் இன்பம்தரும் பொருளாகவும் பயன் தருதல் அறிந்தும், அவளைவிட்டுப் பிரிதல் அறிவுடைமை யன்று; பொருள் தேடிச்சென்று, ஆங்கு அவள் பிரிவாலாம் காமநோயுற்று, அது தீர்க்கும் மருந்து பெறாது வருந்தி வறிதே மீள்வது அறிவுடைமையாகாது; அகத்தே அவையிருக்கப் புறத்தே பொருள்தேடிப் புறப்படல் அறிவுடைமையால் மேற்கொள்வதன்று என்று இவ்வாறெல்லாம் எண்ணி, அவளைப் பிரியவும் மாட்டாது பிரியாது இருக்கவும்மாட்டாது வருந்தலாயினன்; தலைமகனின் இவ் வுள்ளநிலையினை நன்கு உணர்ந்த புலவர், அதை அழகிய சிறுபாட்டொன்றின்வழி அறிவித்துள்ளார்.

> "மருந்தெனின் மருந்தே; வைப்பெனின் வைப்பே;
>
> ..........................................................
>
> பெருந்தோள், நுணுகிய நுசுப்பின்
> கல்கெழு கானவர் நல்குறு மகளே." (குறுந் : எக)

## ௬௰. கருவூர்க் கண்ணம் புல்லனார்

இவர் பெயர், கருவூர்க் கண்ணம் பாளனார் எனவும், கருவூர்க் கண்ணம் பாணனார் எனவும், கருவூர்க் கண்ணன் பரணனார் எனவும், கள்ளம் பாளனார் எனவும் ஏடுகளில் காணப்பெறும். இவர் தந்தை பெயர் கண்ணன்; புல்லனார் என்ற இவர் பெயர் புலவனார் என்பதன் மரூஉ வடிவாம் என்று கூறுவாரும் உளர்; இவர் பிறந்த ஊர் கருவூர்; இக் கருவூர், சேரநாட்டு வஞ்சிக் கருவூராம்; இவர் தம்முடைய பாட்டொன்றில், தம்மூரை அடுத்து விளங்கிய 'சேரன் வஞ்சியினை, "ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சி அன்ன என் வளநகர்" (அகம் : உ௬௩) எனப் பாராட்டியுள்ளார். இவர் பாடிய பாடல்கள் ஐந்து; அகத்தில் மூன்று; நற்றிணையில் இரண்டு.

தன் மகள் தக்கான் ஒருவனுடன் சென்றுவிட்டாள் என்பதறிந்த தாய், தமர், தான் விரும்பிய ஒருவனுக்குத் தன்னை மணம் செய்து தாராவழி நற்குடி வந்த பெண் ஒருத்தி, தன் கற்பினைக் காத்துக்கொள்ளும் வழி, தமரை நீத்துத் தலைவனோடு சென்று மணந்து மாண்புறுவதே என அறிந்த அறிவினளாதலின், அவள் தம்மைப் பிரிந்து போய்விட்டமைக்கு வருந்தாது, "அவள் அவன் மாட்டுக் கொண்டிருந்த அன்பின் மிகுதியை முன்னரே உணர்ந்திருப்பின், அவனை அவள் மணக்குமாறு கண்டு மகிழ்ந்திருப்பேன்; அந்தோ அஃது இயலாமல் போய்விட்டதே," என்றும், "அவள் நம் நகர் நீத்துப் போயினமைக்கு வருந்தேன்; அவள் அரிய காட்டுவழியைக் கடந்துசென்று, கன்று வருந்தக் கறவை கொணரும் கருணையற்ற மறவர் மனையில் தங்கி, அவள் அன்பன் அருகிருப்பவும் துயிலாது, ஆறலை கள்வர் ஏறுகளைக் கைப்பற்றுங்கால் எழுப்பும் தண்ணுமை ஒலிகேட்டு அஞ்சுவளே என்றே அஞ்சுகின்றேன்" என்றும் வருந்தினாள் எனப் பாடிப் பண்டைக் காலப் பண்புடைக் குடிவந்த தாயர் இயல்பினைத் தெளிய உணர்த்தியுள்ளார் நம் புலவர் :

"அவள் துணிவு அறிந்தனென் ஆயின், அன்னோ!
ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்
வஞ்சி அன்ன என்வளநகர் விளங்க
இனிதினிற் புணர்க்குவென் மன்னோ!" (அகம் : உசுரு)

"கேளாய் வாழியோ! மகளை நின்தோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு

"பெருமலை இறந்தது நோவேன்; நோவல்;

.............................................

அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்,
கன்று காணாது புன்கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல்கூரப் பலவுடன்
கறவைதந்த கடுங்கால் மறவர்
கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ

.........................................

தோள் துணையாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையும் தண்ணுமை
கேட்குநள்கொல் எனக்கலுழும் என்நெஞ்சே."
(அகம் : சுரு)

# எ. கருவூர்க் கதப்பிள்ளை

இவர் பெயர், கருவூர்க் கந்தப்பிள்ளை எனவும் வழங்கும்; இவருக்குச் சாத்தனார் என்ற இயற்பெயருடைய மகனார் ஒருவர் உளர்; அவரும், இவரேபோல் ஒரு நல்லிசைப் புலவராவர். இவரால் பாடப்பெற்ற பெருமையுடையோன் நாஞ்சில் வள்ளுவனாவன்; நாஞ்சில் வள்ளுவன், நாஞ்சில் மலைக்குத் தலைவன்; பாண்டியர் படைத் தலைவனாவன்; ஒரு சிறைப் பெரியனார், ஔவையார், மருதன்இளநாகனார் ஆய புலவர் பெருமக்களால் பாராட்டப் பெற்றவன்; இவனுக்குரிய நாஞ்சில்மலை, பொதியின் மலைத்தொடர்களுள் ஒன்று; நாஞ்சில் நாட்டில் நாகர் கோயிலுக்கும், குமரிமுனைக்கும் இடையில் உளது; இம் மலைக்கு வடகிழக்கே உள்ள வள்ளியூர், இவ் வள்ளுவனது ஊராம் என்பர் ஆராய்ச்சியாளர். அவன் பாண்டியர் படைமறவனாதலின், அப் பாண்டியர்க்குரிய முத்தும், சந்தனமும் உடையன் எனப் பாராட்டுகிறார் புலவர்; அவன், பகைத்து வருவார்க்கு உள்ளத்தாலும் வென்று அடிப்படுத்தலாகா ஆற்றல் உடைமையால், அவரால் பற்றுதற்கரியனாவன்; பகைவர்க்கு அணுகற்கு அரியனாய அவன், அவன்பால் அன்புடையார்க்கு, அவர் உள்ளங்கைபோல், உற்றுழி உதவி மிகவும் எளியனாவன் எனவும் பாராட்டியுள்ளார்:

"தென் பவ்வத்து முத்துப் பூண்டு,
வடகுன்றத்துச் சாந்தம் உரீஇ,
.......................................
துப்புஎதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்;
நட்புஎதிர்ந் தோர்க்கே அங்கை நண்மையன்." (புறம்: ௩அ0)

பெண் ஒருத்தி, பிள்ளைப் பருவத்தளாய் இருந்த காலத்தே, தம் ஊரில் உள்ளார், தம்மிடத்துள்ள அளவிடற் கரிய பெருஞ் செல்வங்களைத் தம் மனைநோக்கி வருவார்க்கு வரையாது வழங்கி வாழும் வாழ்க்கையினைக் கண்டு கண்டு மகிழ்ந்திருந்தாள்; அவள் மணப் பருவமும் எய்தி, மணத்தற்குரிய மாண்புடையான் ஒருவனையும் தேர்ந்து நின்றாள்; ஆனால் அவள் அவனை மணந்துகொள்ளுதற்குரிய காலம்

விரைவில் வாய்த்திலது; மணந்து, அவனோடு கூடி இல்லற மாற்றி, ஊராரைப்போல் விருந்தேற்றி வாழ விரும்பிய அவள் விருப்பம் விரைவில் நிறைவேறுவதாகக் காண வில்லை; இந் நிலையில் தான்மட்டும் விருந்தாற்றாது வறிதே கிடக்க, ஊரார் விருந்தேற்று வாழ்வதைக் காணப் பொறுக்கவில்லை அவள் உள்ளம்; இளமையில் பருவம் வாரா முன், வனப்புடையதாகத் தோன்றிய அவ்வூரார் வாழ்க்கை இப்போது வெறுப்புடையதாகத் தோன்றிற்று. தன் மன நிலையினைத் தன் தோழிக்கு உரைத்தாள் எனப் பாடி, பழங்காலப் பண்புடை மகளிரின் மாண்புணரத் துணை புரிந்துள்ளார் புலவர்:

> "வரையாத் தாரம் வருவிருந் தயரும்
> தண்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர்
> இனிது மன்றம்ம தானே;.........
> ......................................
> தேரோர் நம்மொடு நகாஅ வூங்கே." (நற்: கடு௫)

அன்பினை எல்லா உயிர்களிடத்தும் காணலாம் எனினும், தாய்ப்பசுவிற்கும் கன்றுக்கும் இடையில் உண்டாம் அன்பே தலைசிறந்த அன்பாம்; அதனால் பெற்றோர்க்கும் மக்களுக்கும் இடையில் உண்டாம் அன்பிற்கும் ஆண்டவனுக்கும் அவன் அடியானுக்கும் இடையில் உண்டாம் அன்பிற்கும், கறவைக்கும், கன்றிற்கும் இடையே உண்டாம் அன்பை ஒப்புக்கூறுவர் புலவர். இதை அறிந்தவர் நம் புலவர், ஆதலின், தலைவன் பிரிந்து விட்ட காலத்து அவன் வருகையினை எதிர்நோக்கி நிற்கும் தனக்குத், தாய்ப்பசு, புல்கருதிப் புறத்தே போய்விட்டதாக, மாலையில், அத் தாய்ப்பசு இன்றித் தனித்துக் கிடக்கும் கொட்டிலைத் தலைதூக்கிப் பார்த்துப் பார்த்து வருந்தும் கன்றினை உவமை கூறினளாகப் பாடி அன்பின் இயல்பினை உணர்த்தியுள்ளார் புலவர்:

> "பல்லா, நெடுநெறிக்கு அகன்று வந்தெனப்
> புன்தலை மன்றம் நோக்கி, மாலை
> மடக்கண் குழவி அணவந் தன்ன
> நோயேம்." (குறுந்: கூச)

தலைவன் வரையாதுவந்து ஒழுகுவதால் வருந்தினாள் தலைமகள் என்பதறிந்த தோழி, தலைமகன்பாற் சென்று, தலைமகள் நிலைகூறி, இனியும் இக் களவொழுக்கமே விரும்புதல் நன்றன்று என உணர்த்தினாள்; தலைவன் பண்புடையவனாதலின், பிறர் தனக்குக் கூறுமுன்பே, களவொழுக்கம் ஒழிந்து வரைந்துகொள்ளாமைக்கு வருந்தினான்; நாணினான்; வரைந்துகொள்ளத் துணிந்தான்; இதைத் தலைமகள்பால் கூறினாள் தோழி; கூறுங்கால், யானும் வரைந்துகொள்ளும் காலம் வந்தமை யறிந்தே அவன்பால் வரைவினை வற்புறுத்தினேன்; அவனும், யான் வற்புறுத்துதற்கு முன்பே வரையத் துணிந்துவிட்டான்; அவன் வரைதல் உறுதி என அறியாது அவன்பால் வரைவினை வற்புறுத்தியது நம் அறிவில்லாமையினாலேயேயாம் எனக் கூற விரும்புவாள், அதை வெளிப்படக் கூறாது, காந்தளின் கொழுவிய பேரரும்பு தானாக மலர்க எனக் காத்திராது, வண்டுகள், அது மலருமாறு, அதனிடத்தே சென்று ஊதும்; அவ் வண்டுகள் ஊதும் அக் காலத்திலேயே, அவ் அரும்பும் பிணிப்பு விட்டு மலரும்; இத்தகைய காந்தள் மலர்களை மிகப் பலவாகக் கொண்டது நம் தலைவன் மலை என்று கூறியும் வண்டு ஊத, வாய் மலரும் அம் மலரின் செய்கைக்குக், கடனறிந்த மக்கள், தாம் அறிந்த சான்றோரைக் கண்டவுடனே, அவர்தம் குறை கூறுதற்கு முன்பே, அவரை விரைந்தேற்றுப் பேணும் செயலை உவமித்தும் குறிப்பால் உணரவைத்தாள். தோழியின் இத் திறமெல்லாம் நம் புலவரின் புலமைத் திறமாம் என்பதறிந்தார் அவர் புலமைக்குத் தலை வணங்குவாராக!

"காந்தளம் கொழுமுகை காவல் செல்லாது,
வண்டுவாய் திறக்கும் பொழுதில் பண்டும்
தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல, இடன்விட்டு
இதழ்தளை அவிழ்த்த ஏகல் வெற்பன்
நன்னர் நெஞ்சத்தன்; தோழி! நின்நிலை
யான்தனக்கு உரைத்தனென் ஆகத்
தான் நாணினன் இஃது ஆகாவாறே." (குறுந் : உசரு)

## அ. கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார்

இவர் சாத்தனார் என்ற இயற்பெயருடையவர்; கருவூரில் வாழ்ந்தவர்; கந்தப்பிள்ளை எனவும், கதப்பிள்ளை எனவும் அழைக்கப்பெறும் புலவனாரின் மகனார். இவர் குதிரை மலைக்கு உரியவனும், சேரர் படைத்தலைவனும், கொடை வள்ளலுமாகிய பிட்டங்கொற்றனைப் பாராட்டியுள்ளார். இவரும், இவர் தந்தையாரைப் போன்றே தம் நாட்டிடத்தும், தம் நாட்டு அரசனிடத்தும் நீங்காப் பற்றுடையவராவர்; தாம் பாடிய அகநானூற்றுப் பாட்டொன்றில், தம் அரசனாகிய சேரன் பெரிய குதிரைப் படையுடையான்; நல்ல போர்த்திறம் பொருந்தியவன்; வீரக்கழல் புனைந்தவன்; அவன்பால் கொடைப்பொருள் ஏற்க விரும்பும் கூத்தர் முதலாம் இரவலர், செல்லும் வழி நெடிய காடுகளைக் கொண்டது என எண்ணாராய் அவனை விரும்பி அடைவர் எனப் பாராட்டித் தம் அரசியல் பற்றினைப் புலப்படுத்தியுள்ளமை உணர்க.

> "காடுமிக நெடிய என்னார், கோடியர்
> பெரும்படைக் குதிரை, நற்போர் வானவன்
> திருந்துகழல் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு."
>
> (அகம்: ௩௦௯)

தம் நாட்டு அரசனை அகத்தில் பாராட்டிய புலவர், அவன் படைமுதலியாகிய பிட்டங்கொற்றனைப் புறத்தில் பாராட்டியுள்ளார். அவனைப் பாராட்டப் புகுந்த அவர், முதற்கண், அவன் மலைநாட்டு மக்கள், மரையாவின் பால் ஊற்றி ஏற்றிய உலையில் தினையரிசி இட்டு, சந்தன விறகால் ஆய தீ மூட்டி ஆக்கிய சோற்றை வாழையிலையில் இட்டு வருவார்க்குப் பகிர்ந்தளித்து உண்ணும் உயரிய வாழ்க்கையினை வரைந்து காட்டி வாழ்த்தியுள்ளார்; பின்னர், பிட்டங்கொற்றனது பெருமையினைப் பாராட்டுவார், "பிட்டங்கொற்ற! நின்கெடாத நல்ல புகழைத் தமிழுலகம் முழுதும் கேட்குமாறு புலவர்கள் தம்முடைய பொய்யாத

நாக்குகள் வருந்தப் பாடி, ஈயாத மன்னர் நாணுமாறு வாழ்த்தியுள்ளார்கள்," என்று கூறிப் புலவர் போற்றும் பெருமையுடையான் பிட்டங்கொற்றன் என்று பாராட்டுரை பகர்ந்துள்ளார்.

பிட்டங்கொற்றனைப் பாராட்டிய புலவர், அவனைத் தாம் பாராட்டுவது பெருமையாகாது; அவனைப் புலவர்கள் பாராட்டியுள்ளனர்; அதுவே அவனுக்குப் பெருமையாம் என்று கூறுமுகத்தான், தம் காலப்புலவர்களைப் பாராட்டிய திறம் பாராட்டுதற்குரியதாம்; அம்மட்டோடு நில்லாமல், அப்புலவர்களைப் பொய்யறியாதார்; செம்மை நெறியிற் பிறழாதார் என்றும் பாராட்டியது, புலவர் கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார்க்குப் புலவர்பால் உள்ள மதிப்பினைப் புலப்படுத்துவதாம; புலவரைப் போற்றும் புலவராம் அவர் பெருமைதான் என்னே!

> "கைவள் ஈகைக் கடுமான் கொற்ற!
> வையக வரைப்பில் தமிழகம் கேட்பப்
> பொய்யாச் செந்நா நெளிய எத்திப்
> பாடுப என்ப பரிசிலர்; நாளும்
> ஈயா மன்னர் நாண
> வீயாது பரந்தநின் வசையில் வான்புகழே."
>
> (புறம்: கசு அ)

வேம்பு, ஆல் போன்ற மரங்களில் தெய்வங்கள் உறையும் என்ற கொள்கையினராவர் நம் புலவர் என்பது, "தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு," "நெடுவீழ் இட்ட கடவுள் ஆலம்" என்ற தொடர்களால் புலனும்.

## ௯௰. கருவூர்க் கலிங்கத்தார்

இவர் கலிங்க நாட்டினின்றும் போந்து, கருவூரில் வாழ்ந்தவராவர்; அவ்வாறு வந்தவர் இவர் முன்னோராதலும் கூடும்; இவர் இயற்பெயர் தெரிந்திலது.

தலைவன் குறித்துச் சென்ற கார்காலம் வந்துற்றமை கண்டு கலங்கும் தலைமகளுக்குத் தோழி "தலைவர் மிகச் சேய நாட்டிற்குச் சென்றுளார் ஆயினும், அவர் ஆண்டு நெடுங் காலம் தாழ்க்காது விரைவில் வருவர்" எனக் கூறி ஆற்றுவதையும், அவள் அவ்வாறு ஆற்றினும், தலைமகள் "அவர் கூறிச் சென்ற கார்காலம் வந்துவிட்டது; ஆகவே அவர் வருவர்; ஆதலின் ஆற்றியிரு என்கின்றனை; ஆனால், பிடாவின் மணத்தினை வாரிக்கொண்டு, கூதிர், முன்பனிக் காலங்கட்கு உரிய வாடைக்காற்று வீசும் மாலைக்காலத்துப் பனியால் அலைப்புறும் என் உள்ளத் துயரினை யான் எவ்வாறு ஆற்றுவேன்" எனக் கூறித் தலைமகள் தன் ஆற்றாமையினைப் புலப்படுத்துவதையும், கார்காலத்து மேகம், பெருங் கடலுள் படிந்து, பெருநீரை வாரிக்கொண்டு, மேற்கே எழுந்து, சூலுற்ற பெண்யானைகளின் கூட்டம்போல் ஆங்காங்குத் தோன்றி, ஒலித்து ஓயாது பெய்வதையும் புலவர் நன்கு விளங்கப் பாடியுள்ளார்.

"சென்றுசே ணிடையர் ஆயினும், நன்றும்
நீடலர் என்றி தோழி! ..........
... .........................................
குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி
வண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்
கூதிர் அற்சிரத்து ஊதை தூற்றப்
பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு
வருந்துவம் அல்லமோ பிரிந்திசினோர் திறத்தே."

(அகம்: ௧௩௯)

## ௯௦. கருவூர்க் கோசனார்

வடநாட்டினின்றும், தமிழ்நாடு புகுந்து வாழ்ந்த பல் வேறு இனமக்களுள் கோசர் என்பாரும் ஓரினத்தவராவர். தொடக்கத்தில் துளுவநாட்டிலும், கொங்கு மண்டலத்திலும் வந்து வாழ்ந்த இவர்கள், பின்னர்த் தமிழகம் முற்றும் பரவி வாழலாயினர்; இவர்கள் வீரத்திற் சிறந்தவர்; வாய்மையில் வழுவாதவர்; கெட்டகாலத்தும் விட்டு நீங்காது நட்புத்துணை புரியும் நயமுடையவராவர்; இவர்கள் தமிழகத்தில் பயில வாழ்ந்துவிட்டமையால், இவர்களுள் பலர் தமிழில் பெரும்புலவராய்த் திகழவுமாயினர்; செல்லூர்க் கோசங்கண்ணனார், கருவூர்க்கோசனார் என்பார் அவருட் சிறந்தாராவர்; கருவூர்க்கோசனார், கருவூரில் வந்து வாழ்ந்த கோசர்வழி வந்த புலவராவர்.

கருவூர்க்கோசனார், வடநாடு வளம் குறைந்த காலத்தே பொருள் தேடித் தமிழகம் புக்க குடிவழி வந்தவராதலின் பொருளின் அருமையினை உணர்ந்தவராவர்; பொருள் பெற்றவரே புகழ்பெறுதல் இயலும்; பொருள் பெற்றவரே இன்பம் துய்த்தல் இயலும்; பொருள் பெற்றவரே ஈகை புரிந்து அறஞ்செய்தலும் ஆகும்; ஆனால் அப்பொருள் அரிதின் முயன்று தேடுவார்க்கே அடைதல் இயலும்; திரைகடல் ஓடித் தேடார்க்குத் திரவியம் சேராது; அது சேராது எனின், அவை மூன்றும் கிட்டா; என்று தாம் உணர்ந்த அறிவினை உலகறியக் கூறியுள்ளார் அவர்.

> "இசையும், இன்பமும், ஈதலும் மூன்றும்
> அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு இன்மென
> வினைவயின் பிரிந்த வேறுபடு கொள்கை."
>
> (நற் : உ௧௪)

## கக. கருவூர் நன்மார்பனார்

கருவூரில் வாழ்ந்த புலவர் குழாத்துள் நன்மார்பனாரும் ஒருவராவர்; நன்மார்பன் என்ற பெயர் இவர்க்கு ஏன் உண்டாயிற்றோ அறிகிலம்; திருமால் மார்பு, திருவுறையும் மார்பாதலின், அவன் மார்பு நன்மார்பு எனவும், அவன் நன்மார்பன் எனவும் வழங்கப்பெறுப எனவும், அவ் விறைவன் திருப்பெயரையே இவரும் கொண்டுளார் எனவும் கூறுவர் சிலர்.

தலைவியின் ஒளிவீசும் அழகிய நுதல், தலைவன் பொருள்வயின் பிரிவான் என்ற எண்ணம் சிறிதுசிறிதாக உறுதியாகுந்தோறும் ஒளிகுறைந்து, வெளிறிப் பசந்து போதற்குப் பகற்காலத்தே ஞாயிற்றின் ஒளி சிறிது சிறிதாக விளங்கித் தோன்றுந்தொறும், திங்களின் ஒளி குன்றித் தோன்றுவதை உவமையாகக் கூறியது மிகமிக நன்று.

> "தண்கதிர் மண்டிலம் அவிர்அறச் சாஅய்ப்
> பகல்அழி தோற்றம் போலப், பையென
> நுதல் ஒளி கரப்ப." (அகம்: உஎஎ)

தலைவன் சென்ற வழி, அவ்வழிப் போவார் எவரும், உடலும், உள்ளமும் சோர்ந்துவிடற்குக் காரணமாய கொடுமை நிறைந்தது என்ப; அந்த வழியில், பொருள் ஈட்டி வரவேண்டித் தன் தளரா உள்ளமும், தன் கைவேலும் அன்றி வேறு துணை இன்றிச் சென்ற தலைவன், வேனிற் காலமும் வந்ததாகவும் வந்திலனே என வாட்டமுறும் தலைமகளின் உள்ள நிலையினை உணர்த்தும் பாட்டினைப் பாடியுள்ளார் புலவர்.

## ௧௨. கருவூர்ப் பவுத்திரன்

வடநாட்டினின்றும் வந்தாரோடு, வடமொழிப் பெயர்களும் தமிழ்நாட்டில் இடம் பெற்றிருந்தன; அவ்வாறு வந்த வடமொழிப் பெயர்களுள் பவுத்திரன் என்பதும் ஒன்றும்; பவுத்திரன், தூய்மை உடையவன் என்ற பொருளுடையதாம்.

முல்லை நிலத்திற்கு வேண்டும் நீர் அளித்துப் புரப்பதால், மேகத்தை, முல்லைநிலத்தைக் காக்கும் அருளுடையதாகவும், காலையில் தொழில் மேற்சென்றார் பலரும், தம் வினைமுடித்து வீடு திரும்பும் காலம் மாலையாதலின், அதைப் பலர் புகுதரும் மாலை எனவும் பாடியுள்ளார் புலவர். வினைவயிற் பிரிந்த தலைமகன் மீண்டு வருங்கால் வழியில் முல்லைக்கொடி அரும்புவிட்டுக் காட்சி தருவதைக் கண்டான்; அக்காட்சி தலைமகள் தனித்துக் கிடக்கப் பிரிந்து சென்ற தன் செயல் நோக்கி நகைப்பதுபோல் தோன்றிற்று; முல்லை அரும்புகளால், தலைமகளின் எயிற்றின் நலனையும், அதைத் தொடர்ந்து அத்தலைமகள் நலனையும் நினைந்து வாடுமாறு செய்துவிட்டு, அவ்வாறு வாடும் தன்னைக் கண்டு நகைக்கும் அம்முல்லைக்கொடிமீது அவனுக்குச் சினம் மிக்கது; உடனே இவ்வாறு நகைத்தல் நன்றன்று என நாவிட்டுக் கூறுவானாயினன் இச்சிறு நிகழ்ச்சியைப் புலவர் பவுத்திரனார், அழகொழுகப் பாடியுள்ளார்.

“கார் புறந்தந்த நீருடை வியன்புலத்துப்
பலர் புகுதரூஉம் புல்லென் மாலை
முல்லை! வாழியோ! முல்லை! நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை;
நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர் மாட்டே?

(குறுந்: ௧௬௨)

## ௬௩. கருவூர்ப் பூதஞ்சாத்தனார்

இவர் பெயர் கருவூர்ப் பூதஞ்சேந்தனார், கருவூர்ப் பூச்சாத்தனார், கருவூர்ப் பூதனார் மகனார் கொற்றனார் எனப் பல படியாகக் காணப்படும். ஆண்மகன் அறிவிழந்து அழிவந்தன செய்தானாயினும், பெண், அவனைப் பின்பற்றி அறிவிழந்து விடாமையினாலேயே உலகில் இன்னமும் ஒழுக்கம் சிறிது நிலைபெற்றுளது; கணவன் தகாவொழுக்கினனாய காலத்தும், அவன் தவறு கண்டு ஒறுத்து வெறுக்காது அவன் பிழை பொறுத்தலும், தனக்கோ, தன் கணவற்கோ பழியுண்டாமாறு பார்த்தல் தனக்குப் பழியாம் என உணர்ந்து, அவன் தவறு கண்டு தான் வருந்தினால் தன் வருத்தம் கண்ட பிறர், அவனைப் பழிப்பர் என அஞ்சித் தன் வருத்தத்தினைப் பிறர் அறியாவண்ணம் மறைத்தலும் மகளிர்க்கு மாண்பு தரும் குணங்களாம். இத்தகைய பெண்தன்மையால் பெருமையுற்ற பெண் ஒருத்தி, தன் கணவன் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டானாக, தன்பால் அன்பு குறைந்து வாராது ஆண்டே உறையும் அவனோடு தனக்கு இனி உறவில்லை என வெறுத்துவிடாது, அவன் வாராமையால் வருந்தி, தன் வருத்தத்தினைத் தன் தோழி அறிந்தாளாதல் கண்டு, "தோழி! நம் மனையைச் சார்ந்துள்ள பனையில் குடிவாழும் அன்றில், தன் துணைபிரிந்துவிட்டதாகத் துஞ்சாது வருந்துகிறது; துயர் தரும் இக்காட்சியினைக் கண்டு என் கண்களும் கலங்குகின்றன; இதற்கு யான் என் செய்வேன்?" என்று கூறிக் கணவன் வாராமையால் வந்த கண்ணீரை, அன்றில் வருத்தம் கண்டு வந்த கண்ணீராம் எனக் கூறி மறைக்கும் மாண்பினைப் புலவர், பாடிப் பாடிப் பாராட்டுகின்றார்:

• "வாராதோர் நமக்கு யார்? என்னாது
..................................
மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
துணையொன்று பிரியினும் துஞ்சாகாண் எனக்
கண்ணிறைநீர் கொடு கரக்கும்
ஒண்ணுதல் அரிவை, யான்என் செய்கோ எனவே."

(அகம்: ௫0)

## கச. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார்

நான்கு தெருக்கள் கூடும் பெரும் சதுக்கங்களில் பூதங்கட்குக் கோயில் எடுத்து வழிபடுவதைப் பண்டைத் தமிழகத்துப் பேரூர் மக்கள் மரபாகக் கொண்டிருந்தனர்; அவ்வாறே, கருவூரிலும் ஒரு பூதம் இருந்தது; இதைச் "சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து மதுக்கொள் வேள்வி வேட்டோன்." (சிலம்பு: 28: 147-8) என்ற சிலப்பதிகார அடிகளால் உணர்க. இச்சதுக்கப் பூதத்தின் பெயரைத் தம் இயற்பெயராகக் கொண்டவர் நம் புலவர்.

இவர், தம் மக்கள் மாண்பிலராயினர் என்ற மன வெறுப்பால் மாண்டுபோக எண்ணிய மன்னன் கோப் பெருஞ் சோழன், உறையூர் அருகே ஓடும் காவிரி ஆற்றின் இடைப்பட்ட நிலத்தே ஒரு மரத்தின் அடியில், வடக்கிருந்து உண்ணாது நோற்று உயிர்விடுங் காட்சியினையும், அவனோடு, அவன் உயிர் நண்பராகிய புலவர் பலரும் வடக்கிருந்து உயிர்விடும் காட்சியினையும் கண்டு, அப்பேறு தமக்கு வாய்க்காமையால் வருந்திப் பாடியுள்ளார்.

> "உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழல்
> முழூஉ வள்ளூரம் உணக்கும் மள்ள!
> புலவுதி மாதோ நீயே;
> பலரால் அத்தை நின்குறி யிருந்தோரே."

(புறம்: உகக)

தம் உயிரைத் தாமே விட எண்ணுதல் எளிய செயல் அன்று; அதனினும் அவ்வுயிர், தம் உடல் சிறிது சிறிது அழியப் போக எண்ணுதல் அரிதினும் அரிதாம்; ஆதலின், கோப்பெருஞ்சோழன், வடக்கிருந்து உண்ணா நோன்பு மேற்கொண்டு, மழை, வெயில், பனி, காற்று இவற்றிற்கு அஞ்சாது, அவற்றால் உடல் அழிய உயிர்விடத் துணிந்துளனாதலின், அவனை வீரன் எனப் பொருள்படும் 'மள்ள' என்ற சொல்லால் விளித்துள்ளார் நம் புலவர்.

## ௬௫. கல்லாடனார்

கல்லாடர் என்ற பெயருடையார் ஒருவரல்லர்; பலராவர்; நாம் அறிந்துவரும் சங்கப்புலவர் வரிசையுள் வைத்து மதிக்கப்பெறும் கல்லாடர் ஒருவர்; பதினொன்றாம் திருமுறை நூல்களுள் ஒன்றாய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் இயற்றிய கல்லாடர் மற்றொருவர்; தொல்காப்பியம் சொல்லதிகாரத்துக்கு உரைகண்ட கல்லாடர் வேறு ஒருவர்; கல்லாடம் கற்றாெடு சொல்லாடாதே என்ற பெருமையினை உடைய கல்லாடம் என்ற நூலாசிரியரான கல்லாடர் மற்றும் ஒருவர். ஆகக் கல்லாடர் நால்வராவர்.

கல்லாடர், கல்லாடம் என்ற ஊரில் பிறந்தவராவர்; இக்கல்லாடம், "கல்லாடத்துக் கலந்தினிதருளி, நல்லாளோடு நயப்புற எய்தியும்" என மணிவாசகப் பெருந்தகையாரால் பாராட்டப்பெறும் மாண்புடையதாகும்; கல்லாடனார் தொண்டைநாட்டைச் சேர்ந்தவராதலின், அவர் பிறந்த கல்லாடம், தொண்டைநாட்டைச் சேர்ந்ததே என்பதில் ஐயமில்லை; "கல்லாடீச்சரம்" என்ற பெயரால் ஒரு சிவன் கோயில் செங்கற்பட்டு மாவட்டத்தில், சென்னைக்கு வடக்கே பொன்னேரிக்கு அருகே உள்ள புகைவண்டி நிலையமாகிய மீஞ்சூரில் உளது; திண்டீச்சரம், சங்கமீச்சரம், ஆலீச்சரம் என்ற பெயருடைய கோயில்களைக் கொண்ட ஊர்கள் முறையே திண்டிவனம், சங்கம், ஆற்பாக்கம் என அழைக்கப்பெறுதலேபோல், "கல்லாடீச்சரம்" உள்ள, மீஞ்சூர் பண்டைக்காலத்தில் கல்லாடம் என வழங்கியதாதல்வேண்டும். "ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புழல்கோட்டத்து ஞாயிறுநாட்டு மீஞ்சூருடையார் கல்லாடீச்சரமுடையார்." (A. R. No. 133 of 1916) என்ற கல்வெட்டினை நோக்க, பழங்காலத்தே கல்லாடம் என வழங்கிய அவ்வூர்ப் பெயர், அக்கல்வெட்டுக் காலத்தே அவ்வூர்க்கோயில் அளவோடு நின்றுவிட்டது என அறிகிறோம் என ஆராய்ந்து கூறுவர் ஔவை, சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்.

கல்லாடனார் வேங்கடத்தைச்சூழ உள்ள வடநாட்டின ராவர்; என்பதை அவர் பாக்களே அறிவிக்கின்றன; கல்லாடனார், தாம் பாடிய புரவலர்களுள் ஒருவனாகிய பொறையாற்றுக் கிழவனைப் பாடுங்கால், தாம் தமிழகம் புகுந்தமைக்குரிய காரணத்தை, "எங்கள் வேங்கடநாட்டில் தவறாது மழை பெய்யும்; நெற்கதிர்கள் மலைபோல் காட்சி தரும்; எருதுகள் உழுது பெற்ற வளத்தால் மகிழ்ந்த உழவர் அரியல் உண்டும், மான், முயல் இவற்றின் ஊன் தின்றும் செருக்கித் திரிவர்; இவ்வாறு வளங் கொழிக்கும் வேங்கடம் மழையின்மையால் வறுமை யுற்றுவிட்டது; பசித்துயர் பொறாது தமிழகம் போந்தேன்," எனக் கூறி யுள்ளமை யுணர்க.

> "தண்துளி பலபொழிந்து எழலிஇசைக்கும்
> விண்டுஅனைய விண்தோய் பிறங்கல்
> முகடுற உயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
> பகடுதருபெருவளம் வாழ்த்திப் பெற்ற
> திருந்தாமூரி பரந்துபடக் கெண்டி
> அரியல்ஆர்கையர் உண்டு இனிதுஉவக்கும்
> வேங்கடவரைப்பின் வடபுலம் பசித்தென
> ஈங்குவந்திறுத்த என்இரும் பேரொக்கல்."
>
> (புறம்: ௩௯௧)

கல்லாடனார் வேங்கட நாட்டினராதலின், அவர் அவ் வேங்கட நாட்டையும், அந்நாட்டை ஆளும் புல்லி என் பானையும், ஆங்கு வாழும் மக்களின் வாழ்க்கை முறை களையும், அவவேங்கட நாட்டிற்கு அப்பாற்பட்ட பாணன் நாட்டையும் தாம் பாடிய பாக்களில் ஏற்ற இடங்களில் எடுத்துக்கூறி விளக்கிச் செல்வர்.

> "கல்லா இளையர் பெருமகன் புல்லி
> வியன்தலை நன்னாட்டு வேங்கடம்." (அகம்: அ௩)
>
> "மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
> காம்புடை நெடுவரை வேங்கடம்." (அகம்: உ0௯)
>
> "புல்லிய, வேங்கட விறல்வரை." (புறம்: ௩அ௫)

இவை, வேங்கடநாடு குறித்தும், அந்நாட்டிற்குரிய புல்லி என்பானைக் குறித்தும் கல்லாடர் கூறுவன; வேங்கடநாட்டு வேட்டுவ மக்கள், யானை வேட்டம் சென்று, யானைக்கன்றை அதன் தாயாகிய பிடி, பிரிவாற்றாமல் கதறிக் கதறிப் புலம்பக் கைப்பற்றிக், கடப்ப மரப்பட்டையில் நாரெடுத்துக் கயிறு திரித்து, அக்கயிற்றினால், அக் கன்றைப் பிணித்து, அதன் உடம்பில் புண்படுமாறு இறுகக் கட்டிக் கொணர்ந்து, தம்மூர்க் கள்ளுக்கடை வாயிலில் கட்டி மகிழ்வர் என்று அவர் கூறியுள்ளார் :

"கறையடி மடப்பிடி கானத்து அலறக்
களிற்றுக்கன்று ஒழித்த உவகையர், கலிசிறந்து
கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொளி வெண்ணார் அழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கும் நியமமூதூர்
நறவுநொடை நல்லில் புரவுமுதல் பிணிக்கும்
கல்லா இளையர்." (அகம்: அ௩)

வேங்கட நாட்டினராய கல்லாடர், ஆண்டு வாழ்ந்த மக்களுக்குத் தொண்டையர் என்ற பெயரும் உண்டாம் என அறிந்து கூறியுள்ளார்; தொண்டையர் என்பார் குறித்துக் கூறியவர்களுள் கல்லாடரே முதல்வராவர் என்பது, தமிழ்நாட்டு வரலாறு உணர்வார்க்கு வழித்துணை புரிவதொன்றாம்.

"பொருவார்,
மண்ணெடுத்துண்ணும் அண்ணல் யானை
வண்டேர்த் தொண்டையர்." (குறுந்: உ௬0)

வேங்கட நாட்டின் மேற்பாற்பகுதி பாணப்பாடி எனப் படும்; அப்பாணப்பாடி பாணன் என்பானுக்கு உரியது; அவன் வழிவந்தார் பலர், வாணாதிராயர், வாணகோவரையர் என்ற பெயரினராய்த் தமிழகம் புகுந்து வாழத் தொடங்கினர்; பாணப்பாடியின் அண்டை நாட்டினராய கல்லாடர், அப் பாணப்பாடியின் அரசனை அறிந்து அறிவித்துள்ளார்; அவனைப்பற்றிக் கூறுங்கால், "தன் பகைவர்

தங்கள் ஆனிரைகளைக் காத்து நிற்கும், உணவால் குறைவற்ற அரண்கள் மிகச் சேய இடத்தில் இருப்பினும், அவ்வரணை அழித்து அவர் ஆனிரைகளைக் கவருதற்குரிய செவ்வி பார்த்திருந்து ஏறுகளோடுகூடிய அந்நிரைகளைக் கவர்ந்து செல்லும் வேற்படை உடையவன் பாணன்; உணவால் குறைவற்றவன் பாணன்; பகைவர்க்குப் புறங் காட்டாப் பேராற்றல் வாய்ந்தவன் பாணன்; அவன் நாடு நன்மைபல உடையது." என்று கூறுகிறார்.

> " இகந்தன ஆயினும், இடம்பார்த்துப் பகைவர்
> ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில்
> குவைஇமில் விடைய வேற்று ஆ ஒய்யும்
> கனையிரும் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
> விழவயர்ந்தன்ன கொழும்பல் திற்றி
> எழாஅப் பாணன்." (அகம்: ௧௧௩)

தம் நாடு, தம் நாட்டைச் சூழவுள்ள நாடுகள் இவை பற்றி நன்கு அறிந்து அறிவிக்கும் கல்லாடர்பால் நாட்டுப் பற்றும் பொருந்தியிருக்கக் காண்கிறோம். அம்பர்கிழான் அருவந்தையைப் பாடிய புலவர், அவனை வாழ்த்துங்கால், அவன் சோழநாட்டானாதலின், அவன் நாட்டில் பாய்ந் தோடும் பேராறாகிய காவிரியாற்று மணலினும் வாழ்க பல்லாண்டு என வாழ்த்தாது, தாம் பிறந்த புல்லிக்குரிய, வேங்கடமலைமீது வீழ்ந்த மழைத்துளியினும் பல்லாண்டு வாழ்க என வாழ்த்தினார் எனின் அவர் நாட்டுப்பற்றினை நவிலவும் கூடுமோ?

> " நல் அருவந்தை வாழியர்! புல்லிய
> வேங்கட விறல்வரைப் பட்ட
> ஓங்கல் வானத்து உறையினும் பலவே."
>
> (புறம்: ௩௮௫)

கல்லாடர், தாம் பிறந்த வேங்கட நாட்டின் வரலாற்றினைமட்டும் அறிந்தவரல்லர்; அவர் தமிழகமெங்கும் சென்று, ஆங்காங்குள்ள அரும்பெருந் தலைவர்களை அறிந் தவராவர்; கல்லாடனார், பாண்நாடு சென்று நெடுஞ்செழி

யினைப் பாடியுள்ளார்; சேரநாடு சென்று, களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைச் சிறப்பித்துள்ளார்; பூழி நாட்டு நன்னனை அவர் அறிந்துளார்; மலாடுநாட்டுக் காரியையும், கொல்லிக் கூற்றத்து ஓரியையும் தெரிந்துளார்; கோசர் குணம் அவருக்குத் தெரியும். சோழ நாட்டுப் பேரரசர் எவரையும் அவர் பாராட்டவில்லை எனினும், அந்நாட்டு அம்பருக்கும், பொறையாறுக்கும் போயுளார். ஆகவே, கல்லாடர் தமிழகமெங்கும் சுற்றிப் பழகியவர் என்பது புலனும்.

நெடுஞ்செழியன் அரியணை ஏறிய சின்னாட்களுக்கெல்லாம், முடிவேந்தர் இருவர், வேளிர் ஐவர் துணைபெற்று அவனை எதிர்த்தனர்; தன் நாட்டகத்தே வந்து எதிர்த்த அவர்களை வென்று புறங்காட்டி ஓடச்செய்து, மேலும் விடாதுத் துரத்திச்சென்று, அவர்களுள் ஒருவனுடைய சோழன் தலைநகர்க்கு அணித்தே உள்ள ஆலங்கானத்தே அழித்து மீண்டான். நெடுஞ்செழியன் வெற்றிகேட்டு வியந்த புலவர் பலர் அவனைப் போற்றிப் பாராட்டினர்; அவ்வாறு பாடியவர்களுள் கல்லாடனும் ஒருவர்; கல்லாடனர் அவன் வெற்றியைப் பாராட்டுவதோடு அமையாது, அவன் படையால் பாழான பகைவர் நாட்டுக் கேட்டினை அவன் கண்முன் காட்டி அவன் உள்ளத்தே போர்க்கொடுமை தோன்றத்துணையும் புரிந்துளார்; அவனால் பாழான ஊர்களைப் பார்த்துக் கொண்டே வந்த கல்லாடர், அவனை அடைந்து "செழிய! நான் வருங்கால், நின்னால் பாழான பகைவர் நாட்டுட் புகுந்து வந்தேன்; அம்மம்ம! ஆண்டு யான் கண்ட காட்சி கொடிது! கொடிது! வழியில் தன் அன்பிற்குரிய ஆண் மான் புலியாற் கொல்லப்படவே, பெண் மான், தன் சிறு குட்டியைத் தழுவிக்கொண்டு, ஆள் வழக்கற்ற இடம் சென்று ஆண்டுள்ள வேளைப்பூவைக் கறித்து உண்ணுவதைக் கண்டேன்," என்று கூறிப் "புலி யொத்த சினம் உடைய நின்னால் அழிக்கப் பெற்ற வீரர்களின் மனைவிமார், தங்கள் இளஞ் சிறார்களோடு கூடி வருந்தி வாழ்கின்றனர்; இவ்வாறு அவர்கள் வாட அழித்து வாழ்தல்

நினக்கு அழகாமோ," என்பது தோன்றச் செய்த திறம் வியந்து பாராட்டற்குரியதாம்.

"ஆலங் கானத்து அமர்கடந் தட்ட
காலமுன்ப! நிற் கண்டனென் வருவல்;
அறுமருப்பு எழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய நெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளில் அத்த மாகிய காடே." (புறம்: உங)

கல்லாடனார் காலத்தில் சேர நாட்டைக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் ஆண்டுகொண்டிருந்தான்; அவனுக்குரிய நாட்டை, அவன் அண்டை நாடாகிய பூழி நாட்டினை ஆண்டுகொண்டிருந்த நன்னன் என்பான் கைப் பற்றி ஆண்டிருந்தான்; தனக்குரிய நாட்டைத் தான் கைப்பற்றுதல் வேண்டும் என்ற எண்ணமுடை யானாய், அந்நன்னன் நாட்டின்மீது படை கொண்டுசென்று, அவனை வாகைப் பெருந்துறைக்கண் நிகழ்ந்த போரில் வென்று, இழந்த தன் நாட்டைப் பெற்று மீண்டான்; சேரன் செயல் பிறந்த குடியர்க்கும் பெருஞ்செயலாதல் அறிந்த கல்லாடர் அதைத் தாம் பாடிய அகத்துறைப் பாட்டொன்றில் கூறிப் பாராட்டினார்.

"இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருது களத்து ஒழிய
வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடு தந்தன்ன வளம்." (அகம்: ககக)

அழகிய பாவையைத் தன்பால் கொண்ட கொல்லி மலையும், அதைச் சூழ உள்ள நாடும் சேரர்க்கு உரிய தாகும்; ஆனால், ஓரி என்ற வில்லாற்றல் மிக்க வீரனொரு வன், தன் ஆண்மையால், அக்கொல்லியைத் தான்பற்றி ஆண்டிருந்தான்; ஓரியின் அடாச் செயல் அறிந்த, சேர வேந்தர் தம் நண்பனாகிய, முள்ளூர் மன்னன் மலையமான்

திருமுடிக்காரி, அவ்வோரியைக் கொன்று, கொல்லியைச் சேரர்க்கு உரிமையாக்கிச் சிறந்தான்; காரிபால் தாம் கண்ட இந்நற்பணியைக் கல்லாடர் வியந்து பாராட்டினுர் என்பதில் வியப்பில்லையன்றே!

> "செவ்வேல்
> முள்ளூர் மன்னன் கழல் தொடிக்காரி
> செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
> ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த
> செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி"
>
> (அகம்: உ0க)

நன்னன், தன் தோட்டத்துப் புனல் தந்த பசுங்காய் ஒன்றைத் தின்றதன் தப்பிற்காக ஒரு பெண்ணைக் கொலை புரிந்த கொடியோனுவன்; அவனுக்குப் பகைவன் ஒருவன், அகுதை என்ற பெயரோடு வாழ்ந்திருந்தான்; கொடியோனுகிய நன்னனுல், அகுதைக்குக் கேடு உண்டாகா வண்ணம் கோசர் என்பார் காத்தனர். கோசர் தம் இந்நற்செயல் கல்லாடர் உள்ளத்தைப் பெரிதும் மகிழ்வித்தது; உடனே, அக்கோசர்பால் தாம்கொண்ட, நண்பர் வறியராயினர் என விட்டு ஒழிக்காது விரும்பி உடன் உறைவதும், நெடுங்காலம் சென்றேனும் கருதியது முடிக்கும் சூழ்ச்சி உடையராவதும் ஆய பண்புகளையும் கூறிப் பாராட்டு வாராயினர்;

> "நன்றல் காலையும் நட்பிற் கோடார்
> சென்று வழிப்படூஉம் திரிபில் சூழ்ச்சியில்
> புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்
> ...........................................
> காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்."
>
> (அகம்: கக௩)

கல்லாடர் இவ்வாறு நாடு பல சுற்றி, ஆங்காங்கே தாம்கண்ட நற்செயல்களை நாட்டார்க்கு அறிவிக்கும் அறிவுடையராய்ப் பாடிப், பழந்தமிழகத்தின் வரலாறு உணரத் துடித்து நிற்பார்க்குப் பெருந்துணை புரியும் வரலாற்றுப் பேராசிரியராய் விளங்கியுள்ளார்.

## க௬. கழாத்தலையார்

சீத்தலை, பெருந்தலை என்பனபோல், கழாத்தலை என்பதும் ஓர் ஊர்; இவர் அவ்வூரினராதலின் கழாத்தலையார் எனப்பட்டார்; கழாத்தலை என்ற சொல் கழுவாத தலை எனவும் பொருள்படும் ஆதலின், மாசுண்ட முதுமகள் ஒருத்தியின் தலையினைக் கழாத்தலை எனப் பாடிய சிறப்பால் கழாத்தலை என அழைக்கப்பெற்றார் என்று கூறுவர் சிலர்; சிலர், சீத்தலை சாத்தனார்க்குக் கூறும் கதைபோல் ஒரு கதை கூறி இவர், கழுவாத தலையினராதலின், கழாத்தலையார் எனப்பட்டார் என்று கூறுப; மற்றும் சிலர், இவர் பெயர் சில ஏடுகளில் கழார்த்தலையார் எனவும் காணப் படுதலின், இவர் கழார் என்னும் ஊரினராதல் வேண்டும் என்ப. "புகழ்ந்த செய்யுள் கழாத்தலையை இகழ்ந்த தன் பயனே" என்ற கபிலர் பாட்டில் இவர் பெயர் கழாத்தலை என்றே காணப்படுதலின் கழார்த்தலை என்ற பாடமும் தவறும்; இவர் கழார் நகரத்தாரும் அல்லராம் எனக் கொள்க.

இருங்கோவேள் என்ற குறுநில மன்னன் ஒருவனின் முன்னோன் ஒருவன், கழாத்தலையாரை இகழ்ந்ததனால், அவனுக்குரிய சிற்றரையம், பேரரையம் எனப் பெயர் கொண்ட, பெருவளம் நிறைந்த நகரம் பாழுற்றது எனக் கபிலர் கூறுவர் எனின், கபிலராலும் போற்றப்படும் கழாத்தலையாரின் பெருமையினை நம்மால் அறிதல் இயலுமோ?

"இருபாற் பெயரிய உருகெழு மூதூர்க்
கோடிபல அடுக்கிய பொருள் நுமக்கு உதவிய
நீடுநில அரையத்துக் கேடும் கேள் இனி

......................................

நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே."

(புறம்: ௨0௨)

குடக்கோ நெடுஞ்சேரலாதனும், வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு இருவர் படையும் அழிய இருவரும் களத்திலேயே மாண்டு மடிந்தனர்; களம் நோக்கி வந்த யானைகள் அனைத்தும் மடிந்து மலைபோல் வீழ்ந்து கிடக்கின்றன; வெற்றியன்றித் தோல்வி கண் டறியாக் குதிரைகள் எல்லாம், தம்மீது ஏறிய வீரர்கள் அழியத் தாமும் அழிந்து வீழ்ந்துவிட்டன; தேர் வீரர் கள், தேர்த்தட்டுகளிலேயே தலை இழந்து இறந்து கிடக் கின்றனர்; போர் முரசுகள் முழக்குவாரின்றி வறிதே விடப்பட்டுள்ளன; இரு பெரும் அரசர்களும் மார்பில் வேலேற்று வீழ்ந்து கிடக்கின்றனர்; அவ்வேந்தர் தம் உரிமை மகளிரும் கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழும் கருத்திலராய்த் தம் கணவர் மார்பகத்தே வீழ்ந்து மடிந்து கிடக்கின்றனர்; இக்கொடிய காட்சியைக் கண்டார் புலவர் கழாத்தலையார்; இவர்கள் நிலையே இதுவாயின், இனி, போர் மேற்கொண்டு போந்து நின் தூசிப் படை யினை அழித்து வென்றி எய்துவேம் எனக் கூறல் எவர்க்கு இயலும்? அவ்வாறு எண்ணுவார் எண்ணம் என்னும்? என்று ஏங்கி நின்றார்.

"வருதார் தாங்கி அமர்மிகல் யாவது!" (புறம்: சுஉ)

களத்தே வீழ்ந்து கிடந்தாருள், நெடுஞ்சேரலாதன் கழுத்தில் அழகிய ஆரம் ஒன்று மின்னிக்கிடப்பதைக் கண்ட புலவர், அது, ஆங்கு வரும் பாணர்க்குப் பரிசாக அளிக்க அணிந்துவந்த அணிபோலும் என்று எண்ணினார்; பாணர், வெற்றிபெற்ற வேந்தரைப் பாடி, அவ் வேந்தர் ஆங்குக் கைக்கொண்ட, யானை, குதிரை, தேர் முதலாம் பொருள்களைப் பெற்றுச் சேறல் வழக்கமாம்; இந்தப் போர்க்களத்தில் இருவர் படையும் அறவே அழிந்துவிட் டமையால் பாணர்க்குப் பெறலாம் பொருள் ஏதும் இல்லை. எனவே, அவர்களுக்கு, நெடுஞ்சேரலாதன் கழுத்து ஆரம் ஒன்றே அகப்படலாயிற்று; அதைக் கண்ட பாணர்கள், யாங்கள் ஈண்டு வந்தது இந்தக் கொடுங் காட்சியினைக் காணவா? நின் கழுத்தில் கிடக்கும் இதைக் கொள்ளவா?

என்று கண்ணீர்விட்டுக் கலங்கினர் எனப் பாடி, அக்களத்தின் கொடுமையினையும், அவன் கொடையின் சிறப்பினையும் ஒருங்கே பாடினார்.

"முகவை இன்மையின் உகவை இன்றி
இரப்போர் இரங்கும் இன்னா வியன் களத்து
..............................................
பாடிவந் ததெல்லாம் கோடியர்
முழவுமருள் திருமணி மிடைந்த நின்
அரவு உறழ் ஆரம் முகக்குவம் எனினே." (புறம்: ௩௬௮)

வெண்ணிப் பறந்தலை என்ற போர்க்களத்தே, கரிகாலனோடு போரிட்டுத் தோற்றோருள் பெருஞ்சேரலாதன் என்பவனும் ஒருவனாவன்; அப் போரில், கரிகாலன் எறிந்த வேல் ஒன்று சேரலாதன் மார்பிற் பாய்ந்து முதுகின்வழியே வெளிவந்து விட்டமையால், அவன் முதுகில் புண் உண்டாகிவிட்டது; வீரர் முதுகில் புண் பெறுவதை இழிவெனக் கருதுவர்; முதுகிற் புண்பெற்ற வீரர் வாழ விரும்பார்; சேரலாதன் ஒரு பெருவீரனாவன்; அவன் தன் புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர் விட்டான். சேரலாதனின் இச் சீரிய செயல் புலவர் கழாத்தலையார்க்குத் தெரிந்தது; அவன் பெருமையும், அவன் இறந்தமையால் உண்டாய கேடும் விளங்க அழுது பாடினார்; முழுநிலா நாளன்று மாலை கிழக்கே திங்களையும், மேற்கே ஞாயிற்றையும் காணலாம் எனினும், சிறிது நேரத்திற் கெல்லாம், மேலைத்திக்கில் ஞாயிறு மறைந்துவிடும். இந்த உண்மையை உணர்ந்த நம் புலவர், தமிழகத்தின்கீழ்க் கண்ணதாய சோழநாட்டில் கரிகாலன் தோன்றியவுடனே, மேற்கே சேரநாட்டு வேந்தனாகிய பெருஞ்சேரலாதன் மறைந்தமைக்கு, முழுநிலா நாள் நிகழ்ச்சியினை உவமை காட்டியுள்ளமை கழிபேரின்பம் பயப்பதாம்.

"உவவுத் தலைவந்த பெருநாள் அமயத்து
இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித்து எறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள் வடக்கிருந்தனன்." (புறம்: ௬௫)

பழந் தமிழ்நாட்டு மக்கள், ஆற்றல்வாய்ந்த இரண்டு எருதுகளைப் பொரவிட்டு, அவற்றுள் வெல்லும் எருதினைத் தேர்ந்து, அதன் தோலை, மயிர் சீவாதே போர்த்த முரசினையே போர் முரசாகக்கொள்ளும் பண்பினராவர்; தங்கள் பேராண்மை, தங்கள் முரசினும் விளங்குதல் வேண்டும் என்ற வேட்கையினராவர். இந்தச் செய்தியைப் புலவர் தம்முடைய பாட்டொன்றால் விளக்கியுள்ளார்:

> "அண்ணல் நல்லேறு இரண்டுடன் மடுத்து
> வென்றதன் பசகை சீவாது போர்ந்த
> திண் பிணி முரசம்." (புறம்: உஅ௯)

அரசர் தம்கீழ் வாழ்வார் அனைவரும் நல்லவரே ஆயினும், தம் ஆட்சிப் பொறுப்பின் அரிய உண்மைகளை உணர வல்லாராகச் சிலரைக் கொள்ளுங்கால் மிக மிக விழிப்பாயிருத்தல் வேண்டும்; அவ்வாறு கொள்ளப் படுவார்கள் காணலாம் பண்புகளில், அவர் தம் குடிப் பண்பே முன்னின்று உணரலாகும்; நற்குடி வந்தார் நாணத் தகுவன செய்யா நல்லியல்புடையராவர்; இதனாலேயே, அத்தகையார்க்கு உரிய இலக்கணங்களுள்,' 'குடிப் பிறந்து, குற்றத்தின் நீங்கி, வடுப்பரியும் நாணுடையான் கட்டே தெளிவு,'' எனக் குடிப்பிறப்பினை முதற்கண் கூறுவாராயினர்; இப் பண்பினை ஓர் அரசன்பால் கண்ட புலவர், அவன், உழவன் தன்கண் உள்ள எருதுகள் எல்லாம் உற்றுழி உதவும் இயல்பின ஆயினும், அவற்றுள்ளும் நல்லனவற்றைத் தேர்ந்து எடுத்துப் பணிகொள் வதேபோல், பெருமைமிக்க தொல்குடி வந்து குடிப்பண்பு கெடாது வாழ்ந்த மறவர் உள்ளும் சிறந்தானைத் தேடிச் சிறப்புச் செய்வன் என்று கூறித் தன் உழவுநூல் அறிவினையும் புலப்படுத்தியுள்ளார்:

> "ஈரச் செவ்வி உதவின ஆயினும்,
> பல்லெருத் துள்ளும் நல்லெருது நோக்கி
> வீறுவீறு ஆயும் உழவன் போலப்
> பீடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய
> மூதிலாளருள்ளும் காதலின்
> தனக்குமுகந்து ஏந்திய பசும்பொன் மண்டை
> இவற்கு ஈகென்னும்." (புறம்: உஅ௯)

## கஎ. கள்ளம்பாளனார்

'களப்பாள் என்று ஊர் இருத்தல்போலக் கள்ளம் பாள் என்பதும் ஊராக இருக்கலாம்,' என்று கூறுவர் நற்றிணை உரையாசிரியர் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள். இவர் பெயர் கண்ணம்பாளனார் எனவும் ஏடுகளில் காணப்படுவது கண்டு, இவரும், கருவூர்க் கண்ணம்பாளனாரும் ஒருவரோ எனக் கொள்ளவும் கொள்வர் சிலர். இவர் பாடியதாகக் கிடைத்துள்ள செய்யுள், நற்றிணைக்கண் வந்துள்ள பாலைத்திணைச் செய்யுள் ஒன்றே.

பொருள்வயிற் பிரியக் கருதும் தலைமகன், தன் பிரிவைத் தாங்குதற்கு ஆற்றா மென்மையுடையாள் தலைவி என்பதை அறிந்தும், அவள் உடன்வருதற்கு ஆற்றா அருமை உடையது தான் கடந்து செல்லவேண்டிய காட்டு நெறி என்ற அச்சத்தால், அவளுக்கு ஆறுதல் அளிக்கும் அன்புரை பல வழங்கிப் பிரிந்தான் எனவும், அவன் பிரிந்துபோவது, இல்லறமாற்றுதற்காம் பொருள் தேடி வரும் நல்வினைக்கு என்ற நல்லறிவுடையளாய தோழி, அவன் பிரிவினைப் பொறாது வருந்துவளே தலைவி, அவளை எவ்வாறு ஆற்றிக் காப்பேன் எனக் கவல்வதை விட்டு, சென்ற அவன் அரிதிற் பெறுபொருளை விரைந்து பெற்று மீள்க என வாழ்த்தினாள் எனவும் பாடி, அக்கால ஆடவர், பெண்டிர்தம் பெருமையினைப் பாராட்டியுள்ளார் புலவர்.

இவ்வாறு, பொருள்தேடிப் போந்து, விருந்தோம்பி வேளாண்மை செய்தலாம் புகழ்தரு செயல் மேற்கொண்ட மக்கள், அச் செயல் மேற்கொள்வதால், மனைவியர் வருந்து வர்; வழியில் ஏதம் பல உண்டாம் என அஞ்சார்; இப் பண்பு தமிழகத்து மக்களிடையே யன்று, அந் நாட்டு மாக்க ளிடத்தும் உண்டு; இப் பண்பு, தமிழ்நாட்டு மக்கள், மாக்கள் ஆய எல்லாரிடத்தும காணப்படும் இயற்கை உடைத்து எனக்கூற விரும்பும் புலவர், தலைவன் பிரிந்து செல்லும் காட்டுவழி, தன் பெண்புலி, குட்டிகளை ஈன்று,

உணவின்றி வருந்தியுளது என அறிந்த ஆண்புலி, அதற்கு வேண்டும் உணவு தேடிச்சென்று, வழியில், தன் வருகையினை எதிர்நோக்கி, வில்லேந்திய வீரர் பலர் மறைந்து உறைகின்றனர் என்பதையும் அஞ்சாது, களிற்றைத் தேடிப் பாயும் கொடுமையுடையது என்று கூறிய சிறப்பு, அவர் தம் புலமைக்குப் பெருமை யளித்துநிற்றல் காண்க.

வண்ணம் நோக்கியும், மென்மொழி கூறியும்
நீஅவண் வருதல் ஆற்ருய் எனத்தாம்
தொடங்கி ஆள்வினைப் பிரிந்தோர், இன்றே,
நெடுங்கயம் புரிந்த நீரில் நீளிடைச்
செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது,
கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்
இன்புனிற்று இடும்பைதீரச் சினம்சிறந்து
செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை
உயர்மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்
அருஞ்சுரம் இறப்ப என்ப ;
வருந்தேன் ; தோழி ! வாய்க்க ! அவர்செலவே."

(நற் : கசஅ)

## கஅ. கள்ளிக்குடிப் பூதப்புல்லனர்

கள்ளிக்குடிப் பூதம் புலவனர் எனவும், பூரம் புல்லனர் எனவும், பூதம் புல்லனர் எனவும் வழங்கப்பெறும் இயற் பெயரினராய இவர் பிறந்த கள்ளிக்குடி என்ற பெயருடைய ஊர்கள் தமிழகத்தே பல உள ஆதலின் இவர்க்குரிய கள்ளிக்குடி எது என்பதை அறிந்து கொள்வதற்கில்லை. இவர் பாடிய பாக்கள் இரண்டு; ஒன்று நற்றிணையில் உளது; மற்றொன்று குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது. இவர் கால்நடைச் செல்வங்களைக் கருத்தூன்றி வளர்க்கும் அறிவினராவர்; நல்ல பசுக்கள் நாட்டிற்கு வேண்டின், நல்ல காளைகளை வைத்துப் பேணுதல்வேண்டும் என இக் காலத்தாரும் கூறுவர்; கூறுவதோடு பேரூர் ஒவ்வொன் றினும் ஒரு நல்ல காளையை அரசியலார் வைத்துப் பேணு மாறு வழிசெய்தும் உள்ளனர்; இந்த அறிவினைத் தமிழர் அன்றே பெற்றிருந்தனர் என்பதை அறிவிக்கின்றார் நம் புலவர்; ஊர்தோறுமேயன்றி, ஒவ்வொரு தொழுவமும், ஒரு நல்ல ஆனேற்றினைக் கொண்டு விளங்கும் எனக் கூறி யுள்ளார் இவர்:

"நல்லேறு இயங்குதோ றியம்பும்
பல்லான் தொழுவத்து ஒருமணிக் குரலே."

(குறுந்: ககo)

வீட்டின் நல்ல இடத்தே பல்லிசொல்லின், நல்லது உண்டாம் எனக்கூறும் பல்லி சொல்லின் பயனறி அறி வினை இவரும் கொண்டுளார் என்பதை அவர் பாட்டால் அறியலாம்.

"நீங்குக மாதோ நின்அவலம்; ஓங்குமிசை
உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே."

(நற்: ௩௩௩)

## கக௯. கள்ளில் ஆத்திரையனார்

கள்ளில் என்பது தொண்டைநாட்டில் உள்ளதோர் ஊர்; இக்கள்ளில், "தொண்டைநாட்டுப் புழற்கோட்டத்துக் குன்றிகை நாட்டுத் திருக்கள்ளில்" (A. R. 486 of 1926) எனக் கல்வெட்டுக்களுள் வழங்கப்பெறும்; கள்ளில் இருந்த குன்றிகைநாடு, குன்றகநல்லூர் என அவர் பாட்டிலேயே இடமும் பெற்றுளது; அவ்வூரில் உள்ள சிவனைக் "கள்ளின் மேய அண்ணல்," எனத் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். ஆத்திரையன் என்ற இவர் இயற்பெயர், ஆத்திரேயன் என்பதன் மரூஉவடிவாம்; அவர் அந்தணராவர் என்று கூறுவாரும் உளர். இனி, கள்ளுண்பார், கள்ளை உண்ணவேண்டி மேற்கொள்ளும் பயணத்தைக் "கள்ளில் கேளிர் ஆத்திரை," எனக் குறிப்பிட்டமையால் இவர் இப்பெயர் பெற்றார் என்று கொள்வாரும் உளர்.

ஆத்திரையனார், அருமன், ஆதனுங்கன், நல்லேர் முதியன் ஆகிய தலைவர்களைப் பாடியுள்ளார்; அருமன் என்பான் சிறுகுடி என்னும் ஊரினன்; காக்கைகள் இனத்தோடு இருந்து உண்ணுமாறு கடவுட்கு, கருணைக்கிழங்கோடுகூடிய செந்நெல்லாலாய வெண்சோற்றினைப் பலி தருவன் என இவன் பெருமை பாராட்டுவர் நக்கீரர்; அவன் மூதூர் பழைமை உடையது; பல்வளம் நிறைந்து அழகுடையது என்று கூறுகிறார் நம் புலவர். "ஆதி அருமன் மூதூர் அன்ன."

ஆதனுங்கன் ஒரு குறுநில மன்னன்; வேங்கடமலையும், அதைச் சூழவுள்ள நாடும் இவனுக்கு உரியது; இரவலர் இன்மை தீர்க்கும் இனிய உள்ளம் உடையவன்; கள்ளில் ஆத்திரையனார் இளைஞராய் இருந்த காலத்தே இவனைச் சென்று கண்டார்; அப்போது ஆங்குவந்த புலவரைப் "புலவ! கோடைமுற்றி வறகடம் உற்ற காலத்தே உறுபொருள் அளித்து உற்றதுயர் தீர்ப்பாருள்

என்னையும் ஒருவனாக உள்ளுவாயாக!" என வேண்டி, வேண்டும் பொருள் அளித்து அனுப்பினான்; அவன் அன்னனாதலின், ஆத்திரையனார்க்கு அவன்பால் பேரன்பு உண்டாயிற்று; அவனைத் தன் உள்ளத்தே வைத்துப் போற்றுவாராயினர்; அவனை மறப்பதும் அவர்க்கு அரிதாயிற்று; அவன் மறத்தற்கரியன் என்பதை அழகிய ஒரு பாட்டால் அவனுக்கு விளக்கியுள்ளார்.

"அன்ப! ஆதனுங்க! என் உள்ளத்தைத் திறந்து பார்ப்பார் உண்டானால், அவர் ஆண்டு நீ குடிகொண்டிருப்பதைக் காண்பர்; நின்னை யான் மறவேன்; நின்னை மறக்கும் காலமும் எனக்கு உண்டாமாயின், அக்காலம், என்னை யான் மறக்கும் காலமாகும்; அக்காலம், என் உயிர், என் உடலைவிட்டுப் பிரியும் காலமாம்; அந்தக் காலத்தில்தான் யான் நின்னை மறப்பேன்," என்று கூறும் புலவர் உள்ளம், அவர் அவன்பால் கொண்டிருந்த அளவிறந்து விளங்கிய அன்பின் பெருமையினை அறிவித்து நிற்றல் அறிக.

"எந்தை! வாழி! ஆதனுங்க! என்
நெஞ்சம் திறப்போர் நிற்காண்குவரே;
நின்னியான் மறப்பின், மறக்கும் காலை
என்உயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்,
என்னியான் மறப்பின், மறக்குவென்." (புறம்: கஎரு)

பின்பொருகால் ஆதனுங்கன் ஊர் சென்றவழி, ஆங்கு அவன் இறந்துவிட்டானாக, அவன் வழிவந்த முதியன் என்பான் வாழ்ந்திருந்தானாக, அவன்பால், தாம் இளைஞராய் இருந்தகாலத்தே ஆங்கு வந்ததையும், அப்போது ஆதனுங்கன் காட்டிய அன்புடைமையினையும் எடுத்துக்கூறி, அவ் ஆதனுங்கனேபோல், தம் வறுமைச் சுற்றத்தின் வாட்டமகல, வரையாது தருக என வேண்டியும், ஆதனுங்கன் இறந்தானாக ஆண்டு எழுந்த சாப்பறை ஒலி, மீண்டும், எழாதொழிக என வாழ்த்தியும் மீண்டார்; அவ்வாறு முதியனைப் பாடுங்கால், அவன், பகைவர் தோற்று ஓடுங்கால் அவரைப் பின் நின்று தாக்காப் பேராண்மை

புடையவன்; தன் மனம்போன வழியெல்லாம் போகா மாண்புடையவன் என்று பாராட்டினர்:

“செல்வுழி எழாஅ நல்லேர் முதியன்
ஆதனுங்கன் போல நீயும்
பசித்த ஒக்கல் பழங்கண் வீட
வீறுசால் நன்கலம் நல்குமதி! பெரும!
ஐதகல் அல்குல் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங் கடையானே.” (புறம்: ௩அக)

வேங்கடநாட்டார், வேட்டைமேற்சென்று, பிடியானை வருந்த அதன் கன்றினைக் கைப்பற்றிக் கொணர்ந்து தம் ஊரிடத்தே கட்டும் வழக்கத்தினை அறிவித்துள்ளார்:

“புன்தலை மடப்பிடி இனையக், கன்றுதந்து
குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்கும்
கல்கெழு அருவி வேங்கடம்.” (புறம்: ௩அக)

சந்திரகுப்தன் பிறந்த மோரியர் என்ற வடநாட்டார், தென்னாட்டு அரசுகளைக் கைக்கொண்டு ஆளும் கருத்தினராய்த் தேர்ப்படைமிக்க பெரும் படைத்துணை கொண்டு வந்தனர் என்றும், அவ்வாறு வந்தார்க்கு வடுகர் படைத் துணை வழங்கினர் என்றும், அவ்வாறு வந்தாரை மோகூர் மன்னன் பணியாது எதிர்த்தான் என்றும், அவனுக்குத் துணையாகக் கோசர் என்பார் இருந்தனர் என்றும், அவ்வாறு வந்த மோரியர் தம் தேர்கள் செல்லாவாறு குறுக்கே நின்று தடுத்து நிறுத்திய மலைகளை வெட்டி வழிசெய்து வந்தனர் என்றும் பழந்தமிழ்ப் பாக்கள் அறிவிக்கின்றன; இவ்வரிய வரலாற்று உண்மையினை அறிவிப்பாருள் நம் புலவர்களில் ஆத்திரையனாரும் ஒருவராவர். வரலாறு களை அவர் உரைப்பது காண்க:

“விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரிதிரிதரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய்.” (புறம்: கஎ௫)

## ௨௦ காப்பியாற்றுக் காப்பியனார்

இவர், காப்பியாறு என்னும் ஊரில் பிறந்த காப்பியனார் என்ற பெயருடையவராவர்; காப்பியன் என்ற பெயருடையார் பலர் தமிழறிவுடையராய் வாழ்ந்துள்ளனர்; தமிழ்மொழியின் முதற் பேரிலக்கணமாகிய தொல்காப்பிய நூலாசிரியர் பெயரும் இக்காப்பியனார் என்பதே; காப்பியர் என்பார், காப்பியக் குடிவழி வந்தவர்; காப்பியக்குடி, சேர, சோழ, பாண்டியர் குடிகளைப்போல் ஒரு பழங்குடி; அஃது அந்தணரைக் குறிக்க வழங்கும் என்று கூறுப. சிலர், காப்பிக்குடி என்பது ஓர் ஊரின் பெயர்; அது பழைய புகார் நகரத்திற்கு ஏறக்குறைய ஒரு காவத தூரத்தில் இருத்தல்வேண்டும் என்று கூறுவர். தஞ்சை, மாயவரத்தை அடுத்துக் காப்பியக்குடி என்றோர் ஊர் உளது; தென்னார்க்காடு மாவட்டத்தில், விழுப்புரத்திற்கு அணித்தே காப்பியாமூர் என்னுமோர் ஊர் உளது; இக்காப்பியனார் பிறந்த காப்பியாறு யாண்டுளது என்பதையும் அறிந்து கொள்வதற்கில்லை; நற்றிணை பாடிய ஆசிரியர்களுள், காப்பியஞ்சேந்தனார் என்பாரொருவர் உளர்; அவர் இக்காப்பியனார் மகனவர் என்று கருதுவர் ஆராய்ச்சியாளர்.

காப்பியாற்றுக் காப்பியனாரால் பாடப்பெற்ற பெருமையுடையான், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் ஆவன்; இவர் பாடிய பாடல்கள், பதிற்றுப் பத்தில் அச்சேர வேந்தரைப் பாடிய நான்காம் பத்துப் பாடல்களாம். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கும், வேளாவிக்கோமான் பதுமன்தேவியார்க்கும் பிறந்த பெருமை மிக்கோனவன்; இவன் முடிபுனைதற்குரிய காலத்தே, உரிய முடியும் கண்ணியும், காணப் பெறாமை கண்டு, நாரால் புனைந்த முடியும், களங்காயால் கட்டிய கண்ணியும் கொண்டு முடி சூட்டிக் கொண்டானாதலின், இவன் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் எனப் பெயர் பேயர்பெற்றான் எனப் பதிற்றுப் பத்தின் பழைய உரையாசிரியர் கூறுவர்; இம்முடியின் வனப்பினைப் புலவர்

காப்பியனாரும், தாம் பாடிய பாட்டொன்றில் வைத்துப் பாராட்டியுள்ளார்.

இழைத்து வைத்தாற்போன்ற புள்ளிகள் நிறைந்த கழுத்தினையும், சிறிய முதுகினையும் உடைய அழகிய சிறு புறாக்கூட்டம், வலையோ எனக்கண்டு அஞ்சுமாறு அழிந்த வேலமரத்தின் உலர்ந்த சிறு கொம்பினிடத்தே, சிலந்தி நூலால் ஆக்காமல், தன் வாயினின்றும் நுண்ணிய மயிர் போல் ஊறிய இழையால் பின்னிய வலைபோல், பொன் தகட்டால் ஆக்கப்பெற்று, விளிம்பிலே மணிகள் கோக்கப் பெற்ற ஒரு கூட்டின் புறத்தே நார்கொண்டு பின்னி, இழை யணிந்து ஒளிவீசுமாறு முத்து வடங்கள் கோக்கப்பெற்றது அவன் முடி என்று கூறுகிறார் அவர் :

"வாலிதின், நூலின் இழையா, நுண்மயிர் இழைய
பொறித்த போலும் புள்ளி எருத்தின்
புன்புறப் புறவின் கணநிரை அலற
அலந்தலை வேலத்து உலவை அஞ்சினைச்
சிலம்பி கோலிய அலங்கல் போர்வையின்
இலங்குமணி மிடைந்த பசும்பொன் படலத்து
அவிர்இழை தைஇ, மின்உமிழ்பு இலங்கச்
சீர்மிகு முத்தம் தைஇய
நார் முடி." (பதிற்று : ௩௧)

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலோடு பகைத்து நின்றோர் நன்னனும், நெடுமிடலஞ்சியுமாவர் ; நன்னன், நார்முடிச்சேரல் நனிஇளையனாய் இருந்த காலத்தே, அவன் நாட்டின் ஒரு பகுதியைக் கவர்ந்துகொண்டான் ; களங் காய்க்கண்ணி நார்முடிச்சேரல் அரசுகட்டிலேறியதும், நன்னனுக்குரிய பூழிநாட்டின்மீது படையெடுத்துச் சென்று வாகைப்பெருந்துறை என்னுமிடத்தே போர் செய்து நன்னனை வென்று, இழந்த தன் நாட்டை மீளவும் பெற்று மீண்டான் ; சேரல் பெற்ற இவ்வெற்றிச் சிறப் பினைப் புலவர் காப்பியனார்,

"பொன்னம் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்." (பதிற்று: ௪0)

எனப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். அதியமான் நெடுமான் அஞ்சியின் குலத்துவந்த நெடுமிடல் என்பானையும் வென்று அவன் பிழையா விளையுள் நாடகப்படுத்தினன் நார்முடிச் சேரல் என்றும் கூறுவர் புலவர்.

நார்முடிச்சேரல், வண்டன் என்னும் வள்ளல்போல் புகழும் செல்வமும் பெருகப்பெற்றவன், "வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து வண்டன் அனையைமன் நீயே" என்றும், தளர்ந்த குடியினர் தம் தளர்ச்சி போக்கும் தாளாளன், "துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றி" என்றும், ஆன்றவிந் தடங்கிய சான்றோனுவன், "ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்!" என்றும், இவை உண்டற்கினிய என உரைத்தவழி அவற்றைத் தனித்திருந்துதானே உண்ணும் உள்ளம் அற்று, அவற்றைப் பலர்க்கும் பகுத்து ஊட்டும பண்புடையன், "இனியவை பெறினே, தனிதனி நுகர்கேம்; தருக என விழையாத் தாவில் நெஞ்சத்துப் பகுத்தூண் தொகுத்த ஆண்மை," என்றும், இவ்வாறு அவன் எல்லாவகையானும் சிறந்து விளங்கினமையால், உலகத்துச் செல்வர் பல்லோருள்ளும், இவனே புகழால் சிறந்தோனுவன், "உலகத்தோரே பலர் மன் செல்வர்; எல்லாருள்ளும் நின்நல்லிசை மிகுமே," என்றும், அவன் புகழ் எண்ணற்கியலாவாறு இறப்ப உயர்ந்தது; எண்ணின், எண்ணத் தொடங்குவார் எண்ண அறியாது எண்ணல் தடையுறும், "எல்லாம் எண்ணின் இடுகழங்கு தபுந," என்றும் இவன் புகழைப் போற்றிப் போற்றிப் புகழ்ந்துள்ளார் காப்பியாற்றுக் காப்பியனார்.

நார்முடிச்சேரலுக்குரிய மேற்குத் தொடர்ச்சி மலையினைக் கூறுங்கால், வடக்கு தெற்காக அமைந்து நீர்கொண்டுவரும் மேகத்தைத் தடுத்து மழைதரும் கொடுமுடிகளைக் கொண்ட மலை எனக் கூறுவது, புலவர் நிலநூல் அறிவினராவர் என்பதை அறிவித்து நிற்றல் காண்க.

> "கருவி வானம் தண்தளி தலைஇய
> வடதெற்கு விலங்கி விலகுதலைத்து எழிலிய
> பனிவார் விண்டு." (பதிற்று : ௩௧)

## உக. காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்

"பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பின் புகார்" எனப் போற்றப்படும் புகழ்சால் வளநகர் காவிரிப்பூம்பட்டினம்; காவிரிப்பூம்பட்டினம், கண்ணகியும், அவள் போற்றும் கற்புடை மகளிர் எழுவரும் பிறந்த பெருமை மிக்க பேரூர்; கரிகாற் பெருவளத்தான் காலத்தே, கடல் வாணிபம் சிறந்த கடற்கரை நகரமாய்த் திகழ்ந்தது காவிரிப்பூம்பட்டினம்; கருவூர்ப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என்ற இரு பெரும் பிரிவாய் அமைந்த அணிமிகு நகரம், காவிரிப்பூம்பட்டினம்.

இக் காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்த புலவர்களுள் ஒருவராகிய கந்தரத்தனார், பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் வந்துளது; தலைவன் வரைந்து கொள்ளாமையால் வாடிய தன் மேனியின் நிலையறிந்து தாய் இற்செறித்தாளாகவே, வருந்திய தலைமகளின் வருத்தம் தீர, வரைந்துகொள்வாயாக எனக் கூறும் தோழி, காப்போர் இல்லா நிலையில், தலைவன் கண்டு அன்பு பாராட்டிய தலைமகள், தாயால் இற்செறிக்கப்பட்டாளாகவே காண்டற்கரியளாயினள் என்ற நிலையினை, ஆண்குரங்கு, கானவன் காவல் மறந்த காலம் பார்த்து, தோண்டிச் சுவைத்த பலாப்பழம், அவன் வலை மாட்டிய பின்னர், அதற்கு அரிதாயது என்ற இயற்கை நிலையினை எடுத்துக்காட்டி, விளக்கிவிட்டு, இவ்வாறு இவள் ஈண்டு வருந்த, தன்னை அடைந்தோர் துயர் தீர்க்கும் பண்புடையானல்லன் என்ற பழி மேற்கொண்டு வாழ்தல், நினக்கு அழகன்று என்று கூறினள் எனப் பாடிய புலமை நலம் போற்றற்குரியதாம்:

"கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்;
காவல் மறந்த கானவன், ஞாங்கர்க்
கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்
குன்றநாட தகுமோ? பைஞ்சுனைக்
குவளைத் தண்டழை இவள் ஈண்டு வருந்த
நயந்தோர் புன்கண் தீர்க்கும்
பயந்தலைப் படாஅப் பண்பினை யெனினே."

(குறுந்: ந௫உ)

## ௨௨. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

காவிரிப்பூம்பட்டினத்துப் பிறந்த புலவர்களுள் காரிக் கண்ணனாரும் ஒருவர்; காரிக்கண், அழகு தரும் கண் என்ப; கருமை, கண்ணிற்குப் பேரழகு தரும். இதனால், இது உறுப்பான் அமைந்த பெயர்; காரி : கரிக்குருவி; கரிக்குருவியின் கண்போலும், கண்ணுடைமையால், இவர்க்கு இப்பெயர் வந்தது என்றும் கூறுவர்; இவர் பாடிய பாக்கள், நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆய நான்கினும் இடம் பெற்றுள்ளன. "ஊரும், பெயரும்" என்ற தொல்காப்பியம் பொருளதிகாரச் சூத்திர உரையில் (629) "காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், அறுவை வணிகன் இளவேட்டன் என்பன வணிகர்க்குரியன" என வருவதால், இவர் வணிகர் என்பது புலனும். கோடையால் அழிந்த பாலை நிலத்தில் உண்ணுவதற்கு ஒன்றும் கிடைக்காமையால், உடல் மெலிந்தும், மண்ணுதற்குரிய நீர் கிடைக்காமையால் மாசுண்டும், அழகு குறைந்த யானைகளுக்கு, உண்ணுதும் மண்ணுதும் உடலை வருத்தித் தவம் மேற்கொள்ளும் தவசிகளை உவமை கூறியிருப்பதாலும், "உண்ணாமையின், உயங்கிய மருங்கின் ஆடாப் படிவத்து ஆன்றோர்போல, ........ கான யானை கவினழிகுன்றம் "(அகம் : 123), தன்னைப் பாடிவருவார், கல்வியிற் சிறந்தாராயினும், கல்வியிற் சிறவாதாராயினும், அவ்விருவர் பாராட்டினையும் ஏற்றுப் பரிசளிக்கும் பாண்டியன் நன் மாறனுக்கு, வல்லுநரும், வல்லாருமாகிய இருதிறத்தார் புகழுரைகளையும் ஏற்றுக்கொள்ளும் இயல்பினனாய மாயோனை உவமை கூறியிருப்பதாலும், "வல்லாராயினும், வல்லுநராயினும், புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன, உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற!" (புறம் : 57), பெருந்திருமாவளவனும் பெருவழுதியும் அன்புகொண்டு ஒன்றுகூடி ஒருங்கிருந்த காட்சி, பலதேவனும், கண்ணனும் ஒன்றுகூடி ஒருங்

இருந்த காட்சி போன்றுளது எனப் பாராட்டுவதோடு அவ்விரு தெய்வங்களுக்குரிய நிறத்தினையும் கூறி, அவரை 'இருபெரும் தெய்வம்' என உயர்த்திக் கூறுவதாலும், "பால் நிற உருவின் பனைக்கொடியோனும், நீல் நிற உருவின் நேமியோனும் என்று, இருபெருந் தெய்வம் உடன் நின்றாஅங்கு", இவர், வைண சமயத்தைச் சார்ந்த வைதீக மதத்தினராவர் என்பது தெளிவாம்.

காரிக்கண்ணனார், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்ற பேரரசர்களையும், பிட்டங்கொற்றனையும், ஆய் அண்டிரனையும் பாராட்டிக், கோசர் என்பார் தம் படையயில் முறையினைக் குறிப்பிட்டுள்ளார்.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், போர்க் கொடுமையால் நாடு பாழாவது காணப்பொறாப் பேருள்ளம் வாய்ந்தவராவர்; அக்கொடுமைகளைக் காணப்பொறாமல் கண்ணீர்விட்டுக் கலங்குவதோடு நின்றுவிடாது, அப் போர்க் கொடுமைகளை இயன்றவரை இல்லாமல் ஆக்குவதைக் கடமையாகக் கொண்டவராவர்; அக்கடமையினைக் காலம் அறிந்து, அரசர் தம் இயல்பறிந்து, அவர் ஏற்குமாறு கூற வல்ல அறிவும் அவர்பால் அமைந்திருந்தது; இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், ஆவூர் மூலங்கிழார், நக்கீரர், மதுரை மருதன் இளநாகனார், வடம வண்ணக்கன் பேரி சாத்தன் முதலாய பெரும்புலவர் பாராட்டத்தக்கப் பேராற்றல் வாய்ந்தவன்; தன் படை வன்மையால், பகைவர் நாட்டை அழித்து மகிழ்வதில் பேரின்பங்கொள்ளும் போர்வெறி கொண்டவனவன்; அவனால் பல நாடுகள் பாழாவதைக் கண்ட புலவர் காரிக் கண்ணனார், அவனுக்கு அறிவுரை அளித்து, அதைத் தடுக்க எண்ணங்கொண்டார்; அவன்பால் சென்றார்; அவனை நோக்கி "அரசே! பகைவர் நாட்டைப் போருடற்றிக் கைப்பற்றும் காலத்தே, நின் வீரர், அந்நாட்டுக் கழனிகளில் புகுந்து ஆங்கு விளைந்து முற்றி விளைந்து

நிற்கும் நெற்பயிர்களைக் கொள்ளையிட வேண்டின், அவர் கள் அவ்வாறே கொள்ளையிடுக! அவர் நாட்டகத்து ஊர் களைத் தீயிட்டுச்சுட வேண்டின் அவ்வாறே சுடுக! நின் கைவேல், அப்பகைவரை அழிக்க வேண்டின், அவ்வாறே அழிக்கட்டும்! ஆனால், அப்பகைவர் நாட்டுக் காவற் காடுகளில் வளர்ந்துள்ள மரங்களை வெட்டிப்பெறும் கட்டுத்தறி, நின் யானைகளைப் பிணிக்கும் அத்துணை வன்மையுடையன அல்ல; ஆதலின், அக்காவற் காட்டை அழிப்பதை மேற்கொள்ளற்க!'' என்று அவன் ஆற்றலைப் போற்றுவார்போல் கூறி, அவர் காவற் காடு இளைய மரங்களை உடையது; ஆதலின், அவர்கள் அரசு அண்மை யில் தோன்றிய அரசு; அதை அழிக்க எண்ணுதல் அருளுடைமையன்று; ஆகவே, அவர் நாட்டை அழிக் காது அருள்பண்ணுவாயாக என்று போரை நிறுத்த வேண்டினார்.

> "நீயே, பிறர்நாடு கொள்ளுங்காலை, அவர் நாட்டு
> இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க!
> நனந்தலைப் பேரூர், எரியும் நைக்க!
> மின்னு நிமிர்ந்தன்ன நின் ஒளிறிலங்கு நெடுவேல்
> ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க! என்னதூஉம்
> கடிமரம் தடிதல் ஓம்பு! நின்
> நெடுநல் யானைக் கந்து ஆற்றாவே." (புறம்: ருஎ)

போர்க் கொடுமையினை, இவ்வாறு பொதுவகையால் உணர்ந்து போக்க எண்ணும் உள்ளங்கொண்ட புலவர், தாம் பிறந்த தமிழகம், தனிச்சிறப்பு வாய்ந்த தன்னே ரில்லா நாடாக விளங்குதல்வேண்டும் என்ற வேட்கை யுடையவராவர்; வேட்கைகொண்டு, அதைக் குறைவற நிறைவேற்றிக் கொள்ளுதற்காம் வழிவகை காணாது வருந் தியவரல்லர் நம் புலவர்; தமிழகம், தான் பெற்றிருந்த பெருநிலை இழந்து இன்று தாழ்ந்து கிடப்பதற்குக் கார ணம், தமிழ் வேந்தர்கள், தம்முள் ஒற்றுமையிலராய், ஒருவரோடொருவர் பகைகொண்டு, ஒருவரை யொருவர் கொன்றும், ஒருவர் நாட்டை ஒருவர் அழித்தும் வாழ்ந்த

அறிவிழந்த வாழ்க்கையினாலேயேயாம் என்பதை எவரும் அறிவர்; இந்த உண்மையை அன்றே உணர்ந்திருந்தார் நம் புலவர் காரிக்கண்ணனார்; இதனால், அவ்வரசர்களிடையே ஒற்றுமை நிலவக்கண்டு மகிழவும், அவரிடையே நிலவும் வேற்றுமையொழியப் பாடுபடவும் விரும்பிற்று அவர் உள்ளம்; அவர் காலத்தே, சோழ நாடாண்டிருந்த குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டி நாடாண்டிருந்த, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும், அக்கால அரசர் தம் பண்பிற்கு மாறாக, தம்முள் நட்பு பூண்டு வாழக்கண்டார் புலவர்; அக் காட்சி அவருக்குப் பெருமகிழ்ச்சி அளித்தது; அவர்கள், எப்போதும், அவ்வாறே ஒற்றுமையுள்ளத்தராயின், அவரையோ அவர் நாட்டையோ அழிப்பார் எவரும் இலர்; மாறாக, அவர் எண்ணிய நாட்டில், அவர் அரசு நடைபெறும் என்பதை அறிவார்; அதனால், அவர்கள் துணைகொண்டு தமிழகத்திற்குப் புறத்தே உள்ள நாடுகளில் எல்லாம், தமிழ் வேந்தர் கொடி பறத்தலைப் பார்த்து மகிழ எண்ணினார்; ஆனால், அம் மகிழ்ச்சிக்கிடையே ஒரு பேரச்சம் அவருக்கு உண்டாயிற்று; தமிழ்வேந்தர்கள் தம்முள் ஒற்றுமை கொண்டுவிடுவராயின், தமிழகம் தழைக்கும், தமிழரசு வாழும்; தமக்குக் கேடு உண்டாம் என்ற எண்ணமுடையாராய பகைவர், அவ் வேந்தர்களிடையே பகைவரை வழி செய்யவும் செய்வர்; அவர்கள், அவ் வேந்தர்களிடையே, அவருக்கு நண்பரைப்போலவும், நல்லன தேடுவார்போலவும், முன்னோர் நெறிமுறையினை உரைப்பார் போலவும் பழகிப், பாழ்தரும் உரைகளைப் பக்குவமாகக் கூறித் தம் எண்ணத்தை ஈடேற்றிக்கொள்வர் என்பதை அறிவார் புலவர்; ஆதலின், அவ் வேந்தர் தம் ஒற்றுமை கண்டு, உவத்தலோடு நில்லாது, அவருக்கு அவர் கூடியிருத்தலால் அவர்க்கும், அவர் தம் நாடாம் தமிழகத்திற்கும் உண்டாம் ஆக்கங்களை எடுத்துக் கூறுவதோடு, அவ்வொற்றுமை கெடுக்கப் பகைவர் முன்வருவர்; அவர்கள், நண்பரைப்போலவும், நன்னெறி உரைப்பார்போன்றும், முன்னோர் வழிசெல்ல முன்வருவார்போன்றும், வேந்தர்க்

குக் கேடும், தமக்கு ஆக்கமும் உண்டாம் உள்ளத்தராய் உரைப்பர்; அவர் உரையினை வேந்தர்கள், தம் செவியுட் கொள்ளுதல் கூடாது; வேந்தர்கள், அவ்வாறு, ஒற்று மையும், உறுதிப்பாடும் உடையராயின், இத் தமிழகமே யன்றி, உலகமே வேண்டினும் வரும் என்று கூறி, அவ் வொற்றுமை நின்றுநிலவ வழியும் வகுத்துள்ளார் :

"இன்னீ ராகலின், இனியவும் உளவோ?
இன்னும் கேண்மின்; நும்இசை வாழியவே;
ஒருவீர், ஒருவீர்க்கு ஆற்றுதிர்; இருவீரும்,
உடனிலை திரியீ ராயின், இமிழ்திரைப்
பெளவ முடுத்த இப்பயங்கெழு மாநிலம்,
கையகப் படுவது பொய்யா காதே;
அதனால், நல்லபோலவும், நயவ போலவும்,
தொல்லோர் சென்ற நெறிய போலவும்,
காதல் நெஞ்சின் நும்இடை புகற்கு அலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது,
இன்றேபோல்க நும்புணர்ச்சி! வென்று, வென்று
அடுகளத்து உயர்க நும்வேலே; கொடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாக! பிறர்குன்று கெழுநாடே." (புறம்: ருஅ)

பாண்டிநாடு முத்தால் பெருமையுற்றது என்ப; கொற்கைத்துறை முத்தும், பொதியமலைச் சந்தனமும், பாண்டிநாட்டு அரசியல் பண்டாரங்கள், பிறநாட்டு மக்கள் வாணிபத்தால் தந்த பொன்னால் நிறைய வழிசெய்தன; பாண்டியர்க்கு வளம்தரும் அவற்றைப் பாராட்டும் புலவர், நெல்வளமும், நீர்வளமும், உலகத்தில் உள்ள அரசர்க் கெல்லாம் உண்டு; எல்லார்க்கும் உள்ள பெருமையைத் தாமும் கொள்வது, பேரரசராகிய பாண்டி வேந்தர்க்கு உண்மையுயர்வாகாது என்ற கருத்தினராய், அவர்கள் அவற்றால் பெருமைகொள்ளாது, மலையில் விளைந்த சந்த னத்தாலும், கடலில் விளைந்த முத்தாலும், மும்முரசாலும்

பெருமைகொள்வர். இதைப் புலவர் எடுத்துக் காட்டிப் பாராட்டியுள்ளார்:

"இவனே, நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளிய, என
வரைய சாந்தமும், திரைய முத்தமும்
இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே." (புறம்: ருஅ)

குதிரைமலைக்கு உரிய ஒரு பெருவீரன், பிட்டங்கொற்றன் என்ற பெயரோடு வாழ்ந்திருந்தான்; அவன் பேராண்மையும், கைவண்மையும் ஒருங்குடையவன்; புலவர் பலர், அகத்திலும், புறத்திலும் அவனைப் பாடிப் பாராட்டியுள்ளனர்; அத்தகையானைத் தாமும் பாராட்ட விரும்பினார் காரிக்கண்ணனார். பகைவர் நாட்டின்மீது போர் தொடுத்துப் புறப்படுங்கால், அப் படைக்குத் தலைமைதாங்கி முன்னேநின்று, பகைவர் படை எறியும் படைக்கலங்கள் அத்தனையும் தன்மேலேற்றுத் தன் படையினைக் காப்பதும், பகைவர் பெரும்படை, தம் நாட்டின் மீது படையெடுத்து வருங்கால், அப் படை தம் நாட்டுள் புகுந்துவிடாவண்ணம், பெருகிவரும் ஆற்று வெள்ளத்தை இடைநின்று தடுக்கும் கல்லணைபோலத், தான் ஒருவனாகவே நின்று தடுத்து அழிப்பதும் ஆற்றல்மிக்க பெருவீரர்க்கு அழகாம். பிட்டங்கொற்றன் ஒரு பெரிய போர் வீரன்; ஆதலின், அவன்பால் இப் பண்பு இயல்பாகவே அமைந்து விட்டமையால், அவனைக் காண்பது பரிசிலர்க்கும் அருமையாம் என்று கூறி அவன் போர்வன்மையினைப் பாராட்டுவார்போல், போர் வீரர்தம் பண்பு இஃதாதல்வேண்டும் என்று கூறியுள்ளார் புலவர்.

"நும்படை செல்லுங்காலை, அவர்படை
எடுத்தெறி தானை முன்னரை எனாஅ,
அவர்படை வரூஉங்காலை, நும்படைக்
கூழை தாங்கிய அகல்யாற்றுக்
குன்றுவிலங்கு சிறையின் நின்றனை எனாஅ
அரிதால் பெரும! நின் செவ்வி." (புறம்: கசுக)

பிட்டங்கொற்றன், பகைவர் படைக்கலங்களால் அழியாத் திண்மை வாய்ந்தவன் என்று, அவன் அழிக்கலாகா ஆற்றலைப் போற்றவந்த புலவர், கோசர் என்ற புறநாட்டுப் போர்வீரர், படைப்பயிற்சி பெறுங்கால், முருக்கமரத்தான் இயன்ற ஓர் இலக்கை அமைத்து, அதன்மீது அம்பு முதலாயின எறிந்து, எறிந்து பயில்வர்; அவ்வாறு அவர் பலகால் எறியினும், அவ் விலக்கு அழியாது; அஃது அழியாது நிற்பதேபோல் பிட்டங்கொற்றனும் பகைவர் படைக்கலன்களால் அழிவுறான் என்று கூறி, அவன் ஆற்றலோடு, கோசர் படைக்கலம் பயிலுமாற்றினையும் விளக்கியுள்ளார்:

"இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க்கு உலையா நின்வலன் வாழியவே."
(புறம்: கசுக)

இவ்வாறு, பிட்டங்கொற்றன் ஆற்றலைப் பலபடப் போற்றிப் புகழ்ந்த புலவர், அவன் கொடைச் சிறப்பினை மற்றொரு பாட்டில் நன்கு காட்டியுள்ளார்.

"இன்று செலினும் தருமே; சிறுவரை
நின்று செலினும் தருமே; பின்னும்
முன்னே தந்தனென் என்னாது, துன்னி
வைகலும் செலினும் பொய்யல னாகி,
யாம் வேண்டியாங்கு எம்வறுங்கலம் நிறைப்போன்;
..........................................
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்,
களமலிநெல்லின் குப்பை வேண்டினும்,
அருங்கலம் களிற்றொடு வேண்டினும், பெருந்தகை
பிறர்க்கும் அன்ன அறத்தகை யன்னே."
(புறம்: கஎக)

பிட்டங்கொற்றன், இத்தகைய கொடையுடையானாதலின், அவன்பால் பேரன்புகொண்ட இரவலர், அவனுக்குச்

சிறுதுயர் உண்டாயினும், அதைத் தமக்குற்ற பெருந் துயராக்கொண்டு பெரிதும் வருந்துவர்; அவன் துயர் உறாப் பெருவாழ்வினையேதலே விரும்பினர்; இரவலர்தம் உள்ளத்தை, 'அவன் அடியில் சிறுமுள்ளும் தைக்கா திருக்குமாக' என வேண்டும் முகத்தான் நன்கு காட்டி யுள்ளார்; அவன் இன்னன் ஆதலின், வறுமையால் வாடும் புலவர்கள் வாழவேண்டின், பிட்டங்கொற்றன் வாழ்தல் வேண்டும் என்று 'வாழ்த்துவது தாம்வாழ' என்ற முறைப்படி வாழ்த்தினர்;

> "அன்னன் ஆகலின், எந்தை உள்ளடி
> முள்ளும் நோவ உறாற்க தில்ல;
> ஈவோர் அரிய இவ்வுலகத்து
> வாழ்வோர் வாழ அவன்தாள் வாழியவே."
>
> (புறம்: கஎக)

புலவர் காரிக்கண்ணனர், தாம் பாடிய அகத்துறைப் பாட்டொன்றில், தம் நாட்டுச் சோழ அரசர்தம் அருந் திறல், அந்நாட்டிற்கு அணி நல்கும் காவிரியாற்றுக் கவின் ஆகியவற்றைப் பாராட்டித் தம் நாட்டுப் பற்றினை நன்கு புலப்படுத்தியுள்ளார்:

> "நிலவென
> நெய்கனி நெடுவேல், எஃகிலை இமைக்கும்
> மழைமருள் பல்தோல், மாவண் சோழர்
> கழைமாய் காவிரிக் கடல்மண்டு பெருந்துறை."
>
> (அகம்: கஉந)

தன்பால் இரவலர் பலர் வருவர்; அவர்க்குத் தருதற்கு வேண்டி யானைகள் பல தேவை என உணர்ந்து யானைகளைக் கூட்டமாகச் சேர்த்து வைத்திருக்கும் கொடைச்சிறப் புடையான் ஆய் அண்டிரன் எனக் கூறி, அவன் யானைப் பரிசிலைப் பாராட்டியுள்ளார்:

> "இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்
> புரவெதிர்ந்து தொகுத்த யானை." (நற்றிணை: உ௩எ)

## ௨௩. காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனூர்

இவர், செல்வக் களிப்பாற் சிறந்த கள்ளில் என்ற ஊரையும், நல்ல தேர்களையும் உடைய அவியன் என்பானை யும், மழை தடுக்கும் உச்சியினையும், பழந்தரும் மரங்களை யும் கொண்ட அவன் மலையினையும் பாராட்டியுள்ளார்:

> "களிமலி கள்ளில் நற்றேர் அவியன்,
> ஆடியல் இளமழைசூடித் தோன்றும்
> பழந்தூங்கு விடரகம்." (அகம்: உ௭௧)

நீர் வேட்கை மிக்கு வருந்தி வருவார்க்கு, அவர் உயிர் காக்கும் மருந்தாய்த் துணைபுரிவது நெல்லிக்கனி, "நெடுஞ் சேரன் வந்த நீர்நசை வம்பலர், செல்லுயிர் நிறுத்த சுவைக் காய் நெல்லி," (அகம், 271) என்றும், கோழி கிளைத்த புழுதியில், பொன் தோன்றி மின்னும் நாடு, "வாரணம், முதைச்சுவல் கிளைத்த பூழி, மிகப்பல நன்பொன் இமைக் கும் நாடு," (நற். 389), வேங்கை மலர்ந்தது என்பதற்கு, வேங்கை புலி ஈன்றது "வேங்கையும் புலி ஈன்றன," என்றும் இவர் கூறுவன சுவை பயந்து நிற்கின்றன.

> "வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்
> தேம்படு நெடுவரை மணியின் மானும்
> அன்னையும் அமர்ந்துநோக் கினளே என்னையும்
> களிற்றுமுகந் திறந்த கல்லா விழுத்தொடை
> ஏவல் இளையரொடு மாவழிப் பட்டெனச்
> சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்
> காவலின் நீயென் றோளே சேவலொடு
> சிலம்பிற் போகிய சிதர்கால் வாரணம்
> முதைச்சுவல் கிளைத்த பூழி மிகப்பல
> நன்பொன் இமைக்கும் நாடனொடு
> அன்புறுகாமம் அமைந்தனம் தொடர்பே."
>
> (நற்றிணை: ௩அ௯)

---

## உச. கிடங்கில், காவிதி கீரங் கண்ணனார்

தென்னார்க்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டத்தை யும் செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகம் வட்டம் தென் பகுதியையும் தன்கண்கொண்ட நாடு, சங்ககாலத்தே ஒய் மானாடு என்ற பெயரால் வழங்கப்பெற்றது; ஒய்மானாடு, நல்லியக்கோடன் என்பானுக்கு உரியது; இந்த ஒய்மா னாட்டில் சிறப்புற்று விளங்கிய ஊர்களுள் கிடங்கில் என்ப தும் ஒன்று; அந்நல்லியக்கோடனைப் பாடிய புலவர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார், இக்கிடங்கில் நகரை, "கிளைமலர்ப் படப்பைக் கிடங்கில்" என்று பாராட்டியுள்ளார்;

> "கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத்
> தடங்கட் டடங்கட் டளிரியலார் கொல்லார்—கிடங்கில்
> வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வா
> யிளையாடன் கண்ணுக்கு மென்று."

எனப் பொய்கையார் பாராட்டியதும் இக் கிடங்கில் நகரையே. இக்கிடங்கில் நகரில் வாழ்ந்த கீரன் என்பாரின் மகனாய்ப் பிறந்த கண்ணனார், காவிதிப் பட்டம் பெற்ற பெரியாராவர்.

ஞாயிறு மறைந்து, அதன் ஒளி மழுங்கிய பின்னர் வந்த இராக்காலம், ஞாயிற்றையும், அதன் ஒளியையும் பெறாமல் பொலிவிழந்து காணப்படுதலைக் கண்ட புலவர், அவ்விராக்காலம், பூவுதிர்ந்த கொடிபோல் அழகிழந்து காணப்படுகிறது என்று கூறுவது அழகாக அமைந் துளது:

> "ஞாயிறு ஞான்று, கதிர்மழுங் கின்றே;
> எல்லியும், பூவீகொடியிற் புலம்படைந் தன்றே."
>
> (நற்: உகஅ)

## ௨௫. கிடங்கில் காவிதி பெருங்கொற்றன்

கிடங்கில் நகரில் பிறந்த புலவர் பெருங்கொற்றனார், அக்கால அரசர் அவையில் அமைச்சர் தொழில் மேற்கொண்டிருந்த குடியில் வந்தவராவர். பழந்தமிழ் மன்னர்கள், தங்கள் நாட்டுச் சிறந்த வணிகர்க்கு எட்டி என்ற பட்டத்தையும், அதற்குரிய மோதிரத்தையும் அளித்துப் பெருமை செய்வதும், தங்கள் படையாளருள் சிறந்தார்க்கு ஏனாதிப் பட்டத்தையும் அதற்குரிய மோதிரத்தையும் அளித்துப் பாராட்டுவதும் வழக்கமாம். அதைப் போலவே, தம்மோடு வாழ்ந்து, தமக்கு அரசியல் நெறியில் அறிவுரை வழங்கிவரும் அமைச்சர்க்குக் காவிதிப் பட்டம் அளித்துப் போற்றுவர். காவிதி மாக்கள், அரசன்பால் காணலாம் நன்மை, தீமை ஆயவற்றை ஆராய்ந்தறிந்து, அவன் தீநெறிக்கண் செல்லாவாறு அடக்கியும், தம் சுற்றத்திடத்தே அன்பும், ஏனையோர்பால் அறமும் நீங்காவாறு நாடுகாத்தும், பழிதரும் செயல் தம்மை அடையாவண்ணம் தம்மைக் காத்தும், அதனால் உயர்ந்த புகழ்பெற்றும் வாழும் பெருமையுடையவராவர் :

> "நன்றும், தீதும், கண்டு ஆய்ந்து அடக்கி,
> அன்பும், அறனும் ஒழியாது காத்துப்,
> பழிஒரீஇ, உயர்ந்து, பாய்புகழ் நிறைந்த
> செம்மை சான்ற காவிதி மாக்கள்."
>
> (மதுரைக் காஞ்சி : ௪௯௬-௯)

"தலைவனைப் பிரிந்து தனித்துறையும் தன்னை வருத்த மாலை ஒன்றே போதும்; அது மாரிக்காலத்தையும் துணை பெற்றுவரின், யான் உயிர் வாழ்தல் அரிது," என்று கூறினாள் ஒருதலைமகள் என்ற செய்யுளைப் பாடியுள்ளார் நம் புலவர் :

> "வாழலென் வாழி தோழி !
> ..........................
> உயிர் செலத் துனைதரு மாலை
> செயிர்தீர் மாரியொடு ஒருங்குதலை வரினே."
>
> (நற் : ௩௬௪)

## உகூ. கிடங்கிற் குலபதி நக்கண்ணன்

கிடங்கில் நகரிற் பிறந்த புலவர் நக்கண்ணனார், ஆயிரம் மாணவர்களை ஆதரித்து அறிவூட்டிய சிறப்பால், குலபதி என்ற பாராட்டுரை பெற்றுப் பெருமையுற வாழ்ந்திருந்தார்.

சான்றோர், தம்மைப் பிறர்போற்றிப் புகழுங்கால், அப்புகழுரை கேட்டு நாணித் தலைகுனியும் இயல்பினராவர்; புகழுரை பொறாதே நாணும் இயல்பினராய அவர்கள், தம்மைப் பிறர் பழிக்கக் கேட்பின் உயிர்வாழார்; இந்த உண்மையினை, அரிய இடம் தேடி அறிவித்து மகிழ்கிறார் புலவர் நக்கண்ணனார்.

தலைவியின் நலம் கெடுமாறு, பரத்தையிற் பிரிந்து சென்று பெரும்பழியுடையனாய தலைமகன், தன் வீடு நோக்கி வந்தானாக, அவன் பழிகண்டு பழித்து ஒறுக்காது, இன்முகம் காட்டி, அன்புரை வழங்கி வரவேற்றாள் தலைமகள் என, அவள் செயல் கண்டு வெறுத்த தோழி, "கொடுமைசெய்து ஒழுகிய அவன்பால் நீ நடந்து கொண்டமுறை மிக நன்று!" எனக் கூறிச் சினந்தாள். சினந்த தன் ஆருயிர்த் தோழிபால், "நம் தலைவர் பண்புகளால் நிறைந்த பெரியாராவர்; பெரியோர், தம் புகழ் கேட்கவே நாணுவர்; அன்னார் பழியுரை கேட்கப் பெறின் என்னுவர்? பெரியோர்தம் இப்பண்பறிவேனாதலின், அவரைப் பழித்துரைத்தல் அஞ்சினேன்," என்று கூறினாள் தலைமகள் என்று பாடிய புலவர் பொருளுரையினைப் போற்றுவோமாக.

> "நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த
> கொடியனாகிய குன்றுகெழு நாடன்
> வருவதோர் காலை, இன்முகம் திரியாது
> கடவுட் கற்பின் அவன் எதிர்பேணி
> மடவை மன்றநீ எனக் கடவுபு
> துனியல்; வாழி! தோழி! சான்றோர்,
> புகழும் முன்னர் நாணுப;
> பழியாங் கொல்பவோ காணுங் காலே." (குறுந்: உருஉ)

## உஎ. குடவாயிற் கீரத்தனார்

குடவாயில் சோழநாட்டில் உள்ளதோர் பேரூர் தஞ்சைமாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உளது; சோழர் களின் தலைநகராகவும் இருந்த பெருமையுடையது; நாயன் மார்களால் பாடவும் பெற்றது; பிறந்த ஊர்ப்பற்று மிக்க புலவர் கீரத்தனாரால் பாராட்டப்பெற்ற பெருமையுடை யது. குடவாயில், "குறையாதபுதுப்புது வருவாய்களை யுடையது, நெல்விளைத்துப் பயன்கொள்ளும் குடிப் பரப் பினை உடையது; யானைபடியும் ஆழம்கொண்ட அகழினை யும், அடர்ந்த காவற் காட்டினையும் உடையது;" என்றும்,

> "அறாஅ யாணர்ப்
> பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவைப்
> பொங்கடி படிகயம், மண்டிய பசுமிளைத்
> தண்குட வாயில்." (அகம்: ௪௪)

"கொற்றம் மிக்க சோழ அரசர், வென்று கொணர்ந்த பெரும்பொருளை வைத்து, அதைப் பிறர் கொள்ளாவாறு அமைத்த அரிய காவலையும் உடையது," என்றும்,

> "கொற்றச் சோழர் குடந்தை வைத்த
> நாடுதரு நிதியினும் செறிய
> அருங்கடி." (அகம்: ௬0)

"வருவார்க்குத் தேர்வழங்கும் வள்ளியோராகிய சோழர்க்கு உரியது; மழை நீரால் நிறைந்த அகழியாற் சூழ்ந்தது," என்றும் புலவர் பாராட்டுவதை நோக்குக.

> "தேர்வண் சோழர் குடந்தை வாயில்
> மாரியம் கிடங்கு." (நற்: ௩எ௯)

கீரத்தனார் நாடு பல சுற்றியவர்; சேர, சோழ, பாண் டிய நாடுகள் முழுதும் சென்று ஆங்காங்குள்ள ஊர்களை யும், அவற்றின் சிறப்புக்களையும் அறிந்தவர்துளார்; தமிழகத்திற்கு அப்பாற்பட்ட நாடுகளின் இயல்புகளையும் உணர்ந்துளார்; ஆங்கு வாழும் நாடோடி மக்கள் குழுவினர்

சிலரின் இயல்புகளையும் அறிந்து அறிவித்துள்ளார்; தமிழகத்தின் அரசியல் நிலைகளையும், அக்கால மக்கள் வாழ்க்கை முறைகளையும வகுத்துக்காட்டியுள்ளார்.

யானையும், தேரும் நிறையக்கொண்ட பெரும்படை யுடையராய சோழர்க்கு உரியது; காவிரிக்கரைக்கண் உளது; பொன்னால் நிறைந்து பொலிவுற்றது என உறை யூரையும், "கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர், காவிரிப் படப்பை உறந்தையன்ன பொன்னுடை நெடுநகர்," (அகம்: ௩௩௫), வலிய தேர்ப்படையினையுடை சேரர்க்கு உரியது; படகேறிச் சென்று மீன்பிடித்துக் கொணரும் தன் தந்தைக்குத் தான் உப்பை விற்றுக்கொணர்ந்த நெல் லரிசியாலாகிய சோற்றை, அயிலைமீன் இட்டு ஆக்கிய புளிக்குழம்பினைச் சொரிந்து, கொழுத்த மீனால் ஆய கருவாட்டோடு தந்து உண்பிக்கும் அன்பு நிறைந்த நுளையர் மகளிர் வாழ்வால் மாண்புற்றது எனத் தொண்டி நகரையும்,

> "நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
> உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
> அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
> கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
> திண்தேர்ப் பொறையன் தொண்டி." (அகம்: ௬0)

பெரும்புகழ்கொண்ட பாண்டியர்க்கு உரியது; அரிய காவலையும், பரந்த இடத்தையும் உடையது; எனக் கூடல்மா நகரையும், "பெரும்பெயர் வழுதி கூடல் அன்ன தன் அருங்கடி வியன்நகர்" (அகம்: ௩ ௧௫), மேகம் தவழும் கொடுமுடிகளை யுடையது; காந்தள் மலர்களால் கவி னுற்றது என, அப்பாண்டியர் பொதியில் மலையினையும், "சூடுமழை தவழும் கோடுயர் பொதியின் ஓங்கிருஞ் சிலம் பிற் பூத்த காந்தள்" (நற்: ௩௧௬). நீடல் என வழங்கப் பெறும் நீழல் என்ற ஊர் எவ்வி என்பானுக்கு உரியது என நீழல் நகரையும் "பொலம்பூண் எவ்வி நீழல்" அவர் அறிந்துள்ளமை காண்க. அழும்பில், கழுமலம் என்ற ஊர்களையும் அவர் அறிந்து கூறியுள்ளார்.

தொழிலாற்றிய பின்னர் உண்ணுதற்காச் சோற்று முடியைத் தோளிலே தொங்கவிட்டுச் சென்று, கிணறு வெட்டத் தொடங்கிப் பாறைகளைத் தீப்பொறி உண்டாக வெட்டித் தோண்டிய, உவர்நீர்க் கிணற்றில் பாரின் பக்கத்தே ஊறும் நீரை உண்ணவேண்டி மகிழ்ந்து செல்லும் ஆனிரைகளைக்கொண்ட கொங்கர் எனக் கொங்கர் வாழ்வினைக் குறித்துள்ளார் :

"தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்
கனைபொறி பிறப்ப நூறி, வினைப்படர்ந்து
கல்லுறுத்து இயற்றிய வல்உவர்ப் படுவில்
பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகிக் கொங்கர்
படுமணி யாயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும்." (அகம் : ௭௯)

மழவர், வழியிடை ஊர்களில் உள்ளார், தலைமேல் கைவைத்துக் கலங்குமாறு, அவ்வூரினரின் கொழுத்த ஆக்களைக் கவர்ந்துசென்று கொன்று தின்பர் ; கூரிய படைகளை உடையவர் ; காலில் செருப்பணிந்து செல்வர் ; பாலை நிலத்தில், உப்பு வணிகர் விட்டொழித்த கல் அடுப்பில், ஊனை வதக்கி உண்பர் என, மழவர் தம் மற இயல்புகளை எடுத்துக் காட்டியுள்ளார் :

"உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்
நோன்சிலை மழவர் ஊன்புழுக்கு அயரும்." (அகம் : ௧௧௯)

"கலங்கு முனைச்சீறூர் கைதலை வைப்பக்
கொழுப்பா தின்ற கூர்ம்படை மழவர்
செருப்புடை அடியர்," (அகம் : ௧௨௯)

வடுகர், மொழி பெயர் தேயத்தவர் ; கடுமையாக ஒலிக்கும் பம்பைப்பறை உடையவர் ; சினத்தால் சிறந்த நாய் பல பெற்றவர் என வடுகர் தம் வாழ்வியலையும் வகுத்துக் கூறியுள்ளார் :

"கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும் பெருங் குன்றம் நீந்தி, நம்வயின்
வந்தனர்," (நற் : ௨௧௨)

பெரும்பூட்சென்னி என்பானொரு சோழ வேந்தன், சேரநாடு புகுந்து அந்நாட்டுக் கழுமல நகரை முற்றுகை யிட்டான்; கழுமல நகர் அரணுள்ளே, நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை போன்ற பெருவீரர்கள் கூடியிருந்தனர்; சோழன் படைத்தலைவனாகிய பழையன் என்பான், அவ்வரணின் திண்மை கண்டு அஞ்சாது கடும் போரிட்டான்; பருந்துகள் பெருங்கூட்டமாய் சுற்றித் திரியுமாறு களம் முற்றும் பிணங்கள் வீழ்ந்தன; ஆயினும், அப்போரில் அவன் தன் உயிரை இழந்தான்; தன் படைத்தலைவன் இறந்தான் என்பதறிந்த சோழன் பெருஞ்சினம்கொண்டு களம் புக்கு, சேரன் படைத் தலைவனாகிய கணையனையும், அவன் காத்து நின்ற கழுமல அரணையும் கைக்கொண்டான் எனப் பழங்காலப் போர் நிகழ்ச்சியொன்றை, மிகமிக விளக்கமாகக் கூறியுள்ளார்:

“நன்னன், ஏற்றை, நறும்பூண் அத்தி,
துன்னரும் கடுந்திறல் கங்கன், கட்டி,
பொன்னணி வல்வில் புன்றுறை என்றாங்கு
அன்றவர் குழீஇய அளப்பரும் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டு, அது நோனானாகித், திண்தேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையலம் கண்ணிப் பெரும் பூட்சென்னி.” (அகம்: ௪௪)

ஏழில் என்ற குன்றத்தில், கொற்றவை என்ற வெற்றித்திரு இருந்தாள்; அவள், பரந்த புகழும், சிறந்த புலமையும் உடைய புலவன் ஒருவனுக்கு, வெள்ளிய கால் களையும், சிறந்த படைக்கலங்களையும் உடைய குதிரை ஒன்றை அளித்தாள்; அதைப் பெற்ற அப்புலவன், அவ் வேழில் மலையினையும், ஆண்டுறை கொற்றவையையும் புகழ்ந்து பாடினான் என்ற ஒரு பழைய வரலாற்றினையும் வரைந்துள்ளார்:

“கானமர் செல்வி அருளலின், வெண்கால்,
பல்படைப் புரவி எய்திய, தொல்லிசை
நுணங்கு நுண்பனுவல் புலவன் பாடிய
இனமழை தவழும் ஏழிற் குன்றம்.” (அகம்: ௩௪௫)

நாட்டு நிகழ்ச்சிகளை நன்கு உணர்ந்தவராய புலவர் குடவாயில் கீரத்தனார், ஒல்லையூர்க்கிழான் மகனாய பெருஞ் சாத்தன்பால் பேரன்புகொண்டிருந்து, அவன் இறந்த பின்னர், அவன் ஊரையும், ஆங்கு அவன் பிரிவால் வருத்தங்கொண்டிருத்தலினால், எவராலும் சூடப்பெறாது கொன்னே மலர்ந்திருக்கும் முல்லைச் செடிகளையும் கண்டு கண்ணீர் விட்டுக் கையறுநிலைச் செய்யுள் பாடி அவனைப் பாராட்டியுள்ளார்.

மருத நிலத்து உழவர், நெற்களத்தில், கட்டுப் போரினைப் பிரித்துக் கடாவிட்டு, காற்றில் நெல்லைத் தூற்ற, ஆங்கிருந்து பறந்துசென்ற கூளங்கள், நெய்தல் நிலத்து உப்பளப் பாத்திகளில் இடமில்லாது வீழ்ந்து மூடிக்கொண்டமையால், தம் உப்பு கெட்டது அறிந்த நுளையர், சினந்து, மருதநிலம் போந்து, உழவரோடு மாறுபட்ட இருதிறத்தாரும் ஆங்குள்ள சேற்றுக் குழம்பினை ஒருவர்மீது ஒருவர் எறிந்து போரிடுதல், ஆங்கிருந்த முதியோர் சிலர் கண்டு, இடையே புகுந்து அவர் கைகளை விலக்கி, ஆறுதல் கூறி, அந்நெய்தல் நில நுளையர்க்கு, நறுமணம் நாறும் தேறல் அளித்து அனுப்புவர் என்று கூறி, பழங்காலத்துச் சிற்றூர்களில் நிகழும் சிறு போர் நிகழ்ச்சியை நன்கு சித்திரித்துக் காட்டியுள்ளார் :

"நீர் சூழ் வியன் களம் பொலியப் போர்பு அழித்துக்
கள்ளார் களமர் பகடுதளை மாற்றிக்,
கடுங்காற்று எறியப் போகிய துரும்புடன்
காயல் சிறு தடி கண்கெடப் பாய்தலின்,
இரு நீர்ப்பரப்பின் பனித்துறைப் பரதவர்,
தீம்பொழி வெள்உப்புச் சிதைதலின், சினைஇக்
கழனி உழவரொடு மாறு எதிர்ந்து, மயங்கி,
இருஞ் சேற்றுள்ளல் எறிசெருக் கண்டு
நரை மூதாளர் கைபிணி விடுத்து
நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்" (அகம் : ௩௬௬)

தலைமகன் பிரிந்து சென்றானாக, வருத்தத்தால், மண்ணாதும, மலர் சூடாதும் வாழ்ந்திருந்த தலைமகள்,

அவன் ஏவலர் சிலர் வந்து, அவர் வந்துகொண்டே இருக்கிறார் என உரைப்பக் கேட்டு உடனே ஓடித் தூரிராடி, தலையினைக் கோதி, அதில் மணம் நிறை மலர் சூட்டும் அந்நிலையில், தலைவன் ஆங்கு வந்து நின்றானாக, அவனைக் கண்ட அவ்வளவில், தன்னை அணிசெய்துகொள்வதையும் மறந்து, எழுந்து ஓடி, தலைமுடியும் மலரும் குலைந்து சரிய அவனைத் தழுவி நின்றாள் என்று கூறும் அவர் கூற்று நகைச்சுவை பயந்து நிற்றல் காண்க :

> "இளையர் வல்லே
> இல்புக்கு அறியுநராக, மெல்லென
> மண்ணுக் கூந்தல் மாசறக் கழீஇச்
> சில்போது கொண்டு பல்குரல் அழுத்திய
> அந்நிலை புகுதலின், மெய் வருத்துறாஅ
> அவிழ் பூமுடியினள் கவைஇய
> மடமா அரிவை" (நற் : சஉ)

## உ அ. குதிரைத் தறியனார்

நற்றிணைக்கு உரை எழுதி உதவிய திருவாளர், பின்னத்தூர், அ. நாராயணசாமி ஐயரவர்கள், "குதிரைத் தறி என்பது ஓரூர் போலும்; விஷயம் விளங்கவில்லை" என்று கூறுவர். நற்றிணையில் வந்துள்ள ஒருபாட்டல்லது அவர் பாடிய வேறு செய்யுட்கள் காணப்பெறாமையால் இவரைப்பற்றி விளங்க உணர்தற்கு இல்லை. இவர் அரசர்களோடு, பழகி அறிந்தவர் எனக்கொள்ளுதல் கூடும். அறியாத ஒன்றை அறிவிக்க விரும்புவார், அறிந்த பொருள்களை உவமையாகக் காட்டி விளக்குதல் வேண்டும் என்ப; அரசர்கள், தங்கள் யானைகளுக்கு அழகிய வேலைப் பாடமைந்த நெற்றிப்பட்டங்கள் அணிவிப்பதை அறிந்து கூறியுள்ளார் புலவர்.

> "மன்னர்,
> வினைவல்யானைப் புகர்முகத் தணிந்த
> பொன்செய் ஓடைப் புனைநலம்," (நற்றிணை : உகசு)

"செவ்வி அருமையும் பாரார், கருமமே கண்ணாயினர்" என்ப; இப்பண்பு பழந்தமிழர்களிடையே பொருந்தியிருக்கக் காண்கிறோம்; கார் காலம் தனித்திருப்போர்க்குத் துயர் தரும் கொடிய காலமாம்; ஆகவே, அக்காலத்தே தலைவன், தலைவியைப் பிரிய எண்ணான்; ஆயினும், தான் எடுத்த வினை அக்காலம் வந்தும் முடியாதாயின், அவன் அதைக் குறை வினையாவிடுத்து வருதல் செய்யான்; அவ்வினையினை வெற்றியுற முடித்துக் காணவே முயலுவன் எனப் புலவர் கூறும் பொன்னுரை போற்றற்குரியதாம்.

> "பிரிந்தோர் இரங்கும் அரும்பெறற் காலையும்
> வினையே நினைந்த உள்ளமொடு, துனைஇச்
> செல்ப என்ப காதலர்" (நற் : உகசு)

## உசுஅ. குமட்டூர்க் கண்ணனார்

புலவர் கண்ணனார் பிறந்த பேரூர் குமட்டூர்; குமட்டூர் என்ற பெயருடைய ஊர் ஒன்றும் இப்போது காணப்படவில்லை; பண்டைக்காலத்தில் நிலவிய ஊர்களுள் பல, இப்போது இல்லாமல் மறைந்தே போயிருத்தலும் கூடும்; பல ஊர்கள் தம் பெயர் பண்டைய உருவில் பெரிதும் சிதைந்தும் மாறியும் வழங்க, யாங்கோ அறியப்பெறுமல் இருத்தலும் கூடும் அவ்வாருன ஊர்களுள் குமட்டூர் என்பதும் ஒன்றுபோலும். இனி, கல்வெட்டுக்களில், குமட்டூர் என்ற பெயருடைய ஊர்கள் இரண்டு உள்ளன; ஒன்று ஆந்திரநாட்டில் குண்டூர் மாவட்டத்தின் குண்டூ ராம்; ஒரு கல்வெட்டு, அக் குண்டூரை ஒங்கேரு மார்க்கத்தில் உள்ள குமட்டூரு எனக் குறிக்கிறது. (A. R. No. 83 of 1917). புதுக்கோட்டையைச் சேர்ந்த சித்தன்னவாசல் கல்வெட்டொன்று, ஒரு குமட்டூரைக் குறிப்பிடுகிறது. கூறிய கல்வெட்டு, அசோகன் வழங்கிய பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டுளது. தமிழ்த்தொடர்களைப் பிராமி எழுத்துக்களில் எழுதும்வழக்கம், மதுரை, நெல்வேலிமாவட்டங்களில் நிலவியுளது. அக் கல்வெட்டில் காணப்படும் ஒரு தொடர், "யோமிநாட்டுக் குமட்டூர்ப் பிறந்தான் காவுதியீதனுக்குச் சித்துப்போச்சில் இளேயார் செய்த அதிட்டானம்" என வழங்குகிறது என்பர் திரு K V. சுப்பிரமணிய ஐயரவர்கள். (Proceedings. and Transactions of the Third Oriental Conference, Madras. Dec. 1924. Page 296 and following pages) அத் தொடரிற் காணப்படும் யோமிநாடு எனும் தொடர், ஒய்மா னாடு என்பதன் திரிபாகவே காணப்படும். ஆகவே, சித்தன்ன வாசல் குறிப்பிடும் குமட்டூர், ஒய்மா னாட்டில் உளதாம் என்பது பெறப்படும் தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனம் வட்டத்தினையும், செங்கற்பட்டு மாவட்டத்து மதுராந்தக வட்டத்தின் தென்பகுதியினையும் கொண்ட ஒய்மானாடு, தொன்மைமிக்க நாடாம்; கடைச்சங்க காலத்திலும், அந்

நாடு சிறப்புற்றிருந்தது என்பது, ஒய்மானாட்டு நல்லியக் கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடிய சிறுபாணாற்றுப் படைச் செய்யுளான் இனிது விளங்கும். ஆகவே, கல்வெட்டிற் காணப்படும் இரு குமட்டூர்களில், ஒய்மானாட்டுக் குமட்டூரே, நம் புலவர் கண்ணனார் பிறந்த ஊராதல் கூடும். ஒய்மானாட்டிற் காணப்படும் ஊர்களுள், குமட்டூர் எனும் பெயருடையதொரு ஊர் காணப்படவில்லை; ஆயினும், திண்டிவனத்துக்கு மேற்கே முட்டூர் என்றோர் ஊர் உளது; குமட்டூர், முட்டூர் என்ற இரு பெயர்களையும் ஒருங்கு கேட்டார்க்குப் பழைய குமட்டூரே, இப்போது முட்டூர் எனத் திரிந்தது என்ற துணிபு உண்டாதல் இயல்பே. ஆகவே, பதிற்றுப்பத்தினுள், இரண்டாம் பத்தைப் பாடி, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாராட்டிய கண்ணனார் பிறந்த குமட்டூர், ஒய்மானாட்டில் திண்டிவனத்தை அடுத்துள்ள இம் முட்டூரே ஆம் என ஆராய்ந்து கூறுவர் திருவாளர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் (பதிற்றுப்பத்து: பாடினோர் வரலாறு: பக்கம்: 22).

குமட்டூர்க் கண்ணனாரால் பாடப்பெற்றோன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஒருவனே. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பாரதப் போர் முடியுங்காறும், இரு திறப் படைகளுக்கும் உணவளித்துப் பெருஞ் சோற்றுதியன் சேரலாதன் எனப் பெயர் பெற்றானின் மகனாவன்; இவன் தாய், வெளியன் வேண்மான் என்பானின் மகள் நல்லினி என்பாள்; இவனுடைய தம்பியே, பாலைக் கௌதமனாரால் பாராட்டப்பெற்ற பல்யானைச் செல்கெழு குட்டுவனாவன். நெடுஞ்சேரலாதனுக்கு மனைவியர் இருவர். ஒருத்தி, சோழன் மணக்கிள்ளியின் மகளாகிய நற்சோணை என்பாள்; மற்றொருத்தி, வேளாவிக் கோமானான பதுமன் என்பானின் மகளாவள். நெடுஞ்சேரலாதனுக்கு மக்கள் நால்வர்; அவருள், சேரர்குலச் செம்மல்களாகிய செங்குட்டுவனும், இளங்கோவடிகளும் முன்னவள் வழியாக வந்தவராவர்; பின்னவள் வழியாக வந்தவர், களங்காய்க்

கண்ணி நார்முடிச் சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுமாவர். இச் செய்திகள், "உதியம் சேரற்கு வெளியன் வேண்மான் நல்லினி ஈன்ற மகன்........ இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்," (பதிற்று : பதிகம் : 2), "இமயவரம்பன் தம்பி.......பல்யானைச் செல்கெழு குட்டுவன்" (பதிற்று : பதிகம் : 3), "ஆராத்திருவின் சேரலாதற்கு வேளாவிக் கோமான் பதுமன் தேவி ஈன்ற மகன்........ களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்" (பதிற்று : பதிகம் : 4), "குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு வேளாவிக் கோமான் தேவி ஈன்ற மகன்........ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்" (பதிற்று : பதிகம் : 6), "குடவர் கோமான் நெடுஞ் சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்....கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்" (பதிற்று, பதிகம் : 5), "சேரலாதற்குத் திகழ் ஒளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் தன் மகள் நற்சோணை ஈன்ற மக்கள் இருவர்" (சிலம்பு : பதிகம் : அடியார்க்கு நல்லார் உரை). என்பனவற்றால், தெளிவாதல் தெளிக.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், இமயம்வரை படை யெடுத்துச்சென்று, ஆங்குத் தன்னுடன் பொருத ஆரிய அரசர்களை வென்று வணங்கச்செய்து, அவ் வெற்றிக்கு அறிகுறியாக, அவ் விமயமலைமேல் தன் அரச இலாஞ்சனையாகிய வில்லைப் பொறித்து மீண்டான். தமிழகம் முழுமையும் தன் அரசே நிலவ ஆண்டான்; சேரலாதனின் இவ் வெற்றிச் சிறப்பு, "அமைவரல் அருவி இமையம் விற்பொறித்து, இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத் தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு பேரிசை மரபின் ஆரியர் வணக்கி" (பதிற்று : பதிகம் : 2), "குமரியொடு வடஇமயத் தொருமொழி வைத்து உலகாண்ட சேரலாதன்" (சிலப். வாழ்த்து : உரைப்பாட்டு மடை), "வடவர் உட்கும் வான்தோய் நல்லிசைக் குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன்" (பதிற்று : பதிகம் : 5). என்ற தொடர்களால் விளங்க உரைக்கப்பட்டிருத்தல் உணர்க. சேரலாதனின் இவ் வெற்றிச் சிறப்பினை அவனைப்

பாராட்டிய புலவர் குமட்டூர்க் கண்ணனாரும் எடுத்துக் கூறிப் பாராட்டியுள்ளார் :

"ஆரியர் துவன்றிய பேரிசை இமையம்
தென்னம் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே."
(பதிற்று : கக. உரு-உச)

இமயத்தே விற்பொறித்த விறல் மிக்கோனாய நெடுஞ் சேரலாதன், தனக்குப் பணியாது நின்ற யவன அரசரைப் போரில் வென்று கைப்பற்றி, அக்கால முறைப்படி அவர் தலையில் நெய்யைப் பெய்து, அவர் கைகளைப் பின்கட் டாகக் கட்டி இழிவு செய்ததோடு அமையாது, அவரிடத்தி னின்றும், விலைமதிக்கொணு அணிகளையும், வயிரங்களையும் தண்டமாகக் கொண்டு, அவற்றைத் தன் தலைநகராகிய வஞ்சிக்கண் வாழும் பாணர் கூத்தர் முதலாம் பரிசில் மாக் கட்கு வழங்கிச் சிறப்புற்றான். இதை,

"நெய்தலைப் பெய்து, கையிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த்தந்து பிறர்க்கு உதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்தாள்
இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதன்,"

எனவரும், பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் பதிகத் தான் உணர்க.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பெற்ற வெற்றி களுள் புலவராற் போற்றப்படும் பெருமைவாய்ந்த வெற்றி, அவன், கடலிடையுள்ள தீவொன்றைத் தம் வாழிடமாகக் கொண்டிருந்த பகைவர்மீது கப்பற் படையுடன் சென்று, அவரையும் வென்று, அவர் காவல் மரமாம் கடம்பையும் வெட்டி யெறிந்து, அக் கடம்பால் முரசுசெய்து முழக்கி யதேயாம். இப் பகைவர், கடம்பைத் தம் குலமாகக் கொண்டு மைசூர்நாட்டின் மேற்பகுதியினை ஆண்ட கதம்ப வேந்தராவர் என ஆராய்ச்சியாளர் கருதுவர். சேரலாதன்

கடம்பெறிந்த வெற்றியைத் தனித்தும், அவன் இமய வெற்றியோடு இணைத்தும் பாராட்டியுள்ளார் மாமூலனார் :

"சால்பெருந்தானைச் சேரலாதன்
மால்கடல் ஓட்டிக் கடம்பறுத்து இயற்றிய
பண்ணமை முரசு"

"வலம்படு முரசின் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத்து இமயத்து
முன்னோர் மருள வணங்குவில் பொறித்து."
(அகம். ௩௪௭, ௧௨௭)

சேரலாதனின் இவ்விருபெரு வெற்றிகளையும், அவன் அருமை மகனாராய அடிகளார், தாம் பாடிய சிலப்பதி காரத்தே எடுத்தோதிப் பாராட்டியுள்ளார். "மாநீர் வேலிக் கடம்பெறிந்து இமயத்து, வானவர் மருள மலைவில் பூட்டிய வானவர் தோன்றல்," (சிலப். காட்சி : 1 - 3.) சேரலாதன் கடம்பெறிந்த வெற்றிச் சிறப்பினை விளங்கப் பாராட்ட முன்வந்த புலவர் குமட்டூர்க் கண்ணனார், அக் கடம்பினுக்குரியராய சேரலாதன் பகைவர், தம்முடன் போர் செய்வார் தோல்வியுற்று நிலத்தே விழும்படி வாளாற் பொருது அவர்தம் நாட்டைக் கவர்ந்து கொள்ளும் பேராற்றல் வாய்ந்த பெருவீரராவர் ; அத்தகைய வீரர் பலர்கூடிக் காக்கும் கடிய காவலையுடையது அக் கடம்பு என அப்பகைவர்தம் பேராற்றலையும், அவராற் காக்கப்பெறும் அக்கடம்பின் அரிய காவலையும் எடுத்துக் கூறி, அத்தகைய வீரரைவென்று அழித்து, அவர்காத்து நின்ற கடம்பையும் வெட்டி எறிந்து முரசுசெய்து முழக்கினான் எனப் பாராட்டும் பண்பு பாராட்டற்குரியதா மன்றோ ?

"வயவர் வீழ வாள்அரில் மயக்கி
இடங்கவர் கடும்பின் அரசுதலை பனிப்பக்
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே!"

"துளங்கு பிசிர்உடைய மாக்கடல் நீக்கிக்
கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை"

"இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச் சென்று
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ்சேர லாதன்." (பதிற்று: கஉ, கஎ, உ0)

சேரலாதன் கடம்பெறிந்த இவ்வெற்றிச் சிறப்பினை இவ்வாறு விளங்கப் பாடியும், புலவர் குமட்டூர்க் கண்ணனார் உள்ளம் அமைதியுற்றிலது; அவ்வெற்றியை மேலும் பாராட்ட விரும்பினார்; சேரலாதன் செயல், செவ்வேளின் செயலை அவர்க்கு நினைப்பூட்டிற்று; பிறர்க்குத் துயர் விளைத்தலே தம் பிறவித் தொழிலாம் எனக்கொண்ட அவுணர்க்கு அரணாய் நின்று காத்த சூரபன்மா, இறுதிக் காலத்தே, கடலிடையேயுள்ளதொரு தீவிடைச்சென்று மாமரமாகி மறைந்து நின்றானாக, ஆண்டும் விடாது சென்று அம் மரத்தினை வேருடன் வெட்டி வீழ்த்தி, அவ்வெற்றி விளங்கத் தன் பிணிமுகம் என்னும் யானைமீது இவர்ந்து வரும் முருகன் திருவுருவம் கண்ணனார் கண்முன் வந்து நின்றதுபோலும்! உடனே, கடலிடைச் சென்று, ஆண்டு வாழ் பகைவரை வென்று, அவர் கடம்பினை அழித்துத் தன் அரச யானைமீது அமர்ந்துவரும் சேரலாதன் அம் முருகனை ஒப்பன் என உவமைகூறி உள்ளம் மகிழ்வாராயினர்;

"நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி,
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு
.........................................
பலர்மொசிந்து ஓம்பிய அலர்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரரி நறவின் ஆர மார்பின்
போரடுதானைச் சேரலாத!
மார்புமலி பைந்தார் ஓடையொடு விளங்கும்
வலன்உயர் மருப்பின் பழிதீர் யானைப்
பொலன் அணிஎருத்தம் மேல்கொண்டு பொலிந்தநின்."
(பதிற்று: கக)

இவ்வாறு சேரலாதன் பெற்ற வெற்றிகளை எடுத்தோதிப் பாராட்டிய புலவர், அவன் பேராண்மையினையும், அவன் பேராண்மைகண்டு நடுங்கும் அவன் அச்சத்தினையும் பொது நிலையால் எடுத்தோதியும் போற்றியுள்ளார். ஓர் அரசன், தன் பேராண்மையால் பேரரசனாய வழி, அவனுக்குப் பல திசையினும் பகை வளரும்; அதைப் போன்றே சேரலாதனுக்கும் பகைவர் பலராயினர்; ஆயினும், அப்பகைவர் பன்மை, அவன் ஆண்மைமுன் நிற்க அஞ்சும் இயல்பினதாகும்; ஆண்மையும், ஆற்றலும் இல்லாதார் எழுபது கோடியராயினும், ஆண்மையும், ஆற்றலுமவாய்ந்தான் ஒருவன்முன் நிற்றல் ஆற்றார்; காக்கை பல கூடினும் ஒரு கல்லின்முன் நிற்க வல்லுமோ? "ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை, நாகம் உயிர்ப்பக்கெடும்," என்பர் வள்ளுவர். இக்கருத்தினை உளத்தினுட் கொண்டவராய புலவர், ஆண் சிங்கம் ஒன்று வாழும் மலைச்சாரலில், பிற விலங்குகள், தாம் பெருங்பெருங் கூட்டமாய வழியும், நடக்கவும் நெஞ்சம் நடுங்கும்; அதைப் போன்றே, நெடுஞ்சேரலாதனின் பகைவர், முரசொலிக்கும் தங்கள் தங்கள் அரண்மனையில் வாழ்ந்திருப்பினும், அவன் ஆற்றலை எண்ணி, உள்ளம் அஞ்ச, உறங்காராவர் என உவமைகாட்டி, அவன் ஆண்மைச் சிறப்பினை அழகொழுகப் பாராட்டியுள்ளார்:

"அரிமான் வழங்கும் சாரல் பிறமான்
தோடுகொள் இனநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநகர் அரசுதுயில் ஈயாது
மாதிரம் பனிக்கும் மறம்வீங்கு பல்புகழ்."

(பதிற்று: கஉ)

இவ்வாறு பேராண்மையும், பேராற்றலும் உடையான் நெடுஞ்சேரலாதன் என்பதறியாது அவனோடு பகைத்துப் போரிட்டார், தம் நாடழிய நலிவுற்ற நிலையினைக் கண்டு கண்கலங்கிய புலவர், தாம் கண்ட அவ்வழிவுக் காட்சியினை நாமும் அறியக் காட்டியுள்ளார். பகைவர் நாட்டில், நீர்நிலை தோறும், அந்தணர் ஓம்பும் செந்தழல்போலும், செந்நிறத்

தாமரை அல்லியொடு மலர்ந்து அழகுறத் தோன்றும். நெல் விளையும் நஞ்சைகளில் நெய்தல் மலரும்; விளைந்த நெல்லை அரியுங்கால், அரிநர் அரிவாள் கூர் மழுங்கும்; கரும்பினை ஆட்டிச் சாறுபிழியும் எந்திரம், அச்சாறு வழியும் வாய் வளையும்; அந்நாடுகள் இத்தகைய வளம் பெற்றிருத்தல் இன்று நேற்றன்று; அது தொன்று தொட்டுவந்த வளமாம். இத்தகு வளமிகு நாடு, சேரலாதன் சினத்துட்பட்டமையால் பாழுறலாயின: அவன் படையால் பாழுறற்கு அஞ்சி, ஆண்டு வாழ்ந்தார், அந்நாட்டை விட்டே அகன்றனர்; தம்மைப் புரப்பார் அகலவே, அந் நாட்டு ஆனினங்களும் கூட்டம் கூட்டமாய் வேறு வேறு திசைநோக்கி விரைந்தோடிவிட்டன; நிலங்கள் உழுவாரையும் உழும் எருதுகளையும் இழந்துவிட்டமையால், விளைநலம் கெட்டு வீணாயின; இவ்வாறு வாழ்தற்காகாது வளனற்று வாடின அந்நாடுகள்! "அந்தோ! தொன்றுதொட்டு வந்த வளனுடைய இந்நாடுகள், இன்று அழிந்து இவ்விழிநிலையுற்றனவே! என்னே கொடுமை!" எனக் காண்பார் அனைவரும் கைபுடைத் திரங்கினர் எனக்கூறிக் கழிபெருந் துயர் உறுகின்றார் புலவர் குமட்டூர்க் கண்ணனார்.

> "இனந்தோ டகல ஊருடன் எழுந்து
> நிலங்கண் வாட, நாஞ்சில் கடிந்து நீ
> வாழ்தல் ஈயா வளனறு பைதிரம்
> அன்ன வாயின; பழனந் தோறும்
> அழல்மலி தாமரை ஆம்பலொடு மலர்ந்து
> நெல்லின் செறுவில் நெய்தல் பூப்ப,
> அரிநர் கொய்வாள் மடங்க, அறைநர்
> தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த,
> இன்றோ அன்றோ தொன்றோர் காலை
> நல்லமன்! அளியதாம்! எனச் சொல்லிக்
> காணுநர் கைபுடைத்து இரங்க
> மாணா மாட்சிய மாண்டன பலவே." (பதிற்று: கக)

சேரலாதனால் பாழுற்ற பகைவர் நாட்டுக்கேட்டினை நமக்கு எடுத்துக் காட்டிய புலவர், சேரலாதன் ஆட்சிச்

சிறப்பால், அவன் நாடுபெற்ற நலத்தினையும் காட்டுகின்றார்; "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட, பெயலும் விளையுளும் தொக்கு" என்ப. சேரலாதன், நெறிநின்று நாடு காக்கும் நல்லியல்புடையான் ஆதலின், அவன் நாட்டில் மழை கோள்களின் நிலையால் பொய்த்தல் அறியாது, அவன் நாட்டுமக்கள், எங்கு எக்காலத்தில் எவ்வளவு வேண்டுகின்றனரோ, அங்கு அக்காலத்தில், அவ்வளவே பெய்யும்; அவ்வாறு வளம் செறிந்து விளங்குவதால், அவன் நாட்டில் அவரவர், அவரவர் தொழிலில் பிறழ்வதின்றி அறவழி நிற்பாராயினர்; அவன் நாட்டுக் காடுகள் கொடுவிலங்குகளின் வாழ்விடமாகாது, அறம்புரியும் துறவிகளின் உறைவிடமாம்; முல்லை படர்ந்த அவன் நாட்டுக் கொல்லைகளில் மள்ளரும், மகளிரும் கூடி மகிழ்ந்து ஆடும் விழா அறாது நடைபெறுவவாயின; அந்நாட்டு வழிகளும், ஆறலை கள்வரைப்பெறாமல், அன்புறையும் இடமாகி இன்பம் தருவவாயின; அவன் நாட்டில் எண்வகையாம் கூலங்களைப் பகரும் வணிகர், தளர்ந்த தம் குடிகளைத் தாங்கும் பண்பினராயினர்; தம் உழுதொழிலால் உலகைப் புரக்கும் உழவர்க்கு உறுதுணையாய் நின்றது அவன் ஆட்சி. இதனால், அவன் நாட்டில் பசியும், பிணியும் பறந்தோடி மறைந்தன.

"காடே, கடவுள் மேன; புறவே
ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன;
ஆறே, அவவனைத்து; அன்றியும், ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்,
குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி,
அழல்சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது,
மழை வேண்டு புலத்து மாரிநிற்ப,
நோயொடு பசிஇகந்து ஒரீஇப்
பூத்தன்று பெரும! நீ காத்த நாடே." (பதிற்று: கந)

இவ்வாறு அவன் நாடு பல்வளமும் பெற்று, பல்லோர் போற்ற விளங்கினமையால், அவன் நாட்டு வாழ்மக்களும், மகிழ்ந்துறை வாழ்வினராயினர்; மனக்கவலை என்பதை

மறந்தனர் எனவும் கூறுகிறார் புலவர். அவன் நாட்டு மக்கள், அரசனாலோ, அவன் சுற்றத்தாராலோ, அவன் பகைவராலோ துயர் உறுவது இலர்; அவர் வாழ்க்கை பல்லாற்றானும் நிறைந்த நிறையுடை வாழ்க்கையாம்; அவர் உண்மையே உரைப்பர்; ஐம்புலனும் அடக்கிய அறிவுடையராவர்; நிரயம் எய்தா நீர்மையினதாம் நல்வினைபால் சென்ற நெஞ்சினராவர்; ஒரு குடும்பத்தில், தலைமையாயினார் கருதுவதே, கருதுவர் பிறரும்; தாம் பிறந்து வாழ்ந்த பெருமைசால் அவ்வூரைவிட்டு வேற்றூர் செல்ல அவர் மறந்தும் எண்ணார் எனக்கூறும் அவன் நாட்டுச் சிறப்பும், அந்நாட்டு மக்கள் நலமும், பல்லாண்டாகியும் நரைதிரையுறா நல்லுடல்பெற்று விளங்கிய பிசிராந்தையார், தாம் நரையுறாமைக்கேது எனக்கூறும் நலங்களை நினைப்பூட்டி நிற்றல் காண்க. "சேரலாத! நின்நாட்டு மக்கள் பெற்றுள்ள இந்நல்வாழ்விற்கு நின் நல்லாட்சியே காரணமாம்" எனச் சேரலாதனைப் போற்றுவார்போல், நாட்டின் நல்வாழ்விற்கு நல்லாட்சி வேண்டும் என விளங்கக் கூறிய புலவர் நல்லுரை நாடாள்வோர் கருத்துட் புகும்நாள் எந்நாளோ?

> "வெய்துறவு அறியாது நந்திய வாழ்க்கைச
> செய்த மேவல் அமர்ந்த சுற்றமோடு
> ஒன்று மொழிந்து அடங்கிய கொள்கை, என்றும
> பதிபிழைப் பறியாது, துய்த்தல் எய்தி,
> நிரையம் ஒரீஇய வேட்கைப் புரையோர்
> மேயினர் உறையும் பலர்புகழ் பண்பின்
> நீபுறந் தருதலின் நோயிகந்து ஒரீஇய
> யாணர் நன்னாடு." (பதிற்று: கரு)

சேரலாதன், இவ்வாறு எவ்வழி நோக்கினும் செவ்வியோன் ஆதற்கு, அவன்பால் அமைந்துகிடந்த அரும் பெருங் குணங்களே காரணமாம் என அறிந்த குமட்டூர்க் கண்ணனார் அவற்றையும் எடுத்துக் கூறிப் பாராட்டுவ ராயினர்; அரசராவார், அறிவும், ஆற்றலும் உடைய ரேனும், தம்மினும் சிறந்த சான்றோர் சூழ வாழ்தலைத்

தலையாய கடமையாகக் கொள்ளுதல்வேண்டும்; நெடுஞ் சேரலாதன்பால் இப் பண்பு நின்று நிலைபெற்றிருந்தது; அறங் கூறும் ஆன்றோர்களை, அவன் என்றும் பிரியான்; செல்வுழிச் செல்வுழிச் செல்லும் மெய்ந்நிழல்போல், அவர் தன்னைவிட்டுப் பிரியாமையினைப் பெரிதும் விரும்புவன். "அமர்பு மெய்யார்த்த சுற்றமொடு நுகர்தற்கு இனிது நின் பெருங்கலி மகிழ்வே"—என்றும், பகை யொழிந்து பணிந்தாரைப் பாதுகாத்தல் பேரரசர்க்குப் பண்பாகும்; அவ்வாறு பணிந்தார்தம் பிழை பொறுத் துப் பேணாது, மாறாக, மேலும் பழிவாங்க எண்ணுதல் பழியுடைத்தாம்; இதையும் உணர்வான் அவன்; அவன் பகைவர் பொறுத்தலாகாப் பெரும்பிழை புரிந்தாரேயாயினும், அவர் பணிந்து திறை தந்தக்கால், அவர் பிழையினை மறந்து, அவர் கொடுத்தன கொண்டு அருள்புரியும் அறவுள்ளம் உடையன்.—"பெரிய தப்புநராயினும், பகைவர் பணிந்து திறைபகரக் கொள்ளுநை"—என்றும், மக்கள், அறிவு, ஆற்றல், ஒழுக்கம், உயர்குணம் இவை உடைமையால் எத்துணைதான் புகழுறினும், அவர் தம்பால் வந்து இரந்தார்க்கு ஒன்று கொடுத்துப் பெறும் கொடை உடைமையால் உண்டாம் புகழுடையார்போல் போற்றப்படுவதிலர்: அறிவு முதலாயினவற்றான் வருவது உண்மைப் புகழாகாது; கொடுத்துப் பெறும் புகழே புகழாம்; "ஈதல் இசைபட வாழ்தல்," என்றன்றோ வள்ளுவர் கூறுகின்றனர். சேரலாதன்பால் ஏனைய புகழ்களோடு இப் புகழும் இணைந்து நின்றது. உலகைக் காக்கும் கடமை உடைய வானம், பெய்யாது பொய்ப்பினும், சேரலாதன் கொடுத்தலைக் கைவிடான்; கொடுப்பதையே கடமையாகக் கொண்டவன் அவன்; அக் கொடைக் குணத்தினின்றும் அவன் உள்ளம் சிறிதும் கோடாது; கொடுக்கும் போதும் குறையக் கொடுப்பான் அல்லன்; வருந்தி வந்தோர் வயிற்றுப் பசித்தீ தணியப் பெரும்பொருள் தருகுவன். "கொடைக் கடன் அமர்ந்த கோடா நெஞ்சினன்; மன்னுயிர் அழிய யாண்டு பலமாறித் தண்ணிய எழிலி தலையாதாயினும் வயிறு பசிகூர ஈயலன்," "மன்னுடை

ஞாலம் புரவெதிர் கொண்ட தண்ணிய எழிலி தலையாது மாறி மாரி பொய்க்குவதாயினும், சேரலாதன் பொய்யலன் நசையே"—என்றும் அவர் பாராட்டுதல் காண்க.

சேரலாதன் சிறப்புக்கள் பலவற்றையும் பாராட்டிய புலவர் அவனை வாழ்த்த விரும்பினார்; விரும்பிய அவர் அவனை வாழ்த்தினாரல்லர்; "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி, இவன் தந்தை என்னோற்றான் கொல் எனும் சொல்" என்ப. மக்கள் தம் மாண்பு, மாண்பின்மைகளைக் காணும் பெரியோர், அவைகுறித்து அம் மக்களைப் பாராட்டுவதோ பழிப்பதோ செய்யார்; அம் மக்களைப் பெற்ற தாய் தந்தையரையே, பாராட்டுவதோ, பழிப்பதோ செய்வர்; இந் நெறி உணர்ந்த புலவர், சேரலாதன் சிறப்புக்களைக் கண்டு, அவனைப் பாராட்டுவது ஒழித்து, அவனைப் பெற்ற தாயை, "மதிநிறை இம் மகனைப் பெற்ற அவள் வயிறு மாசு இன்றி மாண்புறுமாக," என வாழ்த்திய நயம் நாம் உணர்ந்து பாராட்டத்தக்கதாம். "வயிறு மாசிலீஇயர் அவன் ஈன்ற தாயே." (பதிற்று : ௨௦).

இவ்வாறு சேரலாதனைப் பாராட்டுவார்போல் தம் செய்யுள் நயந்தோன்றப் பாடிய புலவர் குமட்டூர்க் கண்ணனார், தாம் அறிந்த சில பல செய்திகளையும், அச் செய்யுட்களிடையே ஆங்காங்கே கூறிச் சென்றன சிலவற்றை ஈண்டு நோக்குவாம்.

இமயமலையிடத்தே கவரிமான்கள் நிறைய உள; அவை நரந்தம்புல்லும், அருவிநீரும் உண்ணும்; தாம் பகலில் உண்ட அவற்றை இரவில் உறங்கும்போதும் கனவிற்கண்டு களிக்கும். "கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி, பரந்திலங் கருவியொடு நரந்தம் கனவும்." பெண்யானை, பிறந்த மயிரும் உதிராத இளமை உடையனவும், இளமையால் தளர்ந்த நடை உடையனவுமாய் தம் கன்றுகளின் நுதலினின்றும் ஒழுகும் மதநீரை உண்ண மொய்த்துத் துயர் விளைக்கும் வண்டுகளைக் காட்டு மல்லிகையால் கடிந் தோட்டும்—"கமழும் குளவி, வாடாப் பைம்மயிர், இளைய,

ஆடுநடை அண்ணல் மழகளிறு அரிமிஞிறு ஒப்பும் கன்று புணர் பிடி." (பதிற்: கஉ) படை செல்வதற்குமுன் ஓடி, அப்படை இனிது செல்லுதற்காக, மடுவைத் தூர்த்தும், மலையைக் குறைத்தும், காட்டை அழித்தும் வழிசெய்து செல்லும் படைக்குக் கூளிப்படை என்பது பெயர். அப் படை இக் காலத்திய "பயனீயர்" (Pioneers) "சாப்பர் மைனர்" (Sappers and Miners) என்ற படைகளுக்கு நிகராம். "கொள்ளை வல்சிக் கவர்கால் கூளியர், கல்லுடை நெடுநெறி போழ்ந்து சுரன் அறுப்ப." பாரதப் போரில், நூற்றுவர்க்குப் படைத்துணை உதவிய ஒருவன் அக்குரன் எனும் பெயருடையனுவன்; அவன் கொடைக்குணமும் உடையனுவன் எனக் கர்ணனைக் குறிக்கும் குறிப்பில் கூறியுள்ளமையினையும் உணர்க. "ஈரைம் பதின்மரொடு துப்புத் துறை போகிய 'துணிவுடை ஆண்மை அக்குரன் அனைய' கைவண்மையையே."

இவ்வாறு தம்புலமை நலம் தோன்றப் பாடிய புலவர் குமட்டூர்க் கண்ணனார்க்கு, தன் ஆட்சிக்குட்பட்ட உம்பற் காடு எனும் வளம்நிறை பகுதியில் உள்ள ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகக் கொடுத்ததோடு, தன் தென்னாட்டினின்றும் வரும் வருவாயுள் ஒரு பாகத்தை முப்பத்தெட்டு யாண்டுவரை பெற்றுக்கொள்ளும் உரிமையும் கொடுத்துச் சிறப்பித்தான் நெடுஞ்சேரலாதன்.

குமட்டூர்க் கண்ணனார் அந்தணராவர்; இது, உம்பற் காட்டு ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகக் கொடுத்தமையால் பெற்றும். தாம் பாடிய பாட்டுக்களில், முருகனையும், திருமாலையும் எடுத்துக்கூறிப் பாராட்டியதால் இவர்தம் கடவுட்கொள்கை இனிது விளங்குதல் காண்க.

## ௯௦. குளம்பனார்

குளம்பு என்பது ஓர் ஊர்; இவர் அவ்வூரிற் பிறந்தவராதலின், குளம்பனார் என அழைக்கப் பெற்றார் எனக் கூறுவர் நற்றிணை உரையாசிரியர் திருவாளர், பின்னத்தூர், அ. நாராயணசாமி ஐயரவர்கள். நமக்குக் கிடைத்த இவர் பாட்டு நற்றிணைக்கண் வந்துள்ள, குறிஞ்சித்திணைப்பாடல் ஒன்றே; தம் மகளிர்க்கு நோயுற்றவிடத்து, அந்நோய்க் காரணம் அறியமாட்டாத அன்னையர், அதை அறிந்து கோடற்பொருட்டு, குறி கூறவல்ல முதிய மகளிரை அழைத்துக் கேட்க, அவர் முறத்திலே பிடிநெல்லைப் பிடித்துவைத்து, எதிரே நோயுற்றாரை நிறுத்திவைத்து, தெய்வத்தை வாழ்த்தி, அந்நெல்லை நந்நான்காக எண்ணி, எஞ்சியவை ஒன்று, இரண்டு, மூன்றாயின், முருகன் அணங்கியதால் வந்தது அந்நோய் என்றும், எஞ்சாது எண்ணுள் அடங்கின், அந்நோய்க்கு அவன் காரணன் அல்லன் என்றும் கூறிச் செல்வர். இதைக் கட்டுக்காணல், கட்டு வைத்துக் கேட்டல் என்றெல்லாம் பெயரிட்டு மேற்கொண்டனர் பழந்தமிழர் என அறிவித்துள்ளார் நம் புலவர். "தோழி! நாம் புனங்காத்து நின்றேமாகவும், அன்னை அழைத்துவந்த இவள், இது முருகனால் வந்தது எனக் கூறிவிடுவளோ!" என அஞ்சிய தலைமகள் ஒருத்தி வழியாக இதை அறிவித்துள்ளார் :

"நன்னுதல் பரந்த பசலைகண்டு, அன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின், வெற்பில்
ஏனல் செந்தினைப் பாலார் கொழுங்குரல்
குறுகிளி கடிகம் சென்றும், இந்
நெடுவேள் அணங்கிற்று என்னுங் கொலதுவே ?"

(நற்: உஅஅ)

கழக வெளியீடு: ௬௯௯

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை - ௧௨

# மாநகர்ப் புலவர்கள் - ௩

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

சங்ககாலத்துச் சான்றோரான தண்டமிழ்ப் புலவர்கள், பிறந்தும் இருந்தும் வந்த ஊர்கள் பல்லனவாகும். அவர்கள் தம் பெயர்களோடு சார, ஊர்ப்பெயர்களைச் சூடியும் சூட்டு வித்தும் திகழ்ந்தோராவர்.

அவர்களுள் இதில் இடம் பெற்றோர் 'குறுங்குடி மருதனார்' முதலாக, 'வேம்பற்றூர்க் குமரனார்' ஈறாக, ஐம்பதின்மராவர். இவர்தம் வரலாற்றையும் **புலவர், திரு. கா. கோவிந்தன்** அவர்கள், தம் கூர்த்த மதிநலத்தால் ஆக்கி உதவினர்.

இதற்கு **'மாநகர்ப் புலவர்கள் - ௩'** என்னும் பெயரமைத்து, மூன்றாவதாக இதனை வெளியிட்டுச் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் பன்னிரண்டாவதாகத் தொடர்பு படுத்தியுள்ளோம்.

இதனையடுத்து வெளிவரும் ஏனைய சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை நூல்களையும் பிறவற்றையும் செந்தமிழ்த் திருமக்கள், வாங்கிக் கற்றுத் தமிழ்ப் பெருஞ்செல்வப் பேறெய்துவார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# மாநகர்ப் புலவர்கள் - ௩.

## தோற்றுவாய்

"தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்தல்வேண்டும்," என இன்று விரும்புகின்றோம் நாம். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்டது நம் பண்டைத் தமிழகத்தில். தமிழ்நாட்டுப் பேரூர்த் தெருக்களிலேயே அல்லாமல், சிற்றூர்களிலும், சேரிகளிலும் கேட்டது அத்தமிழ் முழக்கம். பண்டைத் தமிழகத்தில் பிறந்தார் ஒவ்வொருவரும், தம் தாய்மொழியாம் தமிழ்மொழியினை அறிந்திருந்தனர்; "உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்று," என்ற அறிவினை, அக்கால மக்களும், அரசனும் ஒருங்கே பெற்றிருந்தனர்; அதனால் தன் நாட்டுமக்கள் அனைவரும் கற்றாராய்த் திகழ்வதில் காவலனும் கருத்துடையனாயினான்; கற்றல் தம் கடன்; அதற்கு அரசனை எதிர்நோக்கல் அறியாமை என அறிந்து கற்றனர் மக்களும். கல்லாதவனைப் பொல்லாதவன் எனப் பழித்தனர்; இதனால் அக்கால மக்கள் எல்லோரும் கற்றனர்; கற்றனர் எனின், எழுதப் படிக்க ஆம் அத்துணை அளவே கற்றனர் அல்லர்; அருங்கவி பாடும் அளவு கற்றனர்; இதனால், தமிழகத்தின் ஊர்தோறும் புலவர்கள் வாழக் காண்கிறோம்.

புலவர்கள் வரலாற்றினை விளங்க உணரும் வாய்ப்பில்லாமையால், அவர்கள் பிறந்த எல்லா ஊர்ப்பெயர்களையும் அறிந்து கொள்வதற்கில்லை. தாம் பிறந்த ஊர்ப்பெயரைத் தம் இயற்பெயரோடு சேர்த்து வழங்கினர் சிலரின் ஊர்ப்பெயர்களை மட்டுமே உணர்தல் இயலும். அவ்வாறு அப்பெயர்கொண்டு நோக்கியவழி, அவர்கள் பிறந்த பெருமைசால் ஊர்களாக, நூறு ஊர்ப்பெயர்களை அறிகிறோம்;

அவ்வூர்ப் பெயர்களைத்தான் அறிகிறோமே யன்றி, அவை யாண்டுள்ளன? அவற்றின் வரலாறு யாது? என்பன வற்றை அறிதற்கில்லை. அவ்வூர்ப் பெயர்களுள் சில, உண்மையில் ஊர்ப் பெயர்கள்தாமா? அல்லது வேறு சிறப்புக் குறித்து, அப்புலவர் பெயரோடு வந்து வழங்கிய அடைமொழிகளா? என்று ஐயுறத் தக்கனவாகவும் சில உள்ளன; புலவர்களின் வரலாறு, பெண்பாற் புலவர்கள், உவமையாற் பெயர்பெற்றோர், காவலபாவலர், வணிகப் புலவர்கள், கிழார்கள், உறுப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர், மதுரைப் புலவர்கள் என்ற பல்வேறு தலைப்பின் கீழ் வகைப்படுத்தி உரைக்கப் பெறுவதால், அவ்வத் தலைப் பின்கீழ்ச் சில புலவர்களின் ஊர்ப்பெயர்கள் அடங்கி விடும். அவ்வாறு அடங்காத ஊர்களில் வாழ்ந்தார் வரலாறு மட்டுமே ஈண்டு உரைக்கப்பெறும். இவ்வாறு ஆராய்ந்து கொண்ட எழுபத்தேழு ஊர்களில் வாழ்ந்த நூற்றுப்பத்துப் புலவர்களின் வரலாற்றினை "மாநகர்ப் புலவர்கள்" என்ற வரிசையில் கூறத்தொடங்கி, அவ் வரிசையுள் மூன்றாவது நூலாகிய இதன்கண், முப்பத் தொன்பது ஊர்களில் வாழ்ந்த ஐம்பது புலவர்களின் வரலாறுகள் உரைக்கப்படுகின்றன. இந்நூலால் அறியப்படும் ஊர்கள்: 1. குளம்பு, 2. குறுங்குடி, 3. கூடலூர், 4. கொடிமங்கலம், 5. கோக்குளம், 6. கோட்டம்பலம், 7. கோட்டியூர், 8. சிறைக்குடி, 9. செல்லூர், 10. தங்கால், 11. தாமல், 12. தொண்டிஆமூர், 13. நல்லூர், 14. நல் விளக்கு, 15. படுமரம், 16. பிசிர், 17. புல்லாற்றூர், 18. பெரும்பாக்கம், 19. பொதுக்கயம், 20. பொதும்பில், 21. பொய்கை, 22. பொருந்தில், 23. மருங்கூர்ப்பட் டினம், 24. மாமலாடு, 25. மாறோக்கம், 26. மிளை, 27. முகையலூர், 28. முக்கல், 29 முப்பேர், 30. முரஞ்சி யூர், 31. முள்ளியூர், 32. மோசி, 33. வாயில், 34. விரிச்சியூர், 35. விரியூர், 36. விற்றூற்று, 37. வீரை வெளி, 38. வெள்ளைக்குடி, 39. வேம்பற்றூர் முதலாயின வாம்.

## க. குறுங்குடி மருதனார்

மருதனார் என்பது இவரது இயற்பெயர்; இவர் பிறந்த பேரூர், பாண்டிநாட்டில் உள்ள திருமால் திருப்பதிகளுள் ஒன்றாகிய குறுங்குடியாகும் முல்லைத்திணை பாடவல்லவர்.

தலைவன் பொருள்வயிற் பிரிந்தானாகத் தனித்திருந்த தலைமகள், புல் மேயக் காலையில் சென்ற பசுக்கள், வயிறார மேய்ந்து மாலைக்காலத்தே, எருதுகள் தம்மைத் தொடரத் தம்முடைய கன்றுகளை நினைந்து வீடுதிரும்பும் காட்சியைக் கண்டு, பெரிதும் கலங்கி, "மாவும் மாக்களும் தம் துணையோடு மகிழும் இம்மாலைக்காலத்தே, பொருள் வேண்டிப் பிரிந்து சென்ற தம் கணவன் வரப்பெற்ற மகளிர் உண்மையில், நற்றவம் செய்துபெற்ற நல்வினை உடையரே யாவர்," என்று கூறிப் புலம்பினாள் எனப்பாடி மகளிர் உள்ளம் உணரத் துணைபுரிந்த புலவர், பிரிந்து சென்ற தலைவன், மீண்டு வருங்கால், இடைவழியில் தன் துணையோடுகூடித் தேனுண்டு மகிழும் வண்டொன்றைக் கண்டான்; மகிழ்ந்தான்; தன் தேரின் மணியொலி கேட்டு அவ்வண்டுகள் மருளுமோ? அதனால் அவற்றின் கூட்டத்திற்கு ஊறு உண்டாமோ? என்று எண்ணினான்; உடனே அம்மணிகள் ஒலிக்காவண்ணம் அவற்றின் நாக்குகளை அசையாவண்ணம் கட்டிவிட்டான் எனப் பாடி அவன் அருள் உள்ளம் உணரவும் துணைபுரிந்துள்ளார்:

"நோற்றோர் மன்ற; தோழி! தண்ணெனத்
தூற்றும் துவலைப் பனிக்கடுந் திங்கள்
புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு
நிலந்தூங்கு அணல, வீங்குமுலைச் செருத்தல்
பால்வார்பு, குழவி உள்ளி, நிரைஇறந்து
ஊர்வயிற் பெயரும் புன்கண் மாலை
அரும்பெறற் பொருட்பிணிப் போகிப்
பிரிந்துறை காதலர் வரக்காண் போரே."

(குறுந்: ௩௪௪)

"பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் தோன்றும்." (அகம்: ௪)

தலைவி, எருதொடு கூடிய ஆவினைக்கண்டு கலங்கினாள் எனவும், தலைவன் துணையொடுகூடித் தேன் உண்ணும் வண்டைக் கண்டு வருந்தினான் எனவும் பாடிய பண்பும், தலைவி, தன்போலும் பெண்ணாகிய பசுவினைப் பார்த்தாள். தலைவன் தன்போலும் ஆணாகிய ஆண் வண்டை நோக்கினான் எனவும் பாடிய அருமையும் அறிந்து மகிழ்தற் குரியனவாம்.

புலவர், ஊர் எனப்படுவது உறையூர் என்ற புகழ்சால் உரையினை உடைய உறந்தையினையும், அந்நகர் விழாச் சிறப்பினையும், அவ்வூர்க்குக் கீழ்பால் உள்ள சிராப்பள்ளிக் குன்றினையும் அறிந்து பாராட்டியுள்ளார்;

"கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது
நெடும் பெருங் குன்றம்," (அகம்: ௪)

## உ. கூடலூர்ப் பல்கண்ணனார்

கூடலூர்கிழார் என்ற பெயருடையாரொரு புலவரும் உளர்; அவர் பிறந்த கூடலூர், மலைநாட்டில், பாலைக் காட்டினை அடுத்துளது எனக் கூறுவர் அறிஞர் எல்லாம். புலவர் பல்கண்ணனார் பிறந்த கூடலூர், இதுவோ, அன்றி வேறோ அறிகிலம். இவர் மருதத்திணையினையே பாடியிருத்தலின், இவர் பிறந்த கூடலூர், புனல்நாட்டில் உளதாதல் வேண்டும் என உரைப்பாரும் உளர்; இவர் பெயர், கடலூர்ப் பல்கண்ணனார் எனவும் ஏடுகளில் காணப்படுவதை நோக்கின், இவர்க்கு உரிய கூடலூர், தென்னார்க்காடு மாவட்டத் தலைநகராகிய கடலூரே எனத் துணிதலும் பொருந்தும். பல்கண்ணனார் என்ற பெயருடைய பிற புலவர்களும் உளர்; தாமல் பல்கண்ணனார் என்பாரின் பெயரை நோக்குக.

ஊரில் திருவிழா நடைபெறப்போகும் நிகழ்ச்சியினை, வள்ளுவக்குடிவந்த முதியோன், யானைமீது ஏற்றிய முரசினைமுழக்கி, ஊரையும், ஊராள் அரசனையும் வாழ்த்தி, அறிவிக்கும் வழக்கத்தைப்போன்றே, அவ்வூர்க் குயவர் குடி வந்தோன், நொச்சிமாலை அணிந்து, ஆறுபோல் பரந்த அவ்வூர்த் தெருவே போந்து, விழாநிகழ்ச்சியினை விளங்க உரைக்கும் வழக்கமும் உண்டாம் என்பது இவர் பாடலால் உணரக் கிடக்கிறது.

> "கண்ணிகட்டிய கதிர அன்ன
> ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
> ஆறுகிடந்தன்ன அகல்நெடுந் தெருவில்
> சாறெனநுவலும் முதுவாய் குயவ!" (நற். உ00)

மக்களை ஈன்று மனையறங்காக்கும் மாண்புடையளாய ஒரு தலைமகள், பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு பிழை புரிந்தானாய தன் தலைவன், தன்னுடைய ஊடலை நீக்கத் தன்பால் அனுப்பிய பாணனைப் பார்த்து, "பாண! யான், அணிபல அணிந்து, அழகுற்று விளங்கும் பரத்தையர்

போல் பேரழகும், பேணுதற்குரிய பெருநிலையும் உடையேன் அல்லேன்; வருவார்க்கும், வந்தார்க்கும் விருந்தாற்ற வேண்டி உணவாக்கும் தொழில் உடைமையால், எண்ணெயும், புகையும் படியப்பெற்றும், கரிய மை, காணுமிடம் எங்கும் கலந்தும், கவின் இழந்து, அழுக்கேறிய ஆடையையே உடையேன்; மேலும், பாலுண்ணும் புதல்வனைப் பலகாலும் புல்லுவதால் பெற்ற முடை நாற்றமும் உடையேன்; ஆதலின், யான் நம் தலைவற்கு ஏற்றவளாகேன்; ஆதலின், யான் அவர் ஈண்டு வருதலையும் விரும்புகின்றிலேன்; ஆகவே, பாண! என்முன்நின்று ஏலாதனகூறி இரங்கற்க!" என்றுகூறித் தன்னைப் பழிப்பாள்போல், இல்லறமாற்றும் நல்லறமுடையேன் எனத் தன்னைப் புகழ்ந்தும், அணியால் அழகுற்றவள் பரத்தை என அவளைப் பாராட்டுவாள்போல், இல்லறமாற்றும் நல்லறமாண்பு இலள் அவள் எனப்பழித்தும் தன் தலைவற்கு அறிவு வரச்செய்தாள். இத்தலைவியின் வாய்வழியே, தமிழகத்துப் பெண்களின் பெருமையினைப் பாராட்டிய புலவரைப் போற்றிப் புகழ்வோமாக!

"நெய்யும் குய்யும் ஆடி, மையொடு
மாசுபட்டன்றே கலிங்கமும்; தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே;
வாலிழை மகளிர் சேரித் தோன்றும்
தேரோற்கு ஒத்தனெம் அல்லேம்; அதனால்
... ........................................ ...............
விரகில மொழியல்! யாம் வேட்டதில் வழியே."

(நற்: ௩௮௦)

## ௬. கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்

நற்சேந்தனார் என்ற இந் நல்லிசைப் புலவர் பிறந்த ஊர் கொடிமங்கலம் எனவும், கோடிமங்கலம் எனவும் காணப்படுகிறது. இவர் பெயரிற் காணப்படும் வாதுளி என்பது, கொடிமங்கலத்தின் ஒரு பகுதியைக் குறித்து நிற்கும் பெயராம் என்றே பெரியோர்கள் கருதுகின்றனர். இவர் பாடிய பாக்கள் இரண்டு மணிமிடை பவளத்துள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று பாலைத்திணை பற்றியது; ஏனையது குறிஞ்சித்திணை குறித்தது.

கடுங் கோடைக்காலத்தே, மணல்பரந்த பெருவெளிகளில், கானல் ஓடுவது, நீர் ஓடுவதுபோல் தோன்றும்; இதைக் கானல்நீர் என்ப; பழந்தமிழ் நூல்கள் இதற்குப் பேய்த்தேர் எனப் பெயர் கொடுத்து வழங்கும். இக்கானல் நீரை, அந்நிலத்து வாழும், மான்முதலாம் விலங்குகள், உண்மைநீர் என உட்கொண்டு, ஓடிஓடிச் சென்று, நீர் பெறாது நின்று வருந்தும். பாலையின் இப்பாழ்பட்ட நிலையினை உணர்ந்த புலவர், கானல்நீரைக் கண்ட யானை ஒன்று, தன் நீர் வேட்கை தணியுமாறு குடிக்க எண்ணித் தொங்கும் தன் கையினை நீட்டியும், அகன்ற வாயைத் திறந்தும் நீர் பெறாதுவருந்தி, அந்நிலத்தைவிட்டே ஓடும் என உரைத்து உணர்த்துகிறார்.

"விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
வெண்தேர் ஓடும் கடங்காய் மருங்கில்
துனைஎரிபரந்த துன்னரும் வியன்காட்டுச்
சிறுகண் யானை நெடுநகை நீட்டி
வான்வாய்திறந்தும் வண்புனல் பெறாஅது
கான்புலந்து கழியும்." (அகம்: ௧௭௧)

# ௬. கோக்குளமுற்றனர்

குளமுற்றம் என்றோர் ஊர் சோழ நாட்டில் உளது; கிள்ளிவளவன் என்ற சோழ அரசன் ஒருவன், அக்குள முற்றத்தே உயிர் துறந்து குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்று அழைக்கப்பெற்றுள்ளான். குளமுற்றனர், கோ என்னும் உரிமைபெற்ற உழுவித்துண்ணும் வேளாண் மரபினராவர். கோக்குளம் என்பதே ஓர் ஊர்; அது வெண்காடு என்று கொள்வது பொருந்தாது. இவர் பாடிய பாக்களாக, நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகை யில் ஒன்றும் ஆக இரண்டு பாக்கள் உள்ளன; இரண்டும், தலைவன் பிரியத் தலைவியுற்ற பசலைநோயின் கொடுமை யினையே விரித்துக் கூறுகின்றன.

"தலைவர், என்னை முதன்முதலாகக் கண்டு மகிழ்ந்த சோலை, இதோ, ஞாழல் மலரும் புன்னை மலரும் உதிர்ந்து பரவிய வெண்மணல் நிறைந்து தோன்றும் இந்தச் சோலை; தலைவர் நம்மோடு புனலாடி, எம் கூந்தலைப் பிழிந்து, துவட்டி அருள்செய்த துறை, இதோ தோன்றும் இந்தத் துறை; நெய்தல்முதலாம் தழைகளை நெருங்கத்தொடுத்து எனக்கு அழகுபெற அணிவித்து, என்னைவிட்டுப் பிரிந்து இவர் தனியே சென்ற கழிக்கரைச் சோலை அது" என்று, தலைவனைக்கண்ட சோலை, அவனோடு ஆடி மகிழ்ந்த துறை, அவன் பிரிந்து சென்ற கானல் ஆயவற்றை எண்ணி எண்ணி, தலைமகள் வருந்துவதை நன்கு பாடியுள்ளார்:

"இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை தகைந்த வெண்மணல் ஒருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே; உதுவே,
பொம்மல் படுதிரை, நம்மோ டாடிப்,
புறந்தாழ்வு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்
துவரினர் அருளிய துறையே; அதுவே,
கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇத்
தமியர் சென்ற கானல்." (நற்: ௯௬)

## ரு. கோட்டம்பலவனர்

கோட்டம்பலம் என்னும் ஊரினராதலின், இவர் கோட்டம்பலவனர் என அழைக்கப் பெற்றுள்ளார்; சேர நாட்டு ஊர்களுள் ஒன்று; இஃது இப்போது அம்பலப் புழை என அழைக்கப்படுகிறது. மாக்கோதை என்ற சேரவேந்தன், இக் கோட்டம்பலத்தே இருந்து உயிர் துறந்து, கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை எனப் பெயர் பெற்றான் எனவும் அறிகிறோம் ஆதலின், இதன் பெருமை ஒருவாறு உணரலாகும். இனி, இவர் பாடிய பாட்டொன்றில், "குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்," என்ற சொற்றொடர்க்கண் வரும் "கொட்டும்" என்ற சொற் சிறப்பான், இவர்க்கு இப் பெயர் உண்டாயிற்று எனக் கூறுவர் சிலர். அஃது அத்துணைப் பொருந்துவ தன்று. பக்கத்தே பல இசை முழங்க, முறுக்குண்ட கயிற்றின்மீது நின்று ஆடிப்பிழைக்கும் கழைக்கூத்தியர் பண்டைக்காலத்தும் இருந்தனர் என்பதை இவர் பாடலால் அறிகிறோம். கழைக்கூத்தியர் கட்டிய கயிற்றின்மீது நின்று குரங்குக்குட்டி ஆடக்கண்ட குறவர்சிறார் கைகொட்டி மகிழ்வர் எனக் கூறும் கூற்று இன்பம் பயந்து நிற்பதாம். ஒருத்திபால் உள்ளத்தைப் பறிகொடுத்தானொரு இளைஞன், என் நெஞ்சம் அவள் கைக்குள் அடக்குண்டுளது; அதை விடுவிக்கும் ஆற்றல் அவளுக்கே உண்டு; அதைப் பிறர் எவராலும் விடுத்தல் அரிதாம் என்று கூறினான் எனப் பாடியுள்ளமை பாராட்டற்குரியது.

"கழை பாடிரங்கப், பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
அதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
கழைக்கண் இடும்பொறை ஏறி விசைத்தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்
..........................................
கொடிச்சி கையகத் ததுவே, பிறர்
விடுத்தற் காகாது பிணித்தஎன் நெஞ்சே." (நற்: கூ௫)

## கா. கோட்டியூர் நல்லந்தையார்

நல்லன் தந்தையார் என்ற இரு சொற்கள் நல்லந்தை யார் என்றாகும் ஆதலின், இவர் நல்லன் என்பாரின் தந்தை யாம் சிறப்புடையவராவர். பாண்டிநாட்டில் உள்ள திருக் கோட்டியூர் என்பதே இவர் பிறந்த ஊராம். நெய்தல் திணையைச் சிறப்பித்து இவர் பாடிய பாட்டொன்று இடம் பெற்றுளது.

தலைமகன் வரையாது நீட்டித்தலால் வருந்தும் தலைவி யின் துயரினைத் தலைவன் அறியக்கூறி, வரைந்துகொள்ள வழிசெய்ய விரும்பிய தோழி, தலைவன் தம் வீட்டின் புறத்தே வந்திருப்பது அறிந்து, ஊரார் கூறும் பழிச் சொற் கேட்டு அஞ்சி இல்லைவிட்டு நீங்காது உறையும் தலை மகள், அன்புடைத் தாயைக் கண்டும் அஞ்சுகின்றாள் என்று கூற முன்வந்து, அதை இவ்வாறே வெளிப்படக் கூறாது, வேறோர் பொருள்மேலேற்றி, உப்பங்கழியிடத்தே இரை தேடிவந்திருக்கும் பறவையின் குத்துக்குத் தப்பிப் பிழைத்தோடிய இறாமீன், திரைகொணர்ந்து இட்ட மணல் மேட்டில் வளர்ந்து, கடல்நீரில் தலை சாய்ந்துகிடக்கும் தாழையின் மலர்களையுப, அப் பறவை எனக் கருதி அஞ்சும் என்று கூறினாள். இவ்வாறு மறைத்து மொழி கிளவியால் தம் மனத்துள்ளதை உரைக்கும் அவள் அறிவி னைப் புலப்படுத்தியுள்ளார் புலவர் :

> "கருங்கால் குருகின் கோள் உய்ந்து போகிய
> முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை
> எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
> துறுகடல் தலைய தோடுபொதி தாழை
> வண்டுபடு வான்போது வெரூஉம்." (நற் : உகக)

---

## எ. சிறைக்குடி யாந்தையார்

குன்றக்குடி, பரமக்குடி, திருவாவினன்குடி என்பன போல, சிறைக்குடி என்பது ஓர் ஊர். அவ்வூரில் வாழ்ந்த ஆதன் என்பாரின் தந்தையார் இவர். இவர், தலைவனைப் பிரிந்து வாழ்தலைத் தலைமகள் விரும்பாமையினையும், தலைமகளைப் பிரிந்து வாழ்தலைத் தலைவன் விரும்பாமையினையும் நன்கு விளக்கியுள்ளார்; இவர் பாடிய பாக்கள் ஒன்பதும் இப் பொருளே கொண்டு வந்துள்ளன.

கன்றிற்கும், கன்றீன்ற கறவைப் பசுவிற்கும் உள்ள அன்பு மிகச் சிறந்தது. இதை உணர்ந்த புலவர், காலையிற் பிரிந்து மேயச்சென்ற பசுக்கள், மாலைக்காலத்தே மன்றம் நோக்கி மீண்டு வருதலை அவற்றின் கன்றுகள் ஆர்வம் ததும்ப எதிர்நோக்கி நிற்றலேபோல், பிரிந்துசென்ற தலைவன் வரவினை எதிர்நோக்கி நிற்பாள் தலைமகள் என்று கூறும் முறை, அவ் விருவர்கொள்ளும் அன்பின் பெருமையினை அறிந்து மகிழ்தற்குத் துணைநிற்றல் காண்க.

> "கடும்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி
> தாய்காண் விருப்பின் அன்ன
> சாஅய் நோக்கினளே மாஅ யோளே." (குறுந் : கருஉ)

இற் செறித்துத் தாய் காக்கத் தனித்துறையும் தலைமகள் ஒருத்தி, "உள்ளமும், உயிரும் இரண்டறக் கலந்து ஒன்றுபட்டனவாயினும், கற்புக்காலத்தே, கணவனும் மனைவியுமாய் இருந்து ஆற்றவேண்டிய அறவோர்க் களித்தல், அந்தணர்ப் பேணல், துறவோர்க் கெதிர்தல், விருந்து போற்றல் ஆய இல்லறக் கடமைகளை இனிது மேற்கொள்ளுதற் பொருட்டும், ஒருவரால் ஒருவர் இன்பம் துய்க்கும் நிலைமையினை அறிந்தும், இரு வேறு உடலினராய்ப் பிரிந்து பிறந்து விளங்கும் இவ்வுலகில், காப்பு மிகுதியால், என்னைப் பிரிந்து காணப்பெறாது, அவர் தனித்துநின்று ஒருவரே ஆகியும், அவரைப் பிரிந்து காணப்பெறாமல், யான் தனித்துநின்று ஒருத்தியே ஆகியும் வாழும் இத் துயர்மிகு நிலையினும், பிரிதற்கரிய காதல் உடையேமாய், அக் காதலோடு எம் இருவர் உயிரும் ஒருங்கே கழிவன

வாருக," என்று கூறினாள் எனவும், பிரிவறியாத் தம் காத லுக்கு, ஆணும் பெண்ணுமாய்ப் பிரிவின்றி இணைந்து மலர்களில் பயின்று வாழுங்கால், அம் மலர்இதழ் ஒன்று, அவற்றின் இடையே உற்று நீங்கின், அவ் இதழ் உற்றதால் உண்டாய சிறுபிரிவினைப், பல ஆண்டுப் பிரிவேபோல் கொண்டு வருந்தும் மகன்றில் பறவைகளின் பிரிவறியாப் புணர்ச்சி நிலையினை உவமை கொண்டாள் எனவும் பாடிய புலவர் செய்யுள் நயம் சுவைத்தற் குரியது.

> "பூஇடைப் படினும், யாண்டு கழிந்தன்ன
> நீர்உறை மகன்றில் புணர்ச்சி போலப்
> பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு
> உடன்உயிர் போருக தில்ல; கடன் அறிந்து
> இருவே மாகிய உலகத்து
> ஒருவே மாகிய புன்மை நாம் உயற்கே." (குறுந் : ருஎ)

பொருளீட்டுதற் பொருட்டுப் பிரிந்துசெல்ல எண் ணும் தலைமகன் ஒருவன், என்றும் பிரிந்தறியாத் தலைமக ளையும், அவளைப் பிரிந்துசென்று கொணரும் பொருளினை யும் ஒப்பிட்டு நோக்குகின்றான்; நோக்கித் தன் நெஞ்சை விளித்து "நெஞ்சே! தலைவியொடு கூடி இல்லில் இருப்போ மாயின், தலைவியின் கூட்ட இன்பம் பெறலாமே ஒழியப் பொருள் பெறுதல் இயலாது; தலைவியைப் பிரிந்து பொரு ளீட்டச் செல்வோமாயின், திரண்ட பொருளைப் பெறலாமே யன்றித் தலைவியொடு கூடி உறைதலால் உளவாம் இன்பத் தைப் பெறுதல் இயலாது; ஆகவே, இவ் விரண்டினையும் ஒப்பு நோக்கின், பொருள்வயிற் பிரியினும், பிரிதலின்றித் தலைவியொடு கூடி மகிழினும், நல்லதொரு செயலைப் புரிந் தாயே ஆவாய்; ஆயினும், தலைவியைப் பிரிந்து பெறும் பொருளோ, பொய்கையிடத்து, ஓடுகின்ற மீன் செல்லும் நெறியைப்போல், தாம் இருந்த இடமும் தெரியாமல் அழிந்துபோகும் இயல்புடையது; ஆகவே, கடல் சூழ்ந்த இப் பெரிய உலகையே அளக்கும் மரக்காலாகக்கொண்டு ஏழுமுறை அளக்கப்பெறும் திரண்ட பொருளைப் பெறுவ தாயினும், அப்பொருளை விரும்பேன்; தலைவியின், செவ்வரி பரந்து, அருள்நிறைந்த கண்கள் என் ஆற்றல் அனைத்தை

யும் அழித்துவிட்டன; யான் வாரேன்; அப் பொருள் எத்துணைச் சிறப்புடையவாயினும் ஆகுக!" என்று கூறி மறுத்துவிட்டான் என்று பாடிய அவர் பாட்டின் பொருள் துய்த்துப் பயன் கொள்வோமாக.

"புணரின், புணராது பொருளே; பொருள்வயிற்
பிரியின், புணராது புணர்வே; ஆயிடைச்
சேர்பினும், செல்லாய் ஆயினும், நல்லதற்கு
உரியை; வாழி! என்னெஞ்சே! பொருளே,
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியிற் கெடுவ; யானே
விழுநீர் வியலகம் தூணி யாக
எழுமாண் அளக்கும் விழுநிதி பெறினும்
கனங்குழைக் கமர்த்த சேயரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன்;
எனைய ஆகுக வாழிய பொருளே." (நற்: கசு)

தலைவன், பொருள் கருதிப் பிரிந்து சென்றுவிட்டான் எனக் கருதிய தலைமகளின் வருத்தம் கண்ட அவள் தோழி, அவள்பால் சென்று, "மலைமீது பெரிய தேனிறால் இருக்கக் கண்டான் ஒருவன், அதைக் கைக்கொள்ள வேண்டும் என்ற ஆசையால், பழைய கண்ணேணி ஒன்றைச் சார்த்தி, அஃது ஒடிந்துபோம் நிலையில் உளது என்பதை அறியாதே, அதன்மீது கால்வைத்து ஏறி இடையில், அவ் வேணியின் இயல்பறிந்து அஞ்சி இறங்கிவிடுவதேபோல், நம் தலைவரும், பிரிந்துசெல்ல எண்ணி, பிரிந்தால் தலைவி உயிர் வாழாள்; அதனால் பெருங்கேடு உண்டாம் என உணர்ந்து, செல்வதைக் கைவிட்டார்; ஆதலின் வருந்தற்க!" என்று கூறினாள் எனப்பாடி, பொருளின் இன்றியமையாமையினையும், தலைவியின் அருமையினையும் உணர்ந்து செய்வதறியாது வருந்தும் தலைமகன் உள்ளப் பண்பினைப் பிறர் உணரச் செய்துள்ளார்:

"பெருந்தேன் கண்படுவரையின் முதுமால்பு
அறியாது ஏறிய மடவோன் போல
ஏமாந் தன்று இவ்வுலகம்;
நாமுளே மாகப் பிரியலன்! தெளிமே." (குறுந்: உஎங)

## அ. செல்லூர்க் கோசிகன் கண்ணனார்

செல்லூர், செல்லி எனவும் வழங்கப்பெறும்; இது, கீழ்க்கடலைச் சார்ந்துள்ளதொரு பேரூர்; இது கோசர்க் குரிய நியமத்திற்கு அணித்தே உளது; அருந்திறற் கடவுள ராற் காக்கப்பெறும் சிறப்புடையது; ஆதன் எழினி என்பானுக்கு உரியது; மழுவாள் நெடியோனாய பரசு ராமன் வேள்வி பல ஆற்றிய விழுச் சிறப்புடையது என் றெல்லாம் பாராட்டப்பெறும். புலவர் பலரைப் பெற் றெடுத்த பெருமையும் இதற்கு உண்டு. செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார் போன்ற புலவர்கள் இச்செல்லூரிற் பிறந்தவரே.

இவளைப் பிரிந்து பொருள் தேடச் செல்கின்றேன் என்கின்றனையே, நீ செல்லும் வழியில், கண்ணிபோல் வளைந்த கொம்புகளைக் கொண்ட காட்டெருது, தான் காணும் அணித்திடத்தே, அறுகம்புல் மேய்ந்து மகிழ்ந்து திரியும் மலைப் பசுவினைக் கண்டு, காதல் உற்று, அதைப் பெற மாட்டாமையால் பெருமூச்சுவிட்டு மர நிழலில் வீழ்ந்து கிடக்கும் காட்சிகள் பல உண்டே; அவற்றைக் கண்டு எவ்வாறு உளம் தேறிப் பொருள் தேடப் போவையோ? அவ்வாறு போதல் நினக்கு இன்பம் தருவ தொன்றோ? போதல் இயலுமோ? எனக் கேட்கும் தோழி யின் சொல்லாற்றல் சுவை நிறைந்து தோன்றல் காண்க!

> "கண்ணி மருப்பின் அண்ணல் நல்லேறு
> செங்கோல் பதவின் வார்குரல் கறிக்கும்
> மடக்கண் வரையா நோக்கி வெய்துற்றுப்
> புல்லரை உகாஅய் வரிநிழல் வதியும்
> இன்னா அருஞ்சுரம் இறத்தல்
> இனிதோ? பெரும! இன்துணைப் பிரிந்தே."
>
> (குறுந்: ௩௬௩)

## ௬௰. செல்லூர்க் கோசிகன் கண்ணனார்

இவர் செல்லூரிற் பிறந்தவர்; அந்தணர் குலத்தவர்; கண்ணனார் எனும் இயற்பெயருடையவர்; இவர் பெயர் சில ஏடுகளில் செல்லூர்க் கோசங்கண்ணனார் எனவும் காணப்படுகிறது. செல்லூர், கோசர் என்பார்க்கு உரித்து ஆதலின், அவ்வூரினராய இவர் அக்கோசர் குடியிற் பிறந்திருத்தலும் கூடும்; அவ்வாறாயின், இவர் பெயர் செல்லூர்க் கோசங்கண்ணனார் என இருப்பின் பொருந்தும். கருவூர்க் கோசனார் என்பாரை நோக்கக் கோசருள் புலவர்களும் உளர் என்பது போதருதல் காண்க. மக்கட் பேற்றின் மாண்பு குறித்து இவர் கூறுவன உளங்கொளற்பாற்று; மக்களாவார் மாற்றாரும் போற்றும் மாண்புடையராதல் வேண்டும்; அத்தகைய மாண்புநிறை மக்களைப் பெற்றார், இம்மண்ணுலகில் மட்டுமேயன்றி, விண்ணுலகிலும் வீறுபெற்று வாழ்வர் என்று கூறும் அவர் கூற்று, "எழுபிறப்பும் தீயவை தீண்டா; பழிபிறங்காப் பண்புடை மக்கள் பெறின்," என்ற குறளோடு பொருந்தி நிற்றல் காண்க. புதல்வர் செய்யும் தானதருமங்கள், தந்தை தாயர் தீவினைகளைப் போக்கி, நன்னிலை உய்க்கும் என்பது உயர்ந்தோர் துணிபாதலையும் உணர்க!

> "இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
> மறுமை உலகமும் மறுவின்று எய்துப
> செறுநரும் விழையும், செயர்தீர் காட்சிச்
> சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்
> பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
> வாயே ஆகுதல் வாய்த்தனம்" (அகம்: ௬௬)

## ௯௦. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

தங்கால், பாண்டி நாட்டில், விருதுநகர்க்கும், ஸ்ரீவில்லி புத்தூருக்கும் இடைப்பட்டதொரு பேரூர்; திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; இப்பொழுது, திருத்தண்கால் என வழங்கப்படுகிறது. "தடம்புனற் கழனித் தங்கால்" என இளங்கோவடிகளால் சிறப்பிக்கப் பெறும் பெருமையுடையது இத்தங்காலே; இவ்வூரை, "இராசராசப் பாண்டிநாட்டு மதுராந்தக வளநாட்டுக் கருநீலக்குடி நாட்டுத் திருத்தங்கால்" (A. R No. 564 of 1922) எனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. மாறவர்மன் சுந்தரபாண்டின் காலத்தில், இவ்வூரிலுள்ள மடமொன்றில், பாரதமும் இராமாயணமும் படிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. சங்க காலத்தே, இவ்வூர் நல்லிசைச் சான்றோர் பலரின் பிறப்பிடமாம் பெருமையுற்றிருந்தது என்பது, தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் போன்ற புலவர்களால் புலனும். செங்கண்ணனார், ஆத்திரேய கோத்திரத்துப் பிறந்த அந்தணராவர். இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

பழந்தமிழ் மக்கள், தாம் உரைத்த உரை பொய்யாது; உரைத்ததை உரைத்தவாறே முடித்துத் தருவேம் என்பதை அறிவிக்குங்கால், சூளுறுதல் உண்டாம்; அச்சூளுறவு தப்பின், அவர்க்கு ஏதம் உண்டாம்; ஆனல், அறிவானும், அருங்குணங்களானும் நிறைந்த பெரியோர் பேச்சு ஒன்றே போதும்; அவர் சூளுறுதல் வேண்டுவதின்று என அக்கால மக்கள் கருதினர். இந்த உண்மைகளைத் தம்முடைய பாட்டொன்றில் ஓரிரு அடிகளால் அறிவித்துள்ளார் நம் புலவர்:

> "...............நாடன்
> அணங்குடை அருஞ்சூள் தருகுவன் என, நீ
> நம்மோர் அன்னோர் துன்னார் இவை என." (நற்: ௩அ௬)

## கக. தாமல் பல்கண்ணனார்

தாமல், காஞ்சிபுரத்திற்கு மேற்கே, காஞ்சிபுரம், வேலூர்ப் பெருவழியில் உளது. விஜயாலயன் வழிவந்த சோழர் காலத்தே இவ்வூர் மிக்க சிறப்புற்றிருந்தது. பாழான பழைய கோயில்களும் இங்கே உண்டு; அக் கோயிற் கல்வெட்டுக்களில் இவ்வூர்ப் பெயர் தாமர் எனக் காணப்படுகிறது. பன்கண்ணன் என்பது இந்திரனுக்கு உரிய பெயர்களுள் ஒன்று; இவர் பார்ப்பனர்;

ஒருகால் சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத் தான் என்பவனும் புலவர் தாமல் பல்கண்ணனாரும் வட் டாடி மகிழ்ந்திருந்தனர்; அப்பொழுது வட்டுக்களில் ஒன்று புலவரை அறியாமலே, அவர் கீழ் மறைந்துவிட்டது; அதைக்கண்ட மாவளத்தான், புலவர் வேண்டுமென்றே வட்டினை ஒளித்தனர் எனக்கொண்டு வெகுண்டு, அவரை அவ்வட்டினாலேயே எறிந்தான்; தவறு செய்திலராகவும், தவறு செய்தார்போல் எண்ணி எறிந்த அவன் செயல் புலவர்க்கு மிக்க சினத்தை உண்டாக்கிற்று; "நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்கண் ஐயப் படும்," என்ப. ஒருவன் பழிசெயலும், இழிகுணமும் உடையனாயின், ஊரார், அவன் பிறப்பின்கண் யாதோ பிழையுண்டு என்றே கருதுவர்; புலவர்க்கு, மாவளத்தான் உண்மையில் சோழர் குடியிற் பிறந்தவன்தானா என்ற ஐயம் உண்டாயிற்று; அக்குடிவந்தார், பார்ப்பார் மனம் நோகுமாறு நடந்துகொள்ளும் பண்பினரல்லரே; பருந் தால் தாக்குற்றுத் தன்பால் வந்தடைந்த சிறிய புறாவினைப் பேணிக் காத்தற்காகத் தானே துலையில் புகுந்து, தன் உடலையே உதவிய உயர்ந்தோர் பிறந்த பெருமையுடைய தன்றோ சோழர் பெருங்குடி; பெருமைசால் அப்பெருங் குடியில், இவன்போலும் இழிகுணமுடையார் தோன்றி யிருத்தல் இயலாதே; மேலும் பகைவரைக் கடக்கும் பேராண்மையும், புலவரைப் புரக்கும் கைவண்மையும்

உடைய இவன் முன்னோன் நலங்கிள்ளியின் நற்பண்பு எங்கே! இவன் இழிகுணம் எங்கே! இவனை அவன் தம்பி என, எவ்வாறு கொள்வது? உண்மையில் இவன் அவனோடு பிறந்தவனுகான்; இவன் பிறப்பில் ஐயம் உண்டு என்றெல்லாம் எண்ணி வருந்தினார்; எண்ணியதோடு நின்றார் அல்லர்; சினம் மிகுதியால், அவர் எண்ணம் சொல்லுருப் பெற்றுவிட்டது:

கேட்டான் மாவளத்தான்; இதற்குள்ளாகவே, புலவர் தவறிலர் என்பதையும் அறிந்து கொண்டான்; அதனால், புலவர் கூறும் வன்சொற்கள், அவனுக்குச் சினத்தை மூட்டிற்றில; மாருக, அவன் தலையை வணங்கச் செய்தன; தான்செய்த பிழைக்கு வருந்தினான்; புலவரை எறிந்ததை எண்ணி எண்ணித் துயர் உற்றான்; மாவளத்தான் நாணம், புலவர்க்குப் பெருமகிழ்ச்சி அளித்தது; வட்டு மறைந்திருந்தது தம்மிடத்தில்; அதனால் தவறு தம்முடையதே; தவறு செய்த தம்மை, மாவளத்தான் எறிதலில் தவறு இல்லை; அவன்பால் தவறு இல்லையாகவும் அவனைப் பழித்தது, தாம் மறுவலும் செய்த பெரும்பிழையாம்; இவ்வாறு, தவறுமேல் தவறு செய்தோர் தாமாகவும், தான் தவறு செய்யாமலும், தவறு செய்தான்போல் தாம் கூறிய வன்சொற்களைக் கேட்டும், சினங்கொள்ளாது, மாருகப் புலவர் நோவன செய்து விட்டோமே என்று எண்ணிய எண்ணத்தால், நாணித் தலை வணங்கி நின்ற மாவளத்தானின் பேருள்ளம் கண்டு பெரிதும் வியந்தார்; செவிகைப்பச் சொற் பொறுக்கா வேந்தரே உலகில் மிகப்பலராவர்; ஆனால் இவனோ, பிறர் கூறிய பழிகளையும் பொறுக்கும் பண்பும் உடையனவன்; இக்குணம், இவனுக்கு, இவன் பிறந்த குடியால் வந்த பெரும் பண்பு. இவன் குடிவந்தார், தமக்குப் பிழை புரிந்தாரையும் பொறுக்கும் பேருள்ளம் படைத்தோராவர்; அவர் குடிவழிவந்து அப்பண்பு மாறாது மாண்புற்ற இவன், இவர்களுக்குரிய காவிரி, கொண்டுவந்து குவிக்கும் மணலினும் பல்லாண்டு வாழ்ந்து வளம்பெருகுவானாக! என்று

வாழ்த்தினர். அவ்வாழ்த்துரை ஓர் அழகிய பாவாக, அவர் வாயினின்றும் வெளிப்போந்தது ;

"குணம் என்னும் குன்றேறி நின்றார்க்கு வெகுளி கணமே," நிற்கும் ; அக்கணநேர வெகுளியின் ஆற்றல் அளவிடற்கரிதாம் என்ப. கணத்திற்குமுன் வெகுண்டு வட்டெறிந்த மாவளத்தான் எங்கே ? புலவர் பொன்னுரை கேட்டுப் பிழைஉணர்ந்து பணிந்துநின்ற மாவளத்தான் எங்கே? மாவளத்தான் சினங்கண்டு செந்தீப் பறக்கும் செங்கண்ணராய் வன்சொல் வழங்கிய தாமல் பல்கண்ண னார் எங்கே ? அவன் பணிவுகண்டு, தம் பிழை உணர்ந்து வாழ்த்துரை வழங்கிய பல்கண்ணனார் எங்கே ? இருவரும் குணக்குன்று ஏறிநின்றோர் ; இருவர் சினமும் கணமே நின்றன ; அச்சினத்தின் ஆற்றல், பணியாத பேரரசைப் பிழை உணர்ந்து வணங்கச் செய்தது ; அழகிய வாழ்த் தினை விளங்க உரைக்கும் விரிந்த செய்யுளொன்றை வெளி வரச் செய்தது ! வாழ்க அவர் சினங்கள் !

"கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித்து ஒரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக !
நேரார்க்கடந்த முரண்மிகு திருவின்
தேர்வண்கிள்ளி தம்பி ! வார்கோல்
கொடுமர மறவர் பெரும ! கடுமான்
கைவண் தோன்றல் ! ஐயம் உடையேன் :
ஆர்புனை தெரியல் நின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர் ; மற்றிது
நீர்த்தோ நினக்கு ? என வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவாய் என்னினும்,
நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே ;
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் செம்மல்,
இக்குடிப் பிறந்தோர்க்கு எண்மைகா ணும்எனக்
காண்டகு மொய்ம்ப ! காட்டினை யாகலின்,

> யானே பிழைத்தனென் ; சிறக்கநின் ஆயுள் !
> மிக்குவரும் இன்னீர்க் காவிரி
> எக்கர் இட்ட மணலினும் பலவே !" (புறம்: சஉ)

இந்தச் செய்யுளில், புறாவின்பொருட்டுத் துலைபுகுந்த சிபியின் செயலைச் சிறப்பிக்க விரும்பிய புலவர், அவன் செயல், உலக உயிர்கள், ஞாயிற்றின் கொடிய வெம்மையால் வெந்து வருந்தாவண்ணம், அஞ் ஞாயிற்று வெப்பத்தினைத் தாம் தாங்கிக்கொண்டு, காற்றையே உணவாக உடைய சில முனிவர்கள், அஞ் ஞாயிற்றோடே உலகைச் சுற்றி வருகின்றனர் ; அத்தகைய பேருபகாரிகளாகிய அம் முனிவராலும் வியந்து போற்றப்படும் அருமை உடையது அவன் செயல் எனக்கூறி, ஒரு வரலாற்றினையும் விரித்து உரைத்துள்ளார் :

> "நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
> தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
> காலுணவாகச் சுடரொடு கொட்கும்
> அவிர்சடை முனிவரும் மருள." (புறம்: சஉ)

## கஉ. தொண்டி ஆமூர்ச் சாத்தனார்

ஆமூர் என்ற ஊர்கள் தமிழகத்தே பல உள்ளன; தொண்டைநாட்டில் உள்ள இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்றாகிய ஆமூர்க் கோட்டத்து ஆமூர் நாட்டில் ஓர் ஆமூர் உளது; மகாபலிபுரம் இவ் ஆமூர் நாட்டைச் சார்ந்ததாம் என்றும் கூறுவர். தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனத்தைச் சூழ உள்ள ஓய்மாநாட்டில் உள்ள ஆமூரும், இவ் ஆமூரே என்ப; இவ் ஆமூர், "அந்தணர் அருகா, அருங்கடி வியனகர், அந்தண் கிடங்கின் ஆமூர்," எனப் பாராட்டப்பெறும்; (சிறுபாண்: 187-188). சோழன் போர்வைக் கோப் பெருநற் கிள்ளியால் பொருது தோற் கடிக்கப்பெற்ற மல்லனுக்குரிய ஆமூர் ஒன்று முக்காவல் நாட்டில் உளது; அது முக்காவல்நாட்டு ஆமூர் என்றே அழைக்கப்பெறும். புலவர்கள், அதை "இன்கடுங் கள்ளின் ஆமூர்," எனப் பாராட்டுவர் (புறம்: 80). சேரநாட்டில் ஓர் ஆமூர் உளது; அது, குறும்பொறை என்ற மலைக்குக் கிழக்கே உளது என்றும், கொடுமுடி என்பானுக்கு உரியது என்றும் புலவர்கள் கூறுவர். "குறும்பொறைக் குணாஅது........கொடுமுடி காக்கும் குரூஉக்கண் நெடுமதில் சேண்விளங்கு சிறப்பின் ஆமூர்" (அகம்: 159).

புலவர் சாத்தனார், தொண்டி ஆமூர்ச் சாத்தனார் என அழைக்கப்பெறுவதால், அவர் பிறந்த ஆமூர், தொண்டி நகரைத் தலைநகராகக்கொண்ட சேரநாட்டைச் சார்ந்த ஆமூர் என்றே கொள்வர் புலவர்.

கடலில் விளையும் உப்பு, உமணர்க்கு வேண்டும் பயனெல்லாம் அளித்துத் துணைபுரிவதால், அதைக் கடலில் விளைந்த அமிழ்தம் எனப் புலவர் கூறுவது போற்றுதற்குரியதாம்.

> "ஒலி திரைக்
> கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்."
>
> (அகம்: கசக)

## கூ. நல்லூர்ச் சிறுமேதாவியார்

நல்லூர் என்ற பெயருடைய ஊர்கள் தமிழகத்தில் பல உள; நல்லூர், நல்லூர்ப் பெருமணம், பந்தணை நல்லூர், முதலாய தேவாரம் பெற்ற ஊர்ப் பெயர்களைக் காண்க. பேகன் பரத்தையோடிருந்த ஊர்ப் பெயரும் நல்லூரே. இவற்றுள் புலவர் பிறந்த நல்லூர் எதுவோ அறிகிலம். தாம் பிறந்த நல்லூரைப், "புன்புல வைப்பின் எம் சிறு நல்லூரே" எனத் தம் பாட்டிடைவைத்துப் பாராட்டியுள்ளார். இவர் பெயர், நன்பலூர்ச் சிறு மேதாவியார் எனவும் சில ஏடுகளில் காணப்படும். அகத்தில் இரண்டும், நற்றிணையில் ஒன்றும் ஆக மூன்று பாக்கள் இவர் பாடியனவாகக் கிடைத்துள்ளன.

முல்லைநிலத்து ஆயர்மகள் ஒருத்தி விருந்தினரை வரவேற்கும் வனப்புமிகு காட்சியினை நன்கு விளக்கியுள்ளார். "ஐய! களாவும் பழுத்துப் புளிச்சுவை பெற்றுள்ளன; விளாவும் பழுத்துள்ளன; செம்மறியாட்டின் பாலைச் சிவக்கக் காய்ச்சிப்பெற்ற முற்றிய தயிராகிய உலையில், மாசு போகக் குத்திக்கொள்ளப்பெற்ற வரகரிசியினையும் பெருமழை பெய்தமையால் வெளிப் புறப்பட்ட ஈயலையும் இட்டுச் சமைத்த இனிய புளிச்சோற்றினை, ஆன் நெய் உருகப் பெய்து நின் ஏவலர் முன்னே உண்ண, நீயிர் முள்வேலி அகத்தே அமைந்த பந்தரை முன்னேகொண்ட, செம்மண் பூசிச் சிறக்கச்செய்த சிறிய இல்லினுட் புக்கு, நினக்கு மனைவியாதற்குரிய இவள் விருந்தேற்று அளிக்க, பால் பெய்த உணவினை உண்டு செல்வாயாக," எனக் கூறும் அவ் வாயர் மகளிரின் அன்புரையினையும், அவர்தம் உணவு வகைகளையும், எத்துணை அழகாக விளக்கியுள்ளார் புலவர் நோக்குங்கள்!

"களவும் புளித்தன; விளவும் பழுநின;
சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்
இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு
கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து

ஈயல்பெய்து அட்ட இன்புளி வெஞ்சோறு
சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக,
இளையர் அருந்தப், பின்றை, நீயும்,
இடுமுள் வேலி, முடக்கால் பந்தர்ப்
புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்
புனையிருங் கதுப்பின்நின் மனையோள் அயரப்,
பாலுடை அடிசில் தொடீஇய ஒருநாள்
மாவண் தோன்றல்! வந்தனை சென்மோ!
காடுறை இடையன் ஆடுதலைப் பெயர்க்கும்
மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்
மன்ற இரும்புதல் ஒளிக்கும்
புன்புல வைப்பின் எம்சிறு நல்லூரே." (அகம்: ௩௯௪)

## ௧௪. நல்விளக்கனார்

நல்விளக்கு என்பதோர் ஊர்; அது யாண்டுளது என்பது விளங்கவில்லை; அவ்வூரிற் பிறந்ததனால், இவர் நல்விளக்கனார் என அழைக்கப்பெற்றுளார். இவருடைய பாடலாக நமக்குக் கிடைத்துளது நற்றிணையில் குறிஞ்சித் திணை தழுவிவந்த பாடல் ஒன்றே.

தலைவன் ஒருநாள் வாராது ஒழியினும் வருந்துவாள் தலைமகள்; அவள் கண்கள் நீர் சொரியும்; தோள்வளை கழன்றுகுமாறு மெலிந்துவிடும்; ஆனால் அவன் வரும் வழியோ கொடுமை நிறைந்தது; இளமையால் நடக்கலாற்றாத் தன் கன்று புலியால் தாக்குற்றுத் துயர் உறும் என அஞ்சிய பிடி, அதற்குக் காவலாய் உடனிருந்து அழைத்துச் செல்லும் அருமையுடையது; ஒருநாள் வாராது நிற்பினும், நெடிது வருந்தும் தலைவி, அவன் வரும் அக்கொடும் வழியில் அவனுக்கு ஏதம் உண்டாம் என அறியின் வாழாமையும் ஆம்; ஆகவே அவன் வாராதிருத்தலே நன்று; இவ்வாறு அவன் வருதலாலும் துயர் உண்டு; வாராமையாலும் துயர் உண்டு என அறிந்த தோழி, அத்துயர் நீங்கற்கு வழி, அவன் அவளை விரைந்து வந்து வரைந்து கொள்வதே எனத் துணிந்து அவன் வந்த வழியினை எடுத்துக்கூறுவாள். அவன் நாட்டைச் சார்ந்த காடுகளில் வாழும் கானவன், முள்ளம்பன்றியினைக் கொன்று கொணர்ந்து தர, அவன் மனைவி அதைத் தன் குடியில் உள்ளார் அனைவர்க்கும் மகிழ்ந்து அளித்து வாழும் வாழ்க்கையினைக் கண்டும், அவ்வாழ்க்கைபோல், தானும் வாழ எண்ணாது வரும் அவன் இனி இங்கு வாராது அமைவானாக எனக் கூறினாள் எனப் பாடிய அவர் பாட்டு, அக்கால மக்களின் மன இயல்பினை ஒருவாறு உணரத் துணைபுரிதல் காண்க!

> "ஆய்மலர் மழைக்கண் தெண்பனி உறைப்பவும்,
> ...... ........ ........ .. .. .. .. .. ..... ...........
> ஓங்குமலை நாடன்நின் நசையினனே." (நற்: ௩௩௫)

## கரு. நெடுங்களத்துப் பரணர்

இவர் பெயர் ஏடுகளில் நெடுங்கழுத்துப் பரணர் என வந்திருத்தல் கருதி, இப்பெயர் இவர்க்கு நீண்ட கழுத்து உண்மையால் வந்த காரணப் பெயராம் எனக் கருதி வந்ததை மறுத்து, இவர் பெயர் நெடுங்கழுத்துப் பரணர் என்பது அன்று; நெடுங்களத்துப் பரணர் என்பதே முதற்கண் நெடுங்கழுத்துப் பரணர் எனப் பிழைபட்டுப் பின்னர் நெடுங்கழுத்துப் பரணர் எனத் திரிந்து வழங்கலாயிற்று; இவர் திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே காவிரியின் தென் கரையில் உள்ள நெடுங்களம் என்ற ஊரினராவர்; அவ் வூரில் இவர் பெயரால் வழங்கிய மேடு ஒன்றும் இருந்தது. இவர் பெயர் திரிந்து வழங்குவதைப் போன்றே பரணர் மேடு என்ற பண்டைப் பெயர் பரணிமேடு எனத் திரிந்து வழங்குகிறது என அரிய ஆராய்ச்சி மூலம் அறிந்து முடிவு செய்துள்ளார் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள். (செந்தமிழ்ச் செல்வி : 23 : 485 )

வீரன் ஒருவன் விழுப்புண்பெற்று வீழ்ந்துவிட்டானாக, அவன் சிறப்பினைப் பாராட்டுமுகத்தான், அவன் மனைவி, அப்போர்க்களத்தே நின்று களம்பாடி மகிழும் பாணரையும் துடியரையும் விளித்து, "வெள்ளிய தூய ஆடையும், கரிய நிற உடலும் உடைய இம்மறவனை மொய்த்து நிற்கும் புள்ளினங்களை ஓட்டிக் காப்பீராக! யானும் இவன் உடலை உண்ணவரும் குறுநரிகளை, விளரிப் பண்பாடி விரட்டுவல்; வேந்தன் பொருட்டு வெறிதேயும் உயிர்கொடுக்கும் வெந்திறல் உடையவன் இம்மறவன்; இத்தகையானுக்கு, வேந்தன் தன் மணிமாலையைச் சூட்டிவிட்டு இவன் கழுத்தில் இருந்த ஒரு காழ் ஆரத்தைத் தான் அணிந்துகொண்டு சிறப்புச் செய்துள்ளான்; அத்துணைப் பேரன்புடையனாய அவ்வேந்தனும், இவனை இழந்தமையால் பெருந்துயர் உறும் என்னைப் போன்றே பெருந்துயர் உறுவானாக," எனப் புலம்பி நின்றாள் எனப் பாடியுள்ளார் :

"சிறு அஅர்! துடியர்! பாடுவன் மகாஅஅர்!
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
இரும்புள் பூசல் ஓம்புமின்; யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்;
என்போல் பெருவிதுப்பு உறுக வேந்தே;
கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன்தலை
மணிமருள் மாலைசூட்டி அவன்தலை
ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே." (புறம்: உகூக)

இதில் வீரர், வேந்தன் பொருட்டு உயிர்விடும் விழைவுடையவர்; அவனைக் காக்க ஆற்றும் போருக்குப் பயன் எதிர்நோக்கார் எனவும், அவ்வாறு தம் பொருட்டு உயிர் விடத் துணியும் உரனுடைப் பெருவீரர்க்குத் தன் மணி மாலைகளை அளித்து மாண்புறுத்தி மகிழ்வன் வேந்தன் எனவும் கூறி, அக்காலப் பெருவேந்தர்க்கும் பெருவீரர்க் கும் இடையே நிலவிய அன்புப் பிணைப்பினை அழகாக எடுத் துக்காட்டியுள்ளார் புலவர்.

## ௬௯. படுமரத்து மோசிகீரனார்

கீரனார் என்ற இயற்பெயருடைய இவரோ, அன்றி இவர் முன்னோர்களோ, மோசியினின்று படுமரம் போந்து வாழ்ந்தவராதலின், இவர் படுமரத்து மோசிகீரனார் என அழைக்கப்பெற்றுள்ளார். மோசி நகர்க்குரிய கீரனார் ஒருவரும் உளராதலின், அவ்வேற்றுமை தோன்ற, இவரைப் படுமரத்து மோசிகீரனார் என, அக்காலத்தார் அழைப்பாராயினர். இவருக்குரிய ஊராகிய படுமரம் சில ஏடுகளில் படுமாற்றூர் எனவும், படுமாத்தூர் எனவும், காணப்படுகிறது. இப்படுமரத்தினும் புலவர் பலர் வாழ்ந்திருக்கக் காண்கிறோம்

தலைவன், பாணன் வழி அனுப்பிய தூதினை ஏற்றுக் கொண்ட தலைமகள், தான் ஏற்றுக்கொண்டமைக்குக் காரணம், பாணன் உரைத்த உரை வன்மையே எனத் தோழிக்குக் கூறுவாள், "தோழி! தங்கள் கணவன்மார் செய்த தவறு கண்டு மிகச் சினந்து ஊடி நிற்பாரை யெல்லாம், தன் சொல்லாற்றலால் பணியவைத்து அவரவர் கணவன்மாரை ஏற்றுக்கொள்ளச் செய்து, அங்கெல்லாம் விருந்துண்டு வாழும் வாழ்க்கையில் கைதேர்ந்தானாகிய இப்பாணனால், யானும் தலைவனை ஏற்றுக் கொள்ள இசைந்தேன்; இத்தகைய ஆற்றல் வாய்ந்த இவன், இரந்துண்டு வாழ்ந்து பெருநூல் பல கற்கும் ஓர் இளமாணாக்கன் ஆவன்; தான் பழகியறியாத பிற ஊர்களிலும், தன் மொழிவன்மையினைத் தோற்றுவிக்கும் இவன், தனக்குரிய ஊர்ச்சபையில் எத்துணைச் சிறந்து விளங்குவனோ அறியேன்," எனக் கூறினாள் என்று பாடி, அக்கால மாணவர்தம் மாண்பினை மனதாரப் போற்றி மகிழ்ந்துள்ளார் புலவர்.

> "அன்னாய்! இவன்ஓர் இளமாணாக்கன்;
> தன்னூர் மன்றத்து என்னன் கொல்லோ?
> இரந்தூண் நிரம்பா மேனியொடு
> விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலனே."
>
> (குறுந்: ௩௩)

தலைவன் வருகின்றான் என்ற செய்தியைத் தன்பால் கூறிய பாணனை நோக்கி, "பாண! தலைவர் வருகின்றனர் என்று கூறுகின்றனையே, அவர் வரவை நீ எவ்வாறு அறிந்தனை; அவர் வருவதை நின் கண்ணால் நீயே கண்டனையோ? அல்லது அவர் வருவதைக் கண்டார் கூறக்கேட்டனையோ? கேட்டனையாயின், யாரிடத்தே கேட்டனை; அவ்வாறு கூறினவர் யாவர்? உண்மையை உள்ளவாறு அறிய உளம் துடித்து நிற்கின்றோம் யாங்கள்; ஆதலின் கூறுவனவற்றைத் தெளிவுறக்கூறு; கூறினால், யானைகள் புகுந்து ஆடும் பேராறாகிய சோணையாற்றால் சூழப்பெற்ற பொன்வளம் பெற்ற பாடலிபுரத்தைப் போலும் பெருஞ்செல்வம் பெற்றுப் பெருக வாழ்வாயாகுக!" என வாழ்த்திய தலைமகளின் வாழ்த்துரைகள், அவள் தன் கணவனை அறியத் துடிக்கும் உள்ளத் துடிப்பினை உள்ளவாறு உணர்த்தி நிற்றல் காண்க.

பழந்தமிழர்கள், தமிழகத்து வரலாறுகளோடு வடநாட்டு வரலாறுகளையும் விளங்க உணர்ந்திருந்தனர்; வடநாட்டில் சோணைநதிக்கரையில் உள்ள மகதநாட்டுத் தலைநகராம் பாடலிபுத்திரம் பொன்னாற் சிறந்த பெருநகரமாம் என அறிந்திருந்தனர் என்பதற்குப் புலவர் படுமரத்து மோசிகீரனார் பாடலும் ஒரு சான்றாம்.

> "நீ கண்டனையோ? கண்டார்க் கேட்டனையோ?
> ஒன்று தெளிய நசையினம்; மொழிமோ!
> வெண்கோட்டு யானை சோணை படியும்
> பொன்மலி பாடலி பெறீஇயர்!
> யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே?" (குறுந்: எரு)

தலைவி, "நீ கண்டனையோ? கண்டார்க் கேட்டனையோ?" என ஒருகால் கேட்ட தலைவி, அவன் உள்ளம் உவக்குமாறு, பொன்மலி பாடலி பெறீஇயர்," என வாழ்த்திவிட்டு தன் வாழ்த்துரையால் உளம் மகிழ்ந்த அவன் அந்நிலையில் உண்மை உரைப்பன் என்ற உறுதியால் "யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே?" என

மீட்டும் ஒருமுறை கேட்டாள் எனப் பாடிய புலவர் மக்கள் உளப்பண்பு உணர்ந்த பெரியவராவ ரன்றே?

தலைவியின் கற்புநெறிக்குக் களங்கம் உண்டாதல் கூடாது எனின், அவள் தலைவனேடு அவனூர் சென்று, அவனை ஆண்டு மணத்தல்வேண்டும் எனத் துணிந்து, அதை இருவர்க்கும் உளங்கொள்ளும்வரை உணர்த்தி, அவர் இசைந்தாராகக் குறித்த நேரத்தே தலைவிபால் சென்று தலைவன் வந்துளன்; புறப்படுக! என்று கூறியக் கால் நாணம் மிகுதியால், "இன்று கழிக நாளைச் செல் வோம்," எனத் தலைவி உரைப்பக் கேட்ட தோழி, அவள் உரையால் தான் செய்துமுடித்த ஏற்பாடுகள் எல்லாம் பாழாய்ப் போவதோடு, அவளுக்கும் பெரும்பழி உண்டாம் என்ற உணர்வு வரப்பெற்றமையால், கையும் காலும் செயலறத் தீயிடை வீழ்ந்த தளிரேபோல் நடுங்கினுள். தோழியின் நடுக்கத்தைப் புலவர் நன்கு படமாக்கிக் காட்டி யுள்ளார்:

"நீ உடம்படுதலின், யான் தரவந்து
குறிநின் றனனே குன்ற நாடன்;
இன்றை அளவை சென்றைக்க என்றி
கையும் காலும் ஓய்வன அழுங்கத்
தீயுறு தளிரின் நடுங்கி
யாவதும் இலையான் செயற்குரி யதுவே."

(குறுந்: உஅ௩)

## கஎ. படுமரத்து மோசிக்கொற்றன்

படுமரத்து மோசிகீரனாரைப் போன்றே, இவரும் மோசியினின்றும் போந்து, படுமரத்தில் வாழ்ந்தவராவர். இவர் பாடிய பாட்டு ஒன்றே நமக்குக் கிடைத்துளது.

மக்கள் கோடைகாலத்தே குளிர்ந்த காற்று, குளிர்ந்த நீர், குளிர்ந்த சூழ்நிலை ஆகியவற்றை விரும்புவதும், பனி மிகும் மாரிக்காலத்தே வெப்பமான பொருள்களையே விரும்புவதும் இயல்பாம். இதை உணர்ந்த புலவர், தலைவி ஒருத்தியின் நலத்தினைப் பாராட்டுங்கால், அவள் கோடைக் காலத்தே குளிர்ந்து தோன்றுவாள்; மாரிக்காலத்தே மனம் மகிழும் வெப்பம் உடையளாவள் என்று பாராட்டி இயற்கைப் பொருள்கள்பால் தாம் பெற்ற அறிவின் நுட்பத்தை நன்கு புலப்படுத்தி உள்ளார்.

தலைமகளின், தண்மை வெம்மைகளுக்கு, பொதியிற் சந்தனத்தையும், வெயிலில் நின்ற தாமரை, அவ்வெயில் மறையக் கூம்பியக்கால் சிறிதே வெம்மையுற்றிருக்கும் அம் மலரின் உள்ளகத்தையும் முறையே உவமையாகக் கூறிய அவர் அறிவின் நுட்பம் கண்டு அகமகிழ்வோமாக!

சந்தனத்தின் சிறப்பினைக் கூறத் தொடங்கி, அது வளரும் பொதியமலையின் மாண்பினை, அது உலகத்தாரால் உள்புக்குக் காணலாகா அருமை உடையது; தெய்வங்கள் உறையும் சிறப்புடையது எனவும் உரைத்துள்ளார்:

“மன்உயிர் அறியாத் துன்னரும் பொதியில்
சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப
வேனிலானே தண்ணியள்; பனியே
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி ஐயென
அலங்குவெயில் பொதிந்த தாமரை
உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே.” (குறுந்: நஎசு)

# ௧௫. பிசிராந்தையார்

பிசிராந்தையார், பாண்டிநாட்டில் பிசிர் என்னும் ஊரில் பிறந்தவர்; பிசிராந்தையாரின் பெறுதற்கரிய நண்பனாகிய கோப்பெருஞ்சோழன், தன் நண்பர், "தென்னம் பொருப்பன் நன்னாட்டுள்ளும், பிசிரோன் என்ப என் உயிர் ஓம்புநனே," என்று கூறுதல் காண்க. சோழநாட்டில், புலவர் பலரை நண்பராகக்கொண்டு நாடாண்டிருந்த கோப்பெருஞ் சோழன்பால் அன்புகொண்டு, அவனைக் காணாத முன்பே தன் உயிர்ஒத்த நண்பனாகக் கருதி வாழ்ந்தவர்; கோப்பெருஞ் சோழனும், புலவர் பெருமை யறிந்து, அவரைக் காணாதே, அவர்பால் பேரன்புகொண்டு பெருநட்புடையனாய் விளங்கினான். பாண்டிநாட்டில் வாழினும், கோப்பெருஞ் சோழனையே தம் அரசனாகக் கருதி வாழ்ந்தவர்; "நும கோ யார்" என வினவியோர்க்கெல்லாம், "எங்கோ, கோழியோனே; கோப்பெரும் சோழன்" என்று கூறிப் பெருமைகொள்பவர்; தம் பெயர் கேட்பார்க்கும் "என் பெயர் பேதைச் சோழன்," என்று அவன் பெயரையே தம் பெயராகக் கூறும் அத்துணை அன்புடையவர்; கோப்பெருஞ் சோழனும், தன் நண்பன் பிசிராந்தையாரின் பண்பு கேட்பார் அனைவரிடத்தும், "பிசிராந்தை இகழ்விலன்; இனியன்; யாத்த நண்பினன்; புகழ்கெட வரூஉம் பொய் வேண்டலன்," என்று அவர் பெருமை கூறிப் பாராட்டி வாழ்வன். 'கேட்டல் மாத்திரையல்லது யாவதும் காண்டல் இல்லா' இருவரும் இவ்வாறு உயிர் ஒத்துப் பழகியதாலன்றோ, "கோப்பெருஞ் சோழனுக்கும், பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சி யொப்பின், அதுவே, உடனுயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும்" (குறள்: 785. பரிமேலழகர் உரை). எனச் சிறந்த நண்பர்களுக்கு எடுத்துக்காட்டாக அறிஞர் பெருமக்களால் எடுத்துக்காட்டப் படுவாராயினர்!

இத்துணைச் சிறந்த நண்பர்களாகிய இவ் விருவரும், இவ் வுலகில் ஒருங்குகூடி இருந்து, உயரிய அறவுரைகள்

பல அளித்து வாழாது, இடையில், ஒருவரை யொருவர் காணப்பெறுமலே இறந்து மறைந்தது இவ் வுலகோர்க்கு ஆகூழ் இன்மையால் போலும்!

கோப்பெருஞ் சோழன், தன் மக்கள் மாண்பிலராய்த் தன்மீதே பகைத்தமை அறிந்து, மனம் குன்றி, வடக்கிருந்து மாண்டு மறைய விரும்பினன்; அவ்வாறே உறையூரின் ஒருபால் வடக்கிருந்தான்; வடக்கிருக்கப் புகுதற்கு முன், என் நண்பன் பிசிராந்தை, என் செல்வக்காலை நிற்பினும், என் அல்லற்காலை நில்லலன்: ஆதலின், என் அருகே அவனுக்கும் ஓர் இடம் ஒழித்து வையுங்கள்," என்று கூறி உயிர்விட்டான்; தம் நண்பன் கோப்பெருஞ் சோழனுக்கு உற்றதுயர் கேட்டார் பிசிராந்தையார்; ஓடோடி வந்தார் உறையூர்க்கு; அவன் நிலை கண்டார்; அழுதார்; அரற்றினர்; அவன், தன் அருகே ஒழித்து வைத்திருந்த இடத்தே தாமும் இருந்து உயிர் துறந்தார்! என்னே அவர் நட்பின் பெருமை! 'வருவன்' என்ற சோழன் சொல்லின் பெருமையினையும், அது பொய்யாகா வண்ணம் வந்த பொய்கையார் செயலையும், ஆண்டுக் கூடியிருந்த புலவர் அனைவரும் நினைக்குந்தொறும் நினைக்குந் தொறும் வியந்து பாராட்டினர்.

பழகிய நண்பரினும் பெரிய நண்பராய், விளங்கிய புலவர் பிசிராந்தையார், புலவரும் போற்றும் புலமையும், அறிவுத் தெளிவும் உடையவராவர்; உண்மையெனக் கண்ட ஒன்று உலகறியக் கூற அஞ்சாத ஆண்மையாளர். அவர் வாழ்ந்த பாண்டிநாட்டில் அப்போது அரசியல் மேற் கொண்டிருந்தோன் அறிவுடை நம்பி என்ற அறிஞனவன்; அவன் தன்னளவில் சிறந்த புலமையும், சீரிய பண்பும் உடையனே ஆயினும், அவன்கீழ் அரசியல்பணி புரிவார், குடியறிந்து கோலோச்சும் பண்பிலராயினர்; குடிகளிடத்தே கொள்ளும் இறையினை முறையோடு வாங்குதல் வேண்டும் எனும் கொள்கையற்றவர்; அதனல் நாட்டில் நலிவு பெருகுவது அறிந்த பிசிராந்தையார், அரசன் அறிவுடை நம்பிபால் சென்று, அரசர் இறைகொள்வதற்

காம் முறை இது என எடுத்துக்கூறிய அறவுரை இன்றுள்ளார்க்கும் பெரிதும் பயன்படும் பெருமையுடையதாம்.

"நிலத்தின் அளவு மிகச் சிறிது என்றாலும், அதை முறையாகப் பயிரிட்டு அதில் விளையும் உணவுப்பொருளை நாள்தோறும் இவ்வளவுதான் என்று கணக்கிட்டுக் கொடுத்துவந்தால், அச்சிறு நிலத்தில் விளைந்தபொருளே, யானைக்குப் பலநாள் உணவாகப் பயன்படும்; ஆனால், பரந்த நிலத்தில் பயிர் செய்துவிட்டு, அந் நிலங்கள் விளைந்து கதிர் முற்றியிருக்கும் காலத்தில், யானை ஒன்றை அவிழ்த்துவிட்டு, அது விரும்பியாங்குத் தின்னச்செய்தால், பயிர் செய்தநிலம்—வேலி வேலியாகப் பரவிக்கிடப்பினும், அவை முழுதும் ஒரேநாளில் பாழாகிவிடும்; யானையின் வாயுள் போவதைவிட, அதன் கால்களால் மிதியுண்டு அழிவதே மிகுதியாம். அதைப்போல், ஆளும் அரசன் அறிவுடையனாகிக் குடிகளிடமிருந்து எவ்வளவு பெறலாம்? எவ்வளவு பொருளை அவர்களால் கொடுக்க இயலும் என்பதை அறிந்து, அதற்கேற்ப ஒழுங்கான ஒரு முறையை அடிப்படையாகக் கொண்டு அவர்களிடமிருந்து வரி வாங்குவது என்ற முறையினை மேற்கொண்டால், அந் நாட்டு மக்கள் அரசனுக்குக் கொடுக்க வேண்டுவனவற்றையும் கொடுத்துத் தாங்களும் செழித்து வாழ்வர்; ஆனால், அரசன் தானும் கொடுங்கோலனாய், குடிகள் அழ, அழ அவர்களிடமிருந்து வரி வாங்குவதே அறநெறியாம் என அழிவுப்பாதை காட்டுவோரையே அமைச்சராகவும் கொண்டு, குடிகள் வருந்த வரிவாங்குவதை வழக்கமாக மேற்கொண்டால், அவனாலும் அதிகநாள் வரிவாங்க இயலாது; அவன் குடிகளும், அவன் கொடுமை தாங்காது அந்நாட்டைவிட்டு விலகுவர்; அல்லது வாழ்விழந்து வாடிவதைவர்." அறிவுடை நம்பிக்கு அவர் காட்டிய அரசியல் நெறி இது:

"காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே,
மாநிறை வில்லதும், பன்னாட்கு ஆகும்;
நூறுசெறு வாயினும், தமித்துப்புக்கு உணினே,

வாய்புகு வதனினும், கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,
கோடி யாத்து, நாடுபெரிது நந்தும்;
மெல்லியன் கிழவனாகி, வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நசசின்,
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே." (புறம்: 184)

பிசிராந்தையார் கவலையற்ற பெருவாழ்வுடையவராவர்; மனக்கவலையற்றார்க்கு உடல்நலக் கேடு உண்டாவது இல்லை; அதனால் அவர் தலை நரையடைதல் விரைவில் உண்டாகாது; பிசிராந்தையார் பல்லாண்டு வாழ்ந்தவர்; அவர் ஆண்டு பல வாழ்ந்தும், அவர் தலை நரைத்திலது; தலை நரையாமைக்குரிய காரணம் யாது என்றார்க்கு அவர் கூறிய விடை, அவர் கவலையற்ற வாழ்வை விளக்குகிறது; ஒருவர்க்குண்டாம் கவலை, அகநிகழ்ச்சியானும், புறநிகழ்ச்சியானும் உண்டாம்; அகத்தே, மனைவியும், மக்களும் மாண்பிலராயினும், ஏவல் செய்வார் நல்லவரல்லாராயினும் ஒருவர்க்குக் கவலையுண்டாம்; புறத்தே, நாட்டில் நல்லாட்சி இன்றாயின், நாட்டுமக்களுக்கு அவ்வாட்சியால் உண்டாம் துயர்கண்டு கவலை மிகும்; நாட்டில் வாழ்மக்கள் நல்லறிவும், நன்னெறியும் இலராயின், அவர்களாலும் நாட்டில் துயர்மிகும் ஆதலின் அதனாலும் மனக்கவலை மிகும். இவ்விரு நிலையிலும் கவலையற்ற வாழ்வினர்க்கு உடல் தளர்வதோ, அதனால் அவர் தலைமயிர் நரைத்தலோ இன்றாம்; இந்த உண்மையினைப் புலவர் பிசிராந்தையார், நரையற்ற தம் தலையினைக் கண்டு வியந்து நிற்பார்க்கு விளங்க உரைக்கின்றார். "பெரியீர்! நரைதிரைகட்குக் காரணம் முதுமையன்று; மனக்கவலையே; எனக்குக் கவலை இல்லை; கவலை இன்மைக்குக் காரணம், என் வீட்டிலோ, நாட்டிலோ கவலை தருவார் இலர்; என் மனைவி, மனைக்குரிய மாண்புகளில் மாறாதவள்; என் மக்கள் அறிவன அறிந்தவர்; என் கீழ்ப்பணியாற்றுவார், என் குறிப்பறிந்து கடனாற்றும்

கருத்துடையவர்; ஆகவே வீட்டில் எனக்குக் கவலையில்லை; எங்கள் நாட்டு அரசன் அறம்புரி செங்கோலினன்; அல்லவை கடிந்து ஆளும் அறிவுடையவன்; மேலும், எங்கள் நாட்டில் அறிவற்றோர் அதிகம் இலர்; ஆன்றவிந் தடங்கிய சான்றோர் பலர் வாழ்கின்றனர்; அவர்கள் தாங்கள் தவறு செய்யாமையோடு, அரசன் தவறின், அவன் தவற்றினை எடுத்துக்காட்டித் திருத்தும் இயல்புடையார்; ஆதலின், அங்கும் மனக்கவலை கொள்வதற்கு இடம் இன்றாம்; இவ்வாறு இருநிலையிலும் கவலை இன்மையால் ஆண்டு பல ஆகியும் நரையிலனாகினேன்," என்று கூறும் காரணங்கள், கவலையற்ற வாழ்வினைத் தாம் விரும்புவோரும், கவலையற்ற வாழ்வினைத் தன் நாட்டு மக்கள் பெறுதல் வேண்டும் என விரும்புவோரும் கருத்தூன்றி நோக்கற்பாலனவாம்.

"யாண்டு பலவாக நரையில வாகுதல்,
யாங்கா கியர்? என வினவுதி ராயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையர் என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன்தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழும் ஊரே." (புறம்: க௯க)

## கசுஉ. புல்லாற்றூர் எயிற்றியனார்

காவிரியின் வடகரைக்கண்ணதாய புல்லாற்றூரிற் பிறந்த புலவர் எயிற்றியனார், பரிசில் பெற்றுத் தாம் வாழப் பாக்கள் பாடும் பிற புலவர்களைப் போலன்றி, பாக்கள் பாடி, படையேந்திக் களத்தே நின்ற ஒரு தந்தைக்கும் அவன் மக்களுக்கும் இடையே எழ இருந்த பெரும் போர் ஒன்றை ஒழித்துப் புகழ்பெற்றவராவர்.

பிசிராந்தையார், பொத்தியார், புல்லாற்றூர் எயிற்றியனார் போன்ற புலவர் பெருமக்களை நண்பர்களாகக் கொண்டு, கொற்றமும் கொடையும் விளங்க வீற்றிருந்த கோப்பெருஞ் சோழனுக்கு மக்கள் இருவர் இருந்தனர்; ஆனால், அவர்கள், 'தந்தையரொப்பர் மக்கள்' என்ற மூதுரையைப் பொய்யாக்கி, மறநெறிமிக்கு மாண்பிலராயினர்; தம் தந்தையோடே பகைத்தனர்; படையெடுத்தும் வந்தனர்; அவர்கள் தம் மக்களேயாயினும், தகாவொழுக்கினராதல் அறிந்த அரசன், தானும் அவரை அடக்க அவர்மீது போர்கொண்டு செல்லலாயினன். தந்தையும், மக்களும் தம்முட் பகைத்துப் போர்புரியும் கொடுஞ் செயல்கண்ட புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார், மனம் பொறாராய்ப் போரை எவ்வாற்றேனும் தடுத்து நிறுத்த எண்ணினார்.

மக்கள் மாண்பிலராதல் அறிந்த புலவர் அவர்கள்பால் செல்லாது அரசன்பால் சென்று அறவுரை கூறலாயினர். தாம்கூறும் அறவுரைகளை, அரசன் அமைதியுறக் கேட்டல் வேண்டும் என்பதற்காக முதற்கண், அவன் பெற்ற வெற்றி, அவன்பால் அமைந்துகிடக்கும் உள்ள ஊக்கம், உரன், ஆருயிர்கள் மாட்டு அவன்கொள்ளும் அருள் ஆயவற்றை எடுத்துக்கூறிப் புகழ்ந்தார். பின்னர், "வேந்தே! நின்னொடு மாறுபட்டுப் பொர வந்துநிற்கும் இவரையும், நின்னையும் நோக்கின், அவர், நின்குலத்தோடு தொன்று தொட்டு வந்த பகைமையுடையராய சேர, பாண்டியர் குடி

யில் வந்தவரல்லர்; நீயும் அவ்வாறே அவர் பகைவராகிய, சேரனோ, பாண்டியனோ அல்லன்," என்று கூறி அவர்கள் பகைத்தற்குரியரல்லர் என்பதை எடுத்துக் கூறினார்; ஈண்டு, அரசனோடு பகைத்து வந்திருப்போர், அவன் மக்களேயாயினும், போர் மேற்கொண்டு வந்திருப்பதால் அவரைத் தன் மக்கள் எனக் கருதாது பகைவர் என்றே கருதுகிறான் அரசன் என்பதை உணர்ந்த புலவர், அவர் களைக் குறிப்பிடுங்கால், 'நின்மக்கள்' என்று குறிப்பிடாது, "நின் எதிர்வந்து நிற்கும் இவர்" என்றே குறிப்பிட்டார்.

அரசர், தம் நாட்டைப் பகைவர் கைப்பற்றுவண்ணம் காப்பதும், பகைவர் நாடுகளைப் போரிட்டுக் கைப்பற்றுவ தும், தாமும், தம் மக்களும் ஆள்வதற்குப் பேரரசு தேவை என்ற வேட்கையினாலேயே என்பதை அறிந்தவர் புலவ ராதலின், வந்தவர் பகைத்தற்குரியரல்லர் என்பதைக் கூறியதோடு, அவரோடு பகைத்தல், பேரரசைப் பேணிக் காக்கும் நோக்கத்திற்கு முரண்பட்டதுமாம் என்பதை எடுத்துக்காட்ட விரும்பினார்; "அரசே! ஈண்டு வாழுங் காலத்தில் ஈடிலாப் புகழ்பெற்று விளங்கி, இறுதியில் இறந்து விண்ணுலகடையின், நீ பேணித்தந்த இப்பேரர சினைப் பெறுதற்குரியார் அவரன்றோ? இதை யான் கூற வேண்டியதின்றி நீயும் அறிதியன்றே?" என்று கூறினார். தாம் கூறிய இவ்வுண்மையினை அரசன் ஒருவாறு உணர்ந் துளான் என்பதை அறிந்த பின்னர், மீட்டும் அரசனை அடுத்து, "அரசே! யான் கூறியன கேளாதும் வந் தோர் அறிவிலார் என்பதை அறியாதும், அவரோடு போரிட எண்ணுவையாயின், போர்க்களத்தே, இதோ வந்து நிற்கும் இவர்கள் இறக்க நீ வெற்றி பெறுகின்றனை என்றே கொள்வோம்; நினக்குப்பின் நின் ஆட்சிப் பொறுப்பினை யார்பால் அளிப்பாய்? நினக்குப்பின், இந் நாடு ஆள்வாரைப் பெறாமல் அழியவிடுதல் நன்றோ? அதற்கா, இத்துணைப் பெருமுயற்சி?" என்று கேட்டு நின்றார்; அந்நிலையிலும் அரசன், அறிவுதிருந்தானாதல் அறிந்த புலவர், அரசர் புகழ் விரும்பிகள்; பழிகாணப்

பொருது அவர் உள்ளம் என்பதை உணர்ந்து, இப்போரால் அவனுக்குப் பழியுண்டாம் என்றுகூறி அவன் உள்ளத்தே அச்சம் வரச்செய்து போர்விலக்கலே இனிச் செயற்பாலது எனத் துணிந்து, “ அரசே! போரில் புகுந்தார் இருவரும் வெற்றிகொள்ளுதல் இயலாது; ஒருவரே வெற்றிகோடல் இயலும்; நீயும், நின் மக்களும் மேற்கொள்ளும் இப்போரில், நின் மக்கள் இருவராயும், இளைஞராயும் இருப்பதால் ஒரு வேளை அவர் வென்றார் எனில், நீ இதுகாறும் பெற்ற வெற்றியெலாம் பாழாகப் பெரும்பழி யன்றோ நின்பால் வந்துறும்! இதை எண்ணிப் பார்ப்பாயாக, போர் நோக்கிப் புறப்படுதற்கு முன்,” என்று கூறி முடித்தார்.

தாம் கூறிய அறவுரைகள், அரசன் உள்ளத்தே புகுந்து அதற்குரிய பயனை அளிக்கத் தொடங்கின என்பதை அறிந்த புலவர் உடனே “அரசே! போர்விட்டுப் புறப்படுக! அடைந்தார்க்கு அருள்புரியும் பெரியோனுய நின்னை, விண்ணுலகோர் விரும்பி வரவேற்றலை விரும்புகின்றேம் யாம்; அதற்கு வழி இப்போரன்று; நல்லன பல ஆற்றுதல் வேண்டும் அதற்கு; ஆகவே அந் நல்லன புரிய இன்றே எழுக!” என்று கூறினர். புலவர் பொன்மொழிகள் பயன் அளித்தன. போர் ஒழித்து மீண்டான் அரசன்; ஆனல் மக்கள் எதிர்த்தனரே என்ற எண்ணம், உலகவாழ்வை வெறுக்கச் செய்தது; வடக்கிருந்து உயிர் விட்டுப் புகழ்கொண்டான்; போர் மேற்கொண்டு, பகையரசர் பழிக்க இறக்க இருந்த அரசனைப், புலவரும் பிறரும் போற்றிப் புகழ்ந்து கண்ணீர்விட்டுக் கலங்குமாறு இறக்கச் செய்த அருந்திறல், புல்லாற்றூர் எயிற்றியனார்க் கிருத்தலை அறிந்து அகம்மிக மகிழாதார் யார்?

“மண்டமர் அட்ட மதனுடை நோன்தாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே!
பொங்குநீர் உடுத்த இம்மலர்தலை உலகத்து
நின்தலை வந்த இருவரை நினைப்பின்
தொன்றுறை துப்பின்நின் பகைஞரும் அல்லர்;
அமர்வெங்காட்சியொடு மாறுஎதிர்பு எழுந்தவர்;

நினையுங்காலை நீயும் மற்றவர்க்கு
அனையை அல்லை; அடுமான் தோன்றல்!
பரந்துபடு நல்லிசை எய்தி, மற்றுநீ
உயர்ந்தோர் உலகம் எய்திப், பின்னும்
ஒழித்த தாயம், அவர்க்கு உரித்தன்றே?
அதனால், அன்னதாதலும் அறிவோய் நன்றும்!
இன்னும் கேண்மதி; இசை வெய்யோயே!
நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்,
நின்பெரும் செல்வம் யார்க்கு எஞ்சுவையே?
அமர் வெஞ்செல்வ! நீ அவர்க்கு உலையின்,
இகழுநர் உவப்பப் பழி எஞ்சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தை நின் மறனே; வல்விரைந்து
எழுமதி! வாழ்க நின் உள்ளம்! அழிந்தோர்க்கு
ஏம மாகும் நின் தாள்நிழல்; மயங்காது
செய்தல் வேண்டுமால் நன்றே, வானோர்
அரும்பெறல் உலகத்து ஆன்றவர்
விதும்புறு விதுப்பொடு விருந்துஎதிர் கொளற்கே."

(புறம். ௨௧௩)

## உ௦. பெரும்பாக்கனார்

ஆர்ப்பாக்கம், மணப்பாக்கம் என்பனபோல், பெரும் பாக்கம் என்பதும் ஓர் ஊர்; அவ்வூரினராதலின், இவர் பெரும்பாக்கனார் என அழைக்கப் பெற்றுளார்.

ஒருவர் பிழைபுரிந்தாராக, அவர்பால் வெறுப்புற்றோர், அவரைக் கடிய விரும்பியவழி, அவரை நேரே கடிவதைவிட்டு, அயலில் உள்ளார்பால் அவரைக் கடிவதாற் பயனில்லை; ஆகவே அவரைக் கடியற்க என்று கூறிக் கடியார்போல் கடிதலும் உண்டு. புலவர், தாம் பாடிய செய்யுளொன்றில் இம்முறையினைக் கையாண்டுள்ளார்.

தலைவன் ஒருவன் தான் விரும்பிய தலைமகள் ஒருத்தியைச் சின்னாள் பிரிந்து காணாதொழியினான்; அதனால் அவள் பெரிதும் வருந்தினாள்; ஒருநாள் வந்தான்; வந்தானைக் கண்ட அவள், தன் தோழியை விளித்து, "தோழி! தலைவனைக் கண்டால், நின்னால் காதலிக்கப்பட்ட இவள் இவ்வாறு வருந்தவிட்டுப் பிரிதல், நும்போலும் பெரியோர்க்கு அழகாமோ? என்று கூறி இடித்துரையற்க!" என்று கூறினாள் எனப் பாடியுள்ளமை காண்க.

> "தண்ணந் துறைவற் காணின், முன்னின்று
> கடிய கழறல் ஓம்புமதி! தொடியோள்
> இன்ன ளாகத் துறத்தல்
> நும்மின் தகுமோ என்றனை துணிந்தே."
>
> (குறுந்: உ௧௯)

## உக. பொதுக்கயத்துக் கீரந்தையார்

பொதுக்கயம் என்பது ஓர் ஊர்; ஊரார் நீர் எடுக்கும் பொதுக்குளம், பொதுக்கயம் என்றும் அழைக்கப்பெறும்; அப்பொதுக்கயமே, அவ்வூருக்கும் பெயராகிவிட்டது போலும்! கீரந்தையார், கீரன் என்பாரின் தந்தையாராவர்; ஆதன் தந்தை, ஆந்தை எனவும், சாத்தன் தந்தை, சாத்தந்தை எனவும் வருதல்போல் கீரன் தந்தை, கீரந்தை என வரும்.

"நல்ல குறுந்தொகை," எனப் போற்றப்பெறும் பெருமை வாய்ந்த குறுந்தொகைக்கண் வந்துள்ள செய்யுள் ஒன்றே, இவர் பாடிய பாடலாக இப்போது நமக்குக் கிடைத்துளது.

நீ காதலித்த அவள், அறியாப் பருவத்தள் என்றார்க்கு, தலைவன், "கண்டாரை வருத்தும் கவின் அவள்பால் உண்டு என்பதை யான் அறிவேன்; அதை அவள் அறியாள்; அவள் அறியாமைக்குக் காரணம், அவள் பெருஞ் செல்வம் பெற்றாரின் அருமை மகளாதலாம்; இனி அவள் கருதியதுதான் யாதோ?" எனக் கூறிய பொருள் அமைய வந்துளது அச் செய்யுள் :

"அணங்குதற்கு
யான்தன் அறிவலே ; தான் அறியலளே ;
யாங்காகுவள் கொல்தானே ?
பெருமுது செல்வர் ஒருமட மகளே."

(குறுந் : ௩௩௭)

---

## உஉ. பொதும்பில் புல்லாளங் கண்ணியார்

"பொதும்பில் பாண்டி நாட்டில் உள்ளதோர் ஊர்; மதுரைத் தாலுக்காவில் உளது; இப்பொழுது பொதும்பு என வழங்குகிறது," என்று கூறுவர், நற்றிணை உரையாசிரியர், திருவாளர், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயரவர்கள். பொதும்பு என்ற சொல் இளமரக்கா என்ற பொருளுடையதாம் ஆதலின், இவ்வூர் மலர்ச்சோலை பல சூழ உள்ளது போலும். பொதும்பில், புலவர் பலரின் வாழ்விடமாம் பெருமை உடையது; பொதும்பில் கிழார், பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் என்ற புலவர்களைக் காண்க. பொதும்பில் புல்லாளங் கண்ணியார் பாடிய பாட்டு முல்லைத்திணை தழுவி வந்துளது:

வினைமுற்றி மீளும் தலைமகன், மழைநீர் நிறைந்த பள்ளங்கள்தோறும், சிறிய பல இசைக் கருவிகளினின்றும் எழும் இசைபோல, தேரைகள் ஒலிப்பதையும், பிடவும் கோடலும் மலர்ந்து மனதிற்கினிய காட்சியவாதலையும், முறுக்கிய கொம்புகளையுடைய கலை, தெளிந்த நீர் குடித்து விட்டுத் தன் பிணையோடு அன்புகலந்து ஆடி மகிழ்வதையும் கண்டு, காதலிபால் சென்ற பெருவேட்கையுடையனாய்த், தேரை விரைந்தோட்டுமாறு, பாகனை வேண்டும் துறையமைந்த அவர் செய்யுள், கார்காலத்து மழை பெற்றமையால் காடும், காட்டில்வளர் செடி கொடிகளும், ஆங்குவாழ் நீர்வாழ்வன நிலத்துறைவனவாய உயிர்களும், அறிவன அறிந்த மக்களும் மகிழ்ந்து வாழ்வர் என்ற உலகியலை உணர்த்தி நிற்கிறது. (அகம்: கருச)

---

## உ௯. பொய்கையார்

பொய்கையார், பொய்கை என்ற ஊரிற் பிறந்தவ ராவர்; "கள்நாறும்மே கானலம் தொண்டி; அஃதெனம் ஊரே," என அவர் பாட்டில் வரும் சொற்றொடர் கொண்டு, அவர் பிறந்த ஊர் பொய்கையன்று; தொண்டி நகரே என்று கூறுவர் சிலர். தாம் பாராட்டும் அரசனை தம் உறவினன்; அவன் நாடே தம்நாடு; அவன் ஊரே, தம் ஊர் என உரைத்தல் புலவர் வழக்கமாதலின், பொய்கை யார் அவ்வாறு கூறுவதைக்கொண்டு அவர் ஊர் தொண்டி நகர் எனக் கோடல் பொருந்துவதன்று.

சேரன் கணைக்கால் இரும்பொறைக்கும், சோழன் செங்கணானுக்கும் பகைமை மேலிட்டதனால், இருவரும் வெண்ணிப் பறந்தலையில் பெரும்போர் செய்தனர்; போரில் சேரமான் தோற்கச் சோழன் தோற்ற சேரனைப் பிடித் துக் குடவாயிற்கோட்டத்தில் சிறையிட்டான். தம் நண்பன் சிறைப்பட்டான் என்ற செய்தி கேட்ட பொய்கை யார், சோழன் வெற்றியைச் சிறப்பிக்கும் களவழி நாற்பது என்ற ஒரு நூலியற்றிக்கொண்டு சென்று, சோழன் அவை அடைந்து அதை அரங்கேற்றி, அவனை மகிழ்வித் துத் தம் நண்பனைச் சிறை மீட்டார். பொய்கையாரின் நன்றி மறவா இச்செயலை, "களவழிக் கவிதை பொய்கை யுரை செய்ய வுதியன் கால்வழித் தளையை வெட்டி யாசிட்ட பரிசும்" (கலிங்கத்துப் பரணி), "இன்னருளின் மேதக்க பொய்கை கவிகொண்டு, வில்லவனைப் பாதத் தளை விட்ட பார்த்திபனும்" (விக்கிரம சோழனுலா), "பொறை யனைப் பொய்கைக் கவிக்குக் கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோனும்" (குலோத்துங்க சோழனுலா), 'பொய்கை களவழி நாற்பதுக்கு வில்லவன் காற்றளையை விட்டகோன்' (இராசராச சோழனுலா) எனப் புலவர்கள் பாராட்டுவா ராயினர்.

தம் நண்பன் கணைக்கால் இரும்பொறை, மூவன் என்ற பெருவீரன் ஒருவனை வென்று, அவன் பல்லைப்

பிடுங்கிக்கொணர்ந்து, தன் வெற்றிக் குறிகுறியாகத் தன்னுடைய தலைநகராகிய தொண்டிநகர்க் கோட்டை வாயிற் கதவில் அழுத்திவைத்த சிறப்பினைப் பொய்கையார் நற்றிணைப் பாட்டில் வைத்துப் பாராட்டியுள்ளார் :

"மூவன், முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்
கானலம் தொண்டிப் பொருநன் ; வென்வேல்
தெறலருந் தானைப் பொறையன்." (நற் : கஅ)

பொய்கையார், சேரமான் கோக்கோதைமார்பன் என்ற மற்றொரு சேர அரசனையும் பாராட்டியுள்ளார். கோக்கோதைமார்பனுக்குரிய நாடு, மலையும் மலைசார்ந்த இடங்களும் பெற்றுக் குறிஞ்சிவளமும், வயலும் வயல் சார்ந்த இடங்களும் பெற்று மருதவளமும், கடலும் கடல் சார்ந்த இடமும் பெற்று நெய்தல் வளமும் விளங்கும் அவன் நாட்டின் பல்வேறு வளத்தினைப் பாராட்ட விரும்பிய புலவர், "கோதையைக் குறிஞ்சிநிலத் தலைவனுக்குரிய பெயராகிய நாடன் என்ற பெயரிட்டு அழைப்பனோ? மருதநிலத் தலைவனை அழைக்க ஆளும் ஊரன் என்ற பெயரிட்டு அழைப்பனோ? நெய்தல்நிலத் தலைவனுக்குரிய சேர்ப்பன் என்ற பெயரிட்டு அழைப்பனோ?" என்று கூறியதோடு, அவன் நாட்டில் குறிஞ்சிநிலக் குறமகளிர், தம் புனத்துத் தினையினை உண்ணவரும் பறவைகளை ஓட்டத் தம் கையில் உள்ள தட்டை என்ற கிளிகடி கருவியைத் தட்டி ஒலி செய்தாராக, அவ்வொலி கேட்டு, கதிர்கள் முற்றித் தலைசாய்ந்து கிடக்கும் கழனிகளில் உள்ள பறவைகளும், கடலைச் சார்ந்த கழிகளில் உள்ள பறவைகளும் அஞ்சிப் பறந்து ஓடும் என்றும் கூறியுள்ள பாட்டின் பொருள் நயம் படிக்குந்தொறும் இன்பம் பயந்து நிற்கிறது :

"நாடன் என்கோ? ஊரன் என்கோ?
பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?
யாங்கனம் மொழிகோ? ஓங்குவாள் கோதையைப்
புனவர் தட்டை புடைப்பின், அயலது
இறங்கு கதிர் அலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே." (புறம் : சக)

கடைச்சங்கப்புலவரும், களவழி பாடியவரும் ஆய பொய்கையார், முதலாழ்வார் மூவர் எனச் சிறப்பிக்கப் பெறுவாருள் ஒருவராய பொய்கையாழ்வாரே எனக் கூறுவர் சிலர்; மறந்தும் புறந்தொழா மாந்தராகிய ஆழ்வார்களுள் முதல்வராகிய பொய்கையார் மக்களைப் பாடியிரார்; அதிலும், சோழன் செங்கணுைகிய சிறந்த சைவன் ஒருவனைப் பாடியிரார் ஆதலின், கடைச்சங்கப் பொய்கையாரல்லர், பொய்கையாழ்வார் என்று கூறுவாரும் உளர். பொய்கையார் பாடிய களவழி நாற்பது, அழகிய உவமைகள் அமைந்த அரிய செய்யுட்களின் தொகுப்பு நூல்; படித்து இன்புறற்குரிய சிறந்த சிறு நூல்.

---

## உசு. பொருந்தில் இளங்கீரனார்

இளங்கீரனார் என்ற பெயருடையார் பலராவர்; இளங்கீரனார், அந்தி இளங்கீரனார், எயினந்தை மகனார் இளங்கீரனார், பொருந்தில் இளங்கீரனார் என்பாரை நோக்குக. அவருள், இவர் பொருந்தில் என்ற ஊரிற் பிறந்தவராதலின், பொருந்தில் இளங்கீரனார் என அழைக்கப் பெற்றுளார். பொருந்தில் என்பது கிடங்கில், விளங்கில் என்பனபோல ஓர் ஊராம்; சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பாராட்டிய புறநானூற்றுச் செய்யுள் ஒன்றும், பாலைத் திணைப்பொருளாக வந்த அகநானூற்றுச் செய்யுட்கள் இரண்டும் இவர் பாடிய பாடல்களாம்.

மாந்தரஞ்சேரல் இரும்பொறை, பரணரும் பாராட்டும் பெருமை உடையவன்; பரணரின் பெருநண்பராம் கபிலர் பால் பெருமதிப்பு உடையவன்; இவனும், இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியும் மேற்கொண்ட போரில் இவன் தோற்றுவிட்டான்; தன் தோல்விக்குக் காரணம், பெருநற்கிள்ளியின் பேராண்மையன்று; அவனுக்குத் துணை வந்த தேர்வண்மலையனின் மாற்றொணு ஆற்றலே என அறிந்தான்; அந்நிலையில், "தேர்வண்மலையன் நம்பால் நின்று போருடற்றி இருப்பின் நமக்கே யன்றோ வெற்றி! அவன் துணை நமக்குக் கிடைக்காமற் போயிற்றே! இவ் வேளை, கபிலர் இருந்திருப்பின் அவன் துணையினைப் பெற்றிருப்பேன்; கபிலர்பால் பெருமதிப்புடையான் தேர்வண் மலையன்; அவர் சொற்கு மறுசொல் கூறியிரான்; அவர் நம்பால் அன்புடையராதலின், அவன் துணை நமக்கே எய்துமாறு கூறியிருப்பர்; அவனும் அவர் உரைப்படி நமக்கே துணைவந்திருப்பன்; வெற்றி நமக்கே உண்டாகியிருக்கும்; ஆனால், அந்தோ! இவ்வேளை அவர் இல்லாது போயினரே! அவர் இருந்திருப்பின் எவ்வளவோ நன்றாம்!" என்று எண்ணி வருந்தினான். இவ்வாறு வருந்திய மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் வருத்தத்தைப் புலவர் தாம் பாடிய பாட்டிலும் குறிப்பிட்டுள்ளார் :

“ செறுத்த செய்யுள்செய் செந்நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுளனாயின் நன்றுமன் என்றநின்.” (புறம் : ௫௩)

இவன் ஒரு காலத்தே, கடலன் என்பானுக்கு உரியது எனக் கருதப்பெறும் விளங்கில் என்ற விழுப்புகழ் நிறைந்த நகர்க்குப் பகைவரான் வந்த கேட்டினைப் போக்கிக் காத்தான்; முற்றி முதிர்ந்த சிப்பிகளும், முத்துக்களும் நிறைந்த மணல் வெளியில், மணிமாளிகை வாழ் மாண்பு நிறை மகளிர் போந்து, கைகோத்துக் குரவை ஆடி மகிழும் மாண்பு நிறைந்த விளங்கில் நகர்ச் சிறப்பினையும், அதை அவன் காத்த ஆற்றற் சிறப்பினையும் புலவர் பொருந்தில் இளங்கீரனார் விதந்து கூறி வியந்துள்ளார் :

“ முதிர்வார் இப்பி முத்த வார்மணல்
கதிர்விடு மணியின் கண்பொரு மாடத்து
இலங்குவளை மகளிர் தெற்றி ஆடும்
விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற
களங்கொள் யானைக் கடுமான் பொறைய !” (புறம் : ௫௩)

இவ்வாறு ஆண்மையும், அறிவுடைப் பெருமக்கள் பால் கொள்ளும் பெருமதிப்பும் அவன்பால் பொருந்தி இருப்பதால் அவன் புகழ் பெரிதாயிற்று; அது புலவர்களால் பாடற்கும் அடங்காது விரிவதாயிற்று; விரித்து உரைப்பின், உரைக்க உரைக்க விரிந்துகொண்டே போவதாயிற்று; தொகுத்து உரைக்கின், அத்தொகுப்பினுள் அடங்குவதும் அரிதாயிற்று; இதனால் அவன் புகழைப் பாடமாட்டாராயினர் புலவர்; ஆனால் அவனைப் பாடாது விடுதலோ புலவர்க்கு அழகன்று; ஆதலின் அதை ஒருவாறு பாடவும் முன்வந்தனர் புலவர். புலவரானும் புனைந்துரைக்கலாற்றா அவன் பெரும்புகழ்ச் சிறப்பினை நம் புலவர் பாராட்டிய பண்பு பாராட்டற்குரியது.

“ விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்;
மம்மர் நெஞ்சத்து எம்மனோர்க்கு ஒருதலை
கைம் முற்றல நின்புகழே ; என்றும்

ஒளியோர் பிறந்த இம்மலர்தலை உலகத்து
வாழேம் என்றலும் அரிதே; தாழாது
..........................................
நின் ஆடுகொள் வரிசைக்கு ஒப்பப்
பாடுவன் மன்னல் பகைவரைக் கடப்பே."

(புறம்: ௫௩)

புலவர் பொருந்தில் இளங்கீரனார், தம் போலும் புலவர்கள்பால் பெருமதிப்பு உடையராவர்; இப்பண்பு, கபிலரைக் கூறுங்கால், அவர் சொற்செறிவும், பொருட் செறிவும் ஒருங்கே பொருந்தப் பாடவல்ல பெரும்புலவர்; பொய்யுரையா மெய்ந்நாவினர்; கேள்விச் செல்வத்தினைச் சிறக்கப்பெற்றவர்; விளங்கிய பெரும்புகழால் வீறு உற்ற வர் எனக் கூறிப் பாராட்டியிருத்தலாலும், புலவர்கள் பெரும்புகழ் உடையாரைப் பாராட்டுங்கால், அவர் புகழினை எஞ்சாது பாட விரும்புவார் எனவும், அவ்வாறு பாடுதல் அறிவையும் மயக்கும் அருமையுடையதாம் எனவும், அவ் வருஞ்செயலைச் சிறிதும் சிதையாது செய்யவல்லவர் புலவர் எனவும் கூறியிருப்பதால், குன்றின்மேல் இட்ட விளக் கெனத் தோன்றி நிற்றல் காண்க.

இல்லறமாம் நல்லறம் மேற்கொண்ட இறப்ப உயர்ந்த தலைமகன் ஒருவன், அவ்வில்லறம் இனிது ஆற்றவேண்டின், அரும்பொருள் பலவும் வேண்டும்; அது உறங்கி இருப் பார்க்கு உண்டாகாது; தேடித் திரிவார்க்கே வாய்க்கும்; ஆகவே புறநாடு போந்து பொருள் கொண்டுவருக என்ற எண்ணம் ஒருபாலும், காலமோ இளமைக்காலம்; இன்பம் துய்ப்பதற்கு ஏற்றகாலம்; இக்காலம் கழிந்துவிடின், இல்லறம் இன்பம் பயத்தலும் இன்றாம்; பிரிவினைப் பொறுப்பவளும் அல்லள் நின் மனைவி; ஆகவே பொருள் எண்ணிப் பிரிதலை ஒழிக என்ற எண்ணம் ஒருபாலும் நின்று போர் செய்யக் கடமையே பெரிதாம் என்ற கருத் தினனாய்ப் பிரிந்து செல்லலாயினன்; ஆனால் அவன் நெஞ்சமோ, அவன் மனைவியிடமே செல்லத் தொடங்குவ தாயிற்று; எப்போதும் அவள் எண்ணமே அவன் உள்ளத்

தில் நிலைத்து நின்றது; இதனால் அவன் மேற்கொண்டு செல்வதும் தடையுற்றது; அந்நிலையே நிலைத்துநிற்கச் செல்லின், ஆண்டு அவனால் சென்ற வினையினைச் செவ்வனே முடித்தலும் இயலாது; வினைக்கண் அவனை நினைத்தலும் கூடாது; ஆகவே, வினை முடியுங்காறும் அவளை ஒருவாறு மறக்க எண்ணினான்; தன் எண்ணத்தை வெளியிட விரும்பும் அவன், தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! தலைவியைப் பிரிந்து தனித்துவருதல் நின்னால் இயலாது; ஆகவே, என்னோடு வாராது தலைவியிடமே இருந்துவிடு எனப் பலகாலும் கூறினேன்: அப்போது அதைக்கேளாது என்னோடு வந்த நீ, இப்போது என்னை மேலே போக விடாது இடைநின்று தடுக்கின்றனை; இப்போதும் கூறுகின்றேன்; தலைவியிடமே திரும்பிச் சென்று, அவள் துயர் போக்கும் துணையாக ஆண்டே இரு; வழியில் வருத்தம் ஏதும் எய்தாது இனிதே செல்க; ஆனால் ஒன்று வேண்டுகின்றேன்; ஆண்டுச் சென்ற பின்னர் என்னை மறந்துவிடாதே," என்று கூறும் முகத்தான் வெளியுறச் செய்தான். இத்தலைவனின் உள்ளத்தின் இயல்பை, உள்ளவாறு உணரத் துணைபுரிந்த புலவர்க்கு நன்றி செலுத்துவோமாக!

"அன்று அவண் ஒழிந்தன்றும் இலையே; வந்து நனி
வருந்தினை; வாழி! என்நெஞ்சே!
................................. .....
குன்றம், எம்மொடு இறத்தலும் செல்லாய், பின்நின்று
ஒழியச் சூழ்ந்தனையாயின், தவிராது
செல், இனிச் சிறக்க நின்உள்ளம்! வல்லே
மறவல் ஓம்புமதி எம்மே." (அகம்: ௧௯)

பழந்தமிழ் மக்கள் பொருள்தேடிக் கொணர்வான் வேண்டி நாடு பல கடந்து செல்வதை விரும்பி மேற்கொண்டனர் எனவும், அவர்தம் அம் முயற்சியினை, அவர் சுற்றத்தாரும் போற்றினர்; போகும் அவரை மகிழ்ந்து வாழ்த்தி வழிவிட்டனர் எனவும், சென்ற அவர்கள், ஆண்டுப் பெரும்பொருள் பெற்றவிடத்துப் பெரிதும் மகிழ்ந்

தனர் எனவும், இவ்வாறு பொருளால் உண்டாம் குறையினைப் போக்க மேற்கொள்ளும் இப்பணியினை நிறைவுடை இயக்கம் எனக்கொண்டு பாராட்டினர் எனவும் கூறும் புலவர் பொன்னுரைகள் இக்காலத் தமிழகத்திற்கு இனிய வழிகாட்டியாய் விளங்கித் துணை புரியுமாக!

"வேற்றுநாட்டு உறையுள் விருப்புறப் பேணிப்
பெறலருங் கேளிர் பின்வந்து விடுப்பப்
பொருள் அகப்படுத்த புகன்மலி நெஞ்சமொடு
குறைவினை முடித்த நிறைவின் இயக்கம்."

(அகம் : ருஉக)

## உரு. மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன்குமரனர்

புலவர் பெருமக்களுள் சேந்தன் என்ற பெயருடையார் பலர் உளர்; சேந்தன்குமரனர், சேந்தன் என்பாரின் புதல்வராவர். திருவாடானைத் தாலுக்காவில் மருங்கூர் என்ற பெயருடையதொரு ஊர் உளது; புலவர் பிறந்த மருங்கூர், இதுவோ அல்லது வேறோ அறிகிலம். மருங்கூர்ப் புலவர் பலர் வாழ்ந்த பெருமையுடையது என்பது மருங்கூர்கிழார் பெருங்கண்ணனர், மருங்கூர்ப் பாகைச் சாத்தன்பூதனர் என்ற பெயர்களால் அறியக்கிடத்தல் அறிக.

ஒரு பெண், தன் கணவன்மாட்டுப் பிறர் குறை காணுதல் கண்டு கடுஞ்சினம் கொண்டு, "என் காதலர், இவ்வுலகமே தலைகீழாக மாறித் தடுமாறும் நிலையுற்று அழிவதாயினும், தாம் கூறிய சொல்லை அழித்து, அதற்கு மாருக நடப்பவரல்லர்; ஆதலின் அவர்பால் குறைகாணுதல் ஒழிவீராக," எனக் கூறினள் எனப் பாடிப் பழந்தமிழ் மகளிர், தம் கணவர்மாட்டுக் கொண்டிருந்த அசைக்கலாகா நம்பிக்கையினை நன்கு எடுத்துக் காட்டினர்:

"அம்ம! வாழி தோழி! காதலர்
நிலம்புடை பெயர்வதாயினும், கூறிய
சொல்புடை பெயர்தலோ இலர்." (நற்: உஅக)

தானுற்ற காமநோய், தணிக்கும் தலைவர் இல்லாமையால் பெருகி வளர்ந்து, தன் வனப்பையும், தன்னையும் எரித்து அழிப்பதற்குக், கொல்லையில், கோவலர் சோருக்க, மரத்தடியில் மூட்டிய நெருப்பு அழிக்கப்பெருமையால், அம்மரத்தின் வேர்க்கட்டையினை எரித்து அழிப்பதை உவமையாகக் கூறினள் எனக் கூறும் புலவர் புலமைநலம் போற்றுதற்குரியதாம்:

"கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வேரடிப் போல
அருளிலேன் அம்ம! அளியேன் யானே." (நற்: உஅக)

## உகா. மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனார்

பழந்தமிழ் நாட்டார் சாத்தன், பூதன் போன்ற தெய்வப் பெயர்களைத் தம்முடைய இயற்பெயராகக் கொண்டு தங்கள் தெய்வ பக்தியினைப் புலப்படுத்தியுள்ளனர்; சாத்தன் பூதன் என்ற பெயர்களைத் தனித்தனியாகக் கொள்வதோடு, சாத்தன் பூதன் என்ற பெயர்கள் இரண்டினையும் இணைத்தும் மேற்கொண்டு வழங்கினர்; ஆதலின் இவரைச் சாத்தன் என்பாரின் மகனாகிய பூதனார் என உறவுகூறிக் காணல் பொருந்துவதாகக் கொள்ளார்.

இன்ப, துன்ப இயல்புபற்றி இவர் கூறுவன சிந்தித்தற்குரியன. இன்பமும், துன்பமும், புணர்வும், பிரிவும், நண்பகலும் நள்ளிரவும் போல இருவேறு இயல்புடையன; ஒன்றற்கொன்று மாறுபாடுடையன; நண்பகல் ஒளி, நள்ளிரவிற்கில்லை; நள்ளிரவின் இருள், நடுப்பகற்கு இல்லை; நண்பகல் உள்ளபோது நள்ளிரவு உறுதல் இல்லை. அதைப்போல், இன்பம் உள்ள இடத்தில் துன்பம் இராது; துன்பம் உள்ள இடத்தில் இன்பம் இராது; புணர்வு உள்ள வழி பிரிவு நிலையாது; பிரிவுள்ளவழி புணர்வு நிகழாது; புணர்ந்தவழி உண்டாம் இன்பம் பிரிந்தவழி உண்டாகாது; பிரிந்தார் பெறும் துன்பம் புணர்ந்தார் பெறுவதிலர் என இன்ப, துன்பம்; புணர்வு, பிரிவு; நடுப்பகல், நள்ளிருள் ஆகியவற்றின் இயல்பினை உணர்த்தும் திறம் உணர்க.

> " இன்பமும் இடும்பையும், புணர்வும் பிரிவும்
> நண்பகல் அமையமும் இரவும் போல
> வேறு வேறு இயலஆகி, மாறெதிர்ந்து
> உளஎன உணர்ந்தனை யாயின்." (அகம் : கூஉஎ)

வழிப்போவார் பின்னே தொடர்ந்து சென்று, அம்பேவிக் கொன்றமைக்கு வருந்தாது, அவரைக் கொன்றமையால் ஓர் அம்பை இழக்கவேண்டிவந்ததே என அம்பின் இழப்பு குறித்து வருந்தும் ஆறலை கள்வர் வாழிடம் என வழியருமையினை அவர் விளக்கும் திறம் வியத்தற்குரியது.

> "சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்
> கோல்கழிபு இரங்கும் அதர." (அகம் : கூஉஎ)

## உஎ. மாமலாடனூர்

செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலங்களுள் ஒன்று மலாடு; அது மலைநாடு என்ற சொல்லின் திரிபாம். அப் பன்னிரண்டு நிலங்களை, "தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி-பன்றி, அருவா, அதன் வடக்கு,—நன்றாய—சீத, மலாடு, புனல் நாடு செந்தமிழ் சேர்—ஏதமில் பன்னிருநாட்டெண்" என்ற வெண்பாவான் உணர்க. அந்நாட்டிற் பிறந்து பெருமையுற்றமையால் இவர் மாமலாடனார் என மதிக்கப்பெற்றார். இவர் பெயர் சில ஏடுகளில் மாமிலாடன் எனவும் காணப்படும். இவர் இயற்பெயர் தெரிந்திலது. இவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் இடம்பெற்றுளது.

பிரிந்து தனித்து இருந்தாரைத் துன்புறுத்தும் இம் மாலையும், தனிமை தரும் துயரும், நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் உறையும் நாட்டில் இல்லையே எனக் கூறும் தலைவியின் துயர்மிகு உள்ளத்தைத் தெளிவாக உணர்த்தியுள்ளார் புலவர்.

வீடுகளில் கூடுகட்டி வாழும் குருவிகள், வாடிய ஆம்பலின் பூப்போலக் குவிந்த சிறகுகளை உடையன; அவை முற்றத்தே உலரும உணவுப்பொருள்களை உண்டு, ஊர்ப் பொதுவிடத்தே குவிந்துகிடக்கும் எருக் குப்பைகளைக் குடைந்து விளையாடி, வீட்டு இறப்புகளில் கட்டிய கூடுகளில் தம் குஞ்சுகளோடு தங்கும் இயல்புடையன எனக் கூறுவது, குருவிகளின் வாழ்க்கைநிலையினைக் நன்று அறிந்துளார் என்பதை அறிவித்தல் காண்க :

"ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன
கூம்பிய சிறகர் மனைஉறை குரீஇ
முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து
எருவின் நுண்தாது குடைவன ஆடி
இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும், புலம்பும்
இன்றுகொல்? தோழி! அவர்சென்ற நாட்டே."

(குறுந் : ௪௬)

## உ அ. மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார்

மாறோக்கம், கொற்கையைச் சூழ்ந்ததொரு நாடு; மாறோகம் எனவும் வழங்கப்பெறும்; "புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளை மாறோக் கத்தார், இக்காலத்தும் பெண்மகன் என்று வழங்கும்" என்று, மாறோக்கத்தாரின், மாறுபடும் மொழியியல்பினை எடுத்துக்காட்டுவர் சேனாவரையர் (தொல். சொல்: கசுச). காமக்கணி என்றசொல் காமாக்ஷி என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பாம். பாலத்தனார் என்ற இயற்பெயரு டையராய இவர், சிறப்புக் குறித்து வழங்கும் 'ந' என்ற எழுத்தைப் பெயர்முன் பெற்று, மாறோக்கத்தே வாழ்ந்த காமக்கணியாரின் மகனாய்ப் பிறந்தமையால், மாறோக் கத்துக் காமக்கணி நப்பாலத்தனார் என வழங்கப்பெற்றார்.

பாலைநிலத்து மறவர், உடல் உழைத்து உயரிய வாழ் வினராய் வாழ எண்ணா இயல்பினராதலாலும், பொருள் தேடிப் போற்றிவாழும் பேரறிவு பெறாக் காரணத்தாலும், தமக்கு வேண்டும் உணவிற்கும் வழியின்றிப் பலநாள் உழல்வர்; அந்நிலையில் அவர்கள் தம்மினும் குறைந்த அறிவுடைய எறும்புகள், மாரிக்காலத்திற்கு உதவுக என மண்ணினுட் சேர்த்துவைக்கும் புல்லரிசியைக் கைப்பற்றி வாழ எண்ணும் இழிநிலையினராவர் என்று உழைத்துப் பொருள் சேர்க்கும் எறும்புகளின் வாழ்க்கை வனப்பினை யும், அவ்வுழைப்பின் பெருமையறியாமையால், எறும்பு களின் உணவைத் திருடித்தின்னும் மறவர்களின் மானம் கெட்ட வாழ்வையும புலவர் முறையே போற்றியும், பழித்தும் கூறியுள்ளார்:

> "கோடை நீடலின், வாடுபுலத்து உக்க
> சிறுபுல் உணவு நெறிபட மறுகி
> நுண்பல் எறும்பு கொண்டு அளைச்செறித்த
> வித்தா வல்சி வீங்குசிலை மறவர்." (அகம்: ௩௭௭)

உடல் உழைப்பின் பயனை உயர்த்திப் பாடிப் பாராட்டிய புலவர், படை மறவரால் பாழாகும் பேரூர்களின் பாழ்பட்ட நிலையினைப் பார்த்துப்பார்த்து மனம் பதைக்கின்றார். படைமறவர் பார்வையுட் படாமுன், மக்கள் வளம்கொழிக்கவும், ஆனிரைகள் பால் பயன் தருதலால் பல்வளம் செழிக்கவும் விளங்கிய அவ்வூரில், ஆண்டில் முதிர்ந்து நரைத்த தலையினராய முதியோர் தாம் மேற்கொள்ளலாம் பணியேதும் இலராய், ஊர் மன்றத்தேயுள்ள பொதியிலில், நடுங்கும் தம் தலைகவிழ்ந்து அமர்ந்து சூதாடி மகிழ்ந்திருப்பர். செல்வம் செழித்து விளங்கியதால் கவலையற்ற மக்களைக் கொண்டிருந்த இப்பேரூரில் பகைவீரரும், படைமறவரும் பலகாலும் புகுந்து புகுந்து அழித்து, ஆனிரை முதலாம் அவர் பொருள்களை யெல்லாம் கொள்ளை கொள்ளத் தொடங்கினமையால், மக்கள் ஆண்டு வாழவும் அஞ்சித் தாம் வேண்டும் வேற்றூர்க்குப் போய்விட்டனராகவே மக்கள் கூடிமகிழும் மன்றம் பாழுற்றது; முதியோர் இருந்து ஆடிமகிழ்ந்த பொதியில் கறையான் அரிக்க அழகுகெட்டது. இக்கொடுங் காட்சியினைக் கண்டு கண்டு கண்ணீர் விடுகிறார் புலவர் :

"வீங்குசிலை மறவர்,
பல்லூழ் புக்குப் பயன்நிரை கவரக்
கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து
நரைமூ தாளர் அதிர்தலை இறக்கிக்
கவைமனத் திருத்தும் வல்லுவனப் பழிய
வரிநிறச் சிதலை அரித்தலின் புல்லென்று
பெருநலம் சிதைந்த பேஎம்முதிர் பொதியில்
இன்னா ஒருசிறை"

(அகம்: ருஎஎ)

## உ௪௯. மிளைக் கந்தன்

மிளை என்பது, ஊரைச்சூழ அமைந்த காவற் காட்டிற்குப் பெயராம்; ஈண்டு, அக்காவற்காடு உடைமையால் சிறப்புற்ற மிளை என்ற பெயருடையதொரு ஊரைக் குறித்து நின்றது. மிளை, புலவர் பலரின் வாழ்விடமாம் பெருமை உடையது; மிளைகிழான் நல்வேட்டனார், மிளைப் பெருங்கந்தனார், மிளைவேள் தித்தன் என்ற அவ்வூர்ப் புலவர்களை நோக்குக. இவர் பாரியையும், அவனுக்குரிய பறம்பு மலையினையும், அம்மலையில் உள்ள சுனைகளையும் பாராட்டியுள்ளார்; பாரியின் பறம்புச் சுனையில் உள்ள நீர், தைத்திங்கள் காலத்தே தெளிந்து தீஞ்சுவை உடையதாம் எனப் புலவர்கள் பாராட்டுவது போன்றே இவரும் பாராட்டியுள்ளார்:

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின், வாக்கினிலே ஒளி உண்டாகும்," என்ப. உரை, செயல் ஆய இவ்விரண்டிற்கும் உள்ளமே காரணமாம்; உள்ளம் நன்றாயின், உரையும் நன்றாம்; செயலும் நன்றாம்; அது தீதாயின், இவையும் தீதாம். ஆகவேதான், ஒருபொருள் பற்றிய ஆராய்ச்சி எழுங்கால், அப் பொருளிடத்தே முன் கூட்டியே விருப்பு, வெறுப்பினைக் கொள்ளாதிருத்தல் வேண்டும்; அப்பொருளிடத்தே வெறுப்பு உண்டாயின், அதன் குணம் தோன்றாது; அதனிடத்தே விருப்பு உண்டாயின், அதன் குற்றம் தோன்றாது; ஒரு பொருளே, ஒரு காலத்தே இன்பமுடையவாத் தோன்றும்; அதுவே பிறிதொரு காலத்தே துன்பந்தருவதாத் தோன்றும். அப் பொருளிடத்தே அன்பு இருந்த காலத்தே, அது இன்பம் நிறைந்ததாகத் தோன்றும்; அதன் இடத்தே அவ் அன்பு குறைந்த காலத்தே அது துன்பம் நிறைந்ததாகத் தோன்றும். இக்கருத்தினைத் தோழியின் வாயில் வைத்து விளக்கியுள்ளார் நம்புலவர்.

தலைவன் ஒருவன் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு விட்டான். அதனால், அவன் பண்டேபோல் தன் மனைவி

பால் பேரன்பு காட்டுவதிலன்; தன் மனையில் வாழ்வதையும் வெறுப்பானாயினான்; அவன் ஒருநாள் தன் வீடுவந்து, தலைவியின் ஊடலைத் தீர்த்து உறவு உண்டாக்குவாயாக எனத் தலைமகளின் தோழியைவேண்டினான்; அதற்கு அவள் கூறுகிறாள், "ஐய! வேம்பின் காய் இயல்பாகவே பெருங் கைப்பு உடையது; அதைத் தலைமகள் தந்தாள் என்பது கொண்டு, அது இனிய வெல்லக்கட்டி போலும் இனிக்கிறது என்றனை; இது இவள்மாட்டு நீ பேரன்பு கொண்டிருந்த அக்காலத்தில்; இப்போது, இவள்மாட்டுக் கொண்டுள்ள அவ் அன்பு குறைந்துளது; இந்தக் காலத்தே இவள் நினக்கும் வேண்டும் நீரை விரும்பி அளிக்கிறாள்; அந்நீர், பாரியின் பறம்புமலைக்கண் உள்ள சுனைநீர், தைத்திங்கட் காலத்தே தெளிந்து தீஞ்சுவை உடையதாதலேபோல், தெளிவும், தீஞ்சுவையும் உடையதாயினும், அது உவர்ப்பும், வெப்பமும் நிறைந்த வேண்டாநீர் போலும் எனக்கூறி வெறுத்துச் செல்லுகின்றனை; இதுவோ நின் அன்பின் பரிசு?" உரைக்கும், செயலுக்கும், உள்ளமே காரணமாம் என்பது எத்துணைத் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டுளது நோக்குக!

"வேம்பின் பைங்காய் என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர்; இனியே,
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்,
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்,
ஐய! அற்றால் அன்பின் பாலே." (குறுந்: கசுசு)

---

## ௯0 மிளைப் பெருங்கந்தனார்

மிளை என்ற அவ்வூரில் கந்தனார் எனும் பெயருடையார் வேறு ஒருவரும் இருந்தமையாலும், அவரினும், இவர் யாதோ ஒருவாற்றான் உயர்ந்து விளங்கினமையாலும், இவர் மிளைப் பெருங்கந்தனார் என அழைக்கப் பெற்றுளார்; இவர் பாடிய பாக்கள் குறுந்தொகை ஒன்றில் மட்டுமே இடம்பெற்றுள்ளன; காமத்தின் இயல்பினைப் பல்வேறு கண்கொண்டு நோக்கும் இவர் போக்கு பெரிதும் பாராட்டற்குரியது. இரவிற்கு முன் வருவது மட்டுமே மாலை எனல் பொருந்தாது; விடியலும், பகலும்கூட மாலை தான் எனக் கூறுவது நயஞ்செறிந்து காணப்படுகிறது.

தான் காதலித்த ஒரு பெண்ணின்பால் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து வருந்தும் ஒருவனைக்கண்ட அவன் நண்பன், "நின்போலும் பெருந்தகையார் இவ்வாறு காம நோயுற்றுக் கலங்குதல் தகுதியுடைத்தன்று," என்று கடிந்துரைத்தானை நோக்கி, "நண்ப! உலகில் உள்ளார் அனைவரும், காமம் துயர் தருவது; காமம் தொல்லை விளைவிப்பது; காமம் கொள்ளத்தகாதது என்று எதற்கும் காமம் காமம் காமம் என இதையே பழிக்கின்றனர்; ஆனால் காமம் அவர்கள் கூறுவதுபோல் துயர் தருவதும் அன்று; நோய் தருவதும் அன்று; அது ஒரு காலத்தே மிகுதலும், ஒரு காலத்தே குறைதலும் இல்லை; அஃது ஒருவர்பால் புதிதாகத் தோன்றுவதும் அன்று; எல்லோரிடத்தும், எப்போதும் இருக்கும் இயற்கை உடைத்து; யானைபால் அடங்கியிருக்கும் மதம், அது குளகுத் தழையினைத் தின்றவுடனே, வெளிப்போந்து வினைசெய்தல் போல, ஒவ்வொருவரிடத்தும் படிந்துகிடக்கும் இக்காமம், காதலிக்கத் தக்காரைக் கண்டவிடத்துத் தானே வெளிப்பட்டு வினையாற்றும் இயல்புடைத்தாம்; அவ்வழியே, தன்னேரில்லாத் தலைவி ஒருத்தியைக்கண்ட யானும் காதல் உற்றுக் காமநோயால் வருந்துகின்றேன்; காமத்தின் இயல்பினை அறியாதார்போல நீயும் கழறுவது என்னோ?"

என்று கூறினான் எனப்பாடி, காமம் இயல்பானது; அது காலம் நேர்ந்தவழி காணத் தோன்றும்; அது கடிந்து ஒதுக்கவேண்டிய கழிபொருள் அன்று; போற்றிப் பேண வேண்டிய பெருமைக்குரியதே எனக் காமத்தின் பெருமையினைப் பாராட்டியுள்ளமை காண்க!

"காமம் காமம் என்ப; காமம்
அணங்கும் பிணியும் அன்றே; நுணங்கிக்
கடுத்தலும் தணிதலும் இன்றே; யானை
குளகுமென்று ஆள் மதம் போலப்
பாணியும் உடைத்து அது காணுநர்ப் பெறினே."
(குறுந் : கஙசு)

காமத்தின் இயல்பினைத் தலைவன் கண்கொண்டு கண்ட புலவர், அதை அவன் நண்பன் கண்கொண்டு காணும் முறை கழிபேருவகை தருவதாம்; பெருங்குணமும், பெருங்கவினும் உடையாளொரு பெண்ணைக் கண்டு காதலித்த தலைவன் ஒருவன், அவள்பால் கொண்ட காதலால் கவினிழந்து, கருத்திழந்து வாடுகின்றேன் எனக் கூறக் கேட்ட அவன் நண்பன், "என் ஆருயிர் நண்ப! காமம், கண்டாரை வருத்தும் கொடுமை உடையது; காமம் துயர்விளைக்கும் தீமை நிறைந்தது எனக் கூறுவார் உண்மையில் அறிவற்றவராவர்; உண்மையில் காமத்திற்கு அப்பண்பு இல்லை; கூறவேண்டுமானால் காமம் என்பதொரு பொருளே உலகத்தில் இல்லை; அது எல்லாம் அவரவர் உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சியின் விளைவே; காமம் என ஒன்று உண்டு என எண்ணுவார்க்கு, அது தோன்றித் துயர் தருதல் உறுதி; அப்படி ஒரு பொருளே உலகத்தில் இல்லை என உணர்வார்க்கு அக்காமத்தால் துயர் உண்டாதல் இல்லை. பற்கள் எல்லாம் தேய்ந்துபோன கிழப்பசு, தரையில் சிறிதே தலைத்திருக்கும் இளம்புல்லைக் கடித்துத் தின்ன இயலாது எனினும், அதை நாவால் தடவிப் பார்த்தே இன்புறும் இயல்புடையது; புல்லைத் தின்ன இயலாத அது, அப்புல்லைத் தடவுவதே, அதைத் தின்றாற்போல் கருதிச் சுவைப்பதைப் போன்றே, மக்கள் காமம் என

ஒரு பொருள் இருப்பதாக எண்ணியவுடனே அக்காமத்தால் துயர்உறுதல் போன்று தளர்வுற்று மெலிவர்; ஆகவே, நண்ப! காமம் என்பதொன்று உலகில் இல்லை; எல்லாம் அவரவர் கருத்தின் திரிபே; ஆதலின், கலங்கா உளம் உடையையாயின், அக்காமத்தால் துயர்உறல் நின்பால் உண்டாகாது," என்று கூறினான் எனப் பாடி, காமம், கருத்தின் கற்பனையே; காணக்கூடிய பொருளன்று எனக்கூறும் புலவர் பெருங்கந்தனாரின் பேருரை பெரிதும் சிந்தித்தற்குரித்தாம்

"காமம் காமம் என்ப; காமம்
அணங்கும் பிணியும் அன்றே; நினைப்பின்
முதைச்சுவல் கலித்த முற்றா இளம்புல்
மூதா தைவந்தாங்கு
விருந்தே காமம்; பெருந்தோ ளோயே!" (குறுந்: உ0ச)

காமத்தின் இயல்பினை விளக்கிய தலைமகன், அதை விளக்கக் குளகு மேய்ந்த யானையின் நிலையினை உவமையாக எடுத்துக்காட்டியதற்கும் ஏற்ப, அதை வேறுவகையால் விளக்கப் புகுந்த அவன் நண்பன் அதை விளக்க, முற்றாத இளம்புல்லை மேயமாட்டாத பல்லிழந்த கிழப்பசுவின் நிலையினை உவமையாக மேற்கொண்டான் எனப்பாடி ஓர் ஒற்றுமை கண்ட புலவன் புலமை நயம் நவலுந்தொறும் நயம் பயந்து நிற்றல் காண்க!

ஞாயிறு மறைய, செவ்வானம் தோன்ற, முல்லை மலர்ந்து மணங் கமழுவரும் காலமே மாலையாம் என உலகோர் கூறுவர்; மாலைக்காலம் காதலரைப் பிரிந்து தனித்திருப்பார்க்குத் துயர்தரும் இயல்புடையது; ஆகவே மாலைக்காலம் என்பதற்குத் துயர்தரு காலம் என்றே பொருள் கொள்ளுதல்வேண்டும்; காதலரைப் பிரிந்திருப் பார்க்கு இன்பந்தரும் காலம் எதுவும் இல்லை; எக்காலமும் அவர்க்குத் துன்பமே; விடியற்காலமும் அவர்க்குத் துயர் தரு காலமாம்; பகற்காலமும், துயர்தரு காலமாம்; அவர்க்கு எல்லாக் காலமும் துயர்தரு காலமே ஆதலின்,

அவர்க்கு மாலைக்காலம் என்பதொரு தனியான காலம் இல்லை; எல்லாம் மாலைக்காலமே; விடியற்காலமும் மாலைக் காலம்; பகற்காலமும் மாலைக்காலம். இவ்வாறு மாலைக் காலத்திற்குப் புதுப்பொருள் காணும் புலவரின் அறி வுடைமை கண்டு அகமகிழ்வோமாக!

"சுடர்செல் வானம் சேப்பப், படர்கூர்ந்து
எல்அறு பொழுதில் முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கி யோரே;
குடுமிக் கோழி, நெடுநகர் இயம்பும்
பெரும்புலர் விடியலும் மாலை;
பகலும் மாலை; துணை இலோர்க்கே."

(குறுந்: உ௩௪)

## ௯௩. மிளைவேள் தித்தன்

மிளை என்ற ஊரில் வாழ்ந்த வேளிர்குடியிற் பிறந்தவர்; தித்தன் எனும் இயற்பெயருடையவர் என்பதல்லது இவர் வரலாறு குறித்து வேறு எதுவும் அறிதற்கில்லை. ஊர் மன்றத்தின்கண் உள்ள பொற்றைக்கல்மீது காந்தள் மலர்கள் பல மலர்ந்து தோன்றும் காட்சி, போர் செய்த யானையின் முகத்தின்கண், அப்போரால் உண்டாய புண்கள் போலும் எனக் கூறிய உவமை, அவர் செய்யுட்கு அணிசெய்து நிற்றல் காண்க:

> "பொருத யானைப் புகர்முகம் கடுப்ப
> மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்
> ஒண்செங் காந்தள் அவிழும்." (குறுந்: ௨௮௪)

ஒரு தலைவன், தான் காதலித்த ஒரு தலைவியை மணத்தற்கு வேண்டும் பொருளை ஈட்டி வருவான் எண்ணி வேற்றூர் சென்றிருந்தான்; சென்றவன் விரைவில் வந்திலன்; அதனால் அவள் வருந்தினாள்; அவன் கூறிச் சென்ற காலத்துத் தவறாது வந்து மணப்பனோ? அல்லனோ என அஞ்சினாள்; அவன் அவ்வாறு வந்து மணவாவிடின், ஊரிற் பெரும்பழிச்சொல் உண்டாம் என எண்ணியும் இரங்கினாள்; ஊரில் ஒரு பெண்ணிற்கு உண்டாம் நன்மையும் தீமையும் அவ்வூரார் அனைவர்க்கும் உண்டான நன்மையும், தீமையுமாம்; ஊரார்க்கு அவ்வறிவு இருக்குமாயின், அவர்கள், அவன் மணவாமையால் அவளைப் பழிகூற எண்ணார் என்பதை அறிவாள் அவள் தோழி; அறிந்த அவள், அவன் வாராமையால் அலர் உண்டாம் என அஞ்சிய தலைமகளை நோக்கி, "தோழி! ஊரார் அறிவற்றவரல்லர்; ஆதலின், அவன் செய்த தவறு குறித்து அவர் நம்மை ஏசுவதும் செய்வரோ? செய்யார்; ஆகவே ஆற்றியிரு," எனக் கூறினாள் எனப் பாடி, ஊரார் கடமை இது என உணர்த்தியுள்ளார் புலவர்.

> "நாடன் அறவனாயினும், அல்லனாயினும்
> நம் ஏசுவரோ? தம்மிலர் கொல்லோ? (குறுந்: ௨௮௪)

## ௯௨. முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

தும்பியின் சிறிய வடிவினையும், கரிய நிறத்தினையும் சிறப்பித்துப் பாடிச் சிறுகருந்தும்பியார் எனப் பெயர் பெற்ற நம் புலவர் பிறந்த ஊர் சோழநாட்டில் உள்ள முகையலூர் என்பதாம். முகையலூர், இடைக்காலத்தே 'முகலாறு' என வழங்கி இப்போது 'மொகலார்' என வழங்குகிறது என்று கூறுவர் ஒளவை. துரைசாமிப் பிள்ளையவர்கள். இவர் வல்லார் என்ற ஊரில் வாழ்ந்த பண்ணன் என்ற பெயருடைய பெருங்கொடையும், அருந் திறலும் உடைய வீரன் ஒருவனைக் கண்டு வாழ்த்தியும், அவன் இறந்து நடுகல்லானபின்னர்க் கலங்கிக் கையறுநிலை பாடியும் பாராட்டியுள்ளார். இப் பண்ணன் வேறு; சிறு குடி கிழான் பண்ணன் என்பான் வேறு.

பண்ணன் இறந்தமையால் பரிசிலர் பெறும் செல்வமே அன்றி, வேந்தர் இவன் படைத்துணை பெற்றுப் பெறும் வெற்றிச் செல்வமும் மறைந்தது எனப் பாராட்டுகிறார் புலவர்.

> "கல்லாயினையே கடுமான் தோன்றல்!
> வானேறு புரையும்நின் தாள்நிழல் வாழ்க்கைப்
> பரிசிலர் செல்வம் அன்றியும், விரிதார்க்
> கடும்பகட்டு யானை வேந்தர்
> ஒடுங்கா வென்றியும் நின்னொடு செலவே."
>
> (புறம்: ௨௬௫)

மன்றத்தே நின்று, மனையிடத்தே வீழ்ந்த விளாம் பழங்களை, மறத்தி பெற்ற மகனும், காட்டானைக் கன்றும் கலந்தெடுத்து உண்ணும் அழகிய காட்சியினைப் புலவர் காட்டுகின்றார்:

> "மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
> கருங்கண் எயிற்றி காதல் மகனொடு
> கான இரும்பிடிக் கன்றுதலைக் கொள்ளும்."
>
> (புறம்: ௧௮௧)

## ௩௩. முக்கல், ஆசான் நல்வெள்ளையார்

முக்கல் என்பதோரூர்; அது யாண்டுளது என்பது புலப்படவில்லை. அவ்வூரிற் பிறந்த நல்வெள்ளையார் அந்தணர் குலத்து வந்தவராதலின் ஆசான் என அழைக்கப்பெற்றுள்ளார்.

வரைவிடை வைத்துப் பொருள் கருதிப் பிரிந்துபோய தலைமகன், விரைந்து வந்திலனாதல் அறிந்து வருந்திய தலைமகள், என்னை மணந்து மக்களைப்பெற்று மகிழ்ந்து வாழுங்கால், அம்மனையறம் மாற்றாரும் போற்ற மதிக்கப் படுதற்காம் பொருள்தேடிப் போகவேண்டிய அவர், இன்னமும் வரையாது வருத்துகின்றனரே என வருந்திய தலைமகள், அவன் கடமையினை விளங்க உரைக்காது, அவன் நாட்டுக் கடற்றுறைகள் சூலுற்றுக் கிடக்கும் தம் பெடைகளைக் கரைக்கண் வளர்ந்துகிடக்கும் கொடிகளுக்கு இடையிடையே காணப்படும் வெண்மணல்மீது இருக்கச்செய்து விட்டு, கழிநோக்கிச் சென்று நீருள் மூழ்கி மூழ்கித் தம் பெடைக்கும் தமக்கும் வேண்டும் அயிரை மீன்களைத் தேடும் கடற்காக்கைகளை உடையது என்று கூறிக் குறித்த பொருளை விளங்கவைத்துள்ளாள். அவள் கூற்றினைப் பாடிய புலவர், கடற்கரைகளில் பெடைகள் அமரும் அம்மணல் திட்டுக்கள், ஆங்கு நீராடவரும் நோன்பு மேற்கொண்ட மகளிர் தாம் இருத்தற்காக அக்கொடிகளுக்கு இடையிடையே, அவற்றைச் சிறிது அழித்துச் செய்தமையால் உண்டாம் எனவும் உரைத்துள்ளார்:

> "கடலம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்,
> படிவ மகளிர் கொடிகொய்து அழித்த
> பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறைக்
> கருஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
> இருஞ்சேற்று அயிரை தேரிய, தெண்கழிப்
> பூவுடைக் குட்டம் துழவும் துறைவன்" (நற்: உஎஉ)

## ௩௪. முப்பேர் நாகனார்

முப்பேர் என்பது ஓரூர்; பாண்டிநாட்டில் திருவாடானையை அடுத்து முப்பையூர் என்றோர் ஊர் உளது; இம் முப்பையூரே பழந்தமிழ்க் காலத்து முப்பேரூராம் எனக் கருதுவர் சிலர். இவர் பாடிய பாலைத்திணைப் பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது. அது, பிரிவிடை மெலிந்த தலைமகள் கூற்றமைய வந்துளது.

பருவத்தே பயிர்செய்தல் வேண்டும் என்ப; பயிர் செய்யவேண்டிய பருவத்தே பயிர்செய்யத் தவறினார், மீண்டும் பயிர்செய்து வாழ்தல் இயலாது; மக்கள் வாழ் நாளில் பல்வேறு பருவநிலைகள் உண்டாம்; அவற்றுள் ஒன்று இளமை; அவ்விளமைப் பருவத்திற்கு எனச் சில கடமைகள் உண்டு. அவற்றை அப்பருவத்திலேயே செய்துமுடித்தல் வேண்டும். அப்பருவத்தே அதைச் செய்யாது விட்டார், அவ்விளமைப் பருவம் கழிந்த பின்னர் அதைச் செய்தல் இயலாது; அவ்விளமைப்பருவம் மீண்டும் ஒருகால் வருதல் இல்லை; இந்த உணர்வு உலகில் உள்ளார் அனைவர்க்கும் உண்டாயின், உலக ஒழுங்கு தவறாது என்பதை உணர்ந்த புலவர் அதை எடுத்துக்கூறி அறிவித்துள்ளார். மேலும், நாளை நடப்பன யாவை என்பதை எவரும் அறியார்; நாளைக்கு வருவது துன்பமா? அல்லது இன்பமா? என்பதையோ, இன்று உள்ள இன்ப வாழ்வோ அல்லது துன்ப வாழ்வோ இன்னும் எத்தனை நாள் நிலைக்கும் என்பதையோ எவரும் அறியார்; அவ்வறி வின்மையே மக்களுக்கு முயற்சியை உண்டாக்குகிறது; நாளை நடப்பதை அறியும் அறிவு மக்களுக்கு உண்டாகி விடின் உலகம் வளராது; ஆகவே, அவர்க்கு அவ்வறி வின்மை துணைசெய்கிறது என்பதையும் புலவர் அறிந்து கூறியுள்ளார்.

> "முதிர்ந்தோர் இளமை ஒழிந்தும் எய்தார்;
> வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை." (நற்: ௩௧௪)

## ௩௫. முரஞ்சியூர் முடிநாகராயர்

"அவருள் தலைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாக ராயரும், நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞாற்று நாற்பத் தொன்பதின்மர் என்ப" என்ற களவியல் உரையால், முரஞ்சியூர் முடிநாகராயர் தலைச்சங்கப் புலவராவர் என்பது புலனாகும். முடிநாகனார் என்ற பெயர், பிற்காலத்து ஏடெழுதினோரால் நாகராயர் எனப் பிறழ எழுதப்பட்டது என்பர் சிலர்; முடிநாகராயர் என்பதற்கு முடியுடைய நாகர்குலத் தலைவர் என்று பொருள்படும் ஆதலின், இவர் நாகர் என்ற பழங்குடிகளின் தலைவராவர் என்றும் கூறுவர்.

முரஞ்சியூர் முடிநாகராயர் பாராட்டிய பேரரசன், சேரமான் பெருஞ்சோற்று உதியன்சேரலாதன் என்ற புகழ்மிக்க சேர வேந்தனாவன். இவன் பாரதப் பெரும் போரில் பாண்டவர், துரியோதனாதியர் ஆய இருவகையார் சேனைக்கும் போர் முடியுங்காறும் உணவளித்துப் போற்றினான் எனப் புகழப்பெறுவான். இச்செயலை முரஞ்சியூர் முடிநாகராயரும்,

> "அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
> நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
> ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
> பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!"
>
> (புறம் : ௨)

பெருஞ்சேரலாதன்பால், பேரரசர்பால் அமையலாம் பண்புகள் எல்லாம் ஒருங்கே அமைந்திருப்பது கண்டு, புலவர் அகம்மிக மகிழ்கிறார்; அவன் பிழை பொறுக்கும் பண்புடையவன்; வினையொன்று ஆற்றத் தொடங்குவனாயின், எண்ணவேண்டுவன எல்லாம் எஞ்சாது எண்ணும் அஃகி அகன்ற அறிவுடையவன்; எதிர்த்தார் எவரையும் தாங்கிநிற்கவல்ல பேராற்றலும், பெருந்திறலும் உடையவன்; அழித்தற்குரியாரை அழிக்கத் தொடங்கின் அடியற அழிக்கும் இயல்புடையவன்; அடைந்தார்தம் துயர்போக்கி ஆட்கொள்ளும் அருட்குணமுடையவன்.

இப்பண்புகள் வேறு எவர்மாட்டும் அமையலாகா அளவு அவன்பால் அமைந்திருக்கக்கண்ட புலவர், பொறுமை, அகலம், வன்மை, அழித்தல், அருளல் ஆகிய பண்புகளின் நிலைக்களங்களாகிய நிலம், ஆகாயம், காற்று, தீ, நீர் ஆகிய வற்றோடு அவன் ஒத்தவனவன் என்று கூறி, ஐம்பெரும் பூதத் தியற்கையினையும் அவை ஒவ்வொன்றும் முறையே பெற்றுள்ள அப்பண்புகள் அனைத்தினையும் தான் ஒருவனே பெற்று விளங்கும் அவன் பெருமையினையும் ஒருங்கே கூறிப் பாராட்டியுள்ளார் ;

> " மண் திணிந்த நிலனும்,
> நிலன் ஏந்திய விசும்பும்,
> விசும்பு தைவரு வளியும்,
> வளித்தலைஇய தீயும்,
> தீ முரணிய நீரும் என்றாங்கு
> ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
> போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்,
> வலியும், தெறலும், அளியும் உடையோய்!" (புறம் : உ)

பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் இவ்வாறு குணங்களால் நிறைந்து நின்றமையால், தமிழகம் முழுதும், அவன் ஆட்சிக்குட்பட்டுக் கிடந்தது; கிழக்கு, மேற்கு ஆகிய இருபெரும் கடல்களை எல்லையாகக் கொண்ட நாடு முழுதும் அவன் அரசே நடைபெற்றது என்பதை அறிவிக்கும் புலவர், "அரசே! கீழ்க்கடலும் நினதே; மேலைக் கடலும் நினதே! ஆதலின், ஞாயிறு தோன்றுவதும் நின் கடலிலேயே; அவன் மறைவதும் நின் கடலிலேயே," என்று அழகுறக் கூறியுள்ளார்.

> " நின்கடல் பிறந்த ஞாயிறு, பெயர்த்தும் நின்
> வெண்தலைப் புணரிக் குடகடல் குளிக்கும்." (புறம் : உ)

"பழுது எண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர், எழுபது கோடி உறும்" என்ப ஆதலின், அரசன் எத்துணை தான், ஆற்றலும், அறவுள்ளமும் உடையனாயினும், அவன் ஆட்சிப் பொறுப்பினை ஏற்று நடத்தும் அமைச்சர் பால், அக்குணங்களுக்கு மாறான தீக்குணங்கள் நிறைந்து நிற்குமாயின், அவ்வரசும், அரசனும் அழிதல் உறுதியாம்

ஆதலின், அரசர் தம் அமைச்சரை, ஆன்றமைந்த சான்றோராகக் கொள்ளுதல் வேண்டும்; அரசியலின் அடிப்படை உண்மையாகிய இதை உணர்ந்த புலவர் முரஞ்சியூர் முடிநாகராயர், பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் கேடின்றி வாழவேண்டி, "அரசே! நின் அமைச்சர் என்றும் நெறி பிறழா நீர்மையராதல் வேண்டும்; பால் இன்சுவை அளிப்பது; அது அச்சுவைமாறி புளிச் சுவை தரும் காலம் வருமாயினும், நின் அமைச்சர் அறநெறி பிறழ்தல் ஆகாது; பகல் ஒளிதருவதல்லது இருள் காட்டாது; அதுவும் தன் இயல்பு மாறும் காலம் வரினும் நின் அமைச்சர் அறம் பிழைத்தல் ஆகாது; வேதநெறி என்றும் விழுமிய நெறியே காட்டும் என்ப; அது, தீ நெறிகாட்டும் தீமையுடைத்தாய காலம் வந்துறினும், நின் அமைச்சர் நன்னெறி நீங்கல் கூடாது; அன்னாரை அமைச்சராகக் கொண்டு அரசியல் நடாத்துக," என்று அறிவுரை கூறினார்; என்னே அவர் அருள் உள்ளம்!

"பாஅல் புளிப்பினும், பகல் இருளினும்,
நாஅல் வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுது சேண் விளங்கி
நடுக்கின்றி நிலியர்." (புறம்: ௨)

முரஞ்சியூர் முடிநாகராயர், இமயமும், பொதியமும் சென்று, ஆங்கே, அந்தணர், தம் அந்திக்கடனாற்ற எடுத்த, முத்தீ விளக்கொளியில், பெண்மான், தன் சிறிய தலையினையுடைய மறியோடு மகிழ்ந்து உறங்கும் காட்சியினைக்கண்டு, தாம் கண்டு களித்த அக்காட்சியைப் பிறர்க்கும் கவினுறக் காட்டுகிறார்:

"சிறு தலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற் கோட்டு இமயமும், பொதியமும்" (புறம்: ௨)

இப்பாடற் பொருளால், புலவர், ஐம்பெரும் பூதங்களின் இயல்புணர்ந்தவர் என்பது புலனாதல் காண்க.

## ௩௬. முள்ளியூர்ப் பூதியார்.

பூதி, விபூதி, திருநீறு என்னும் பொருளுடையது; திருநீறு சைவ சமயத்தார்க்குரிய சமயக்குறியாதலின், இவர் சைவசமயம் சார்ந்தவர் என்ப; இவர் பிறந்த முள்ளியூர் பற்றி ஒன்றும் தெரிந்திலது; இவர் பெயர் சில ஏடுகளில் முன்னியூர் வழூதியார் எனவும் வழங்குகிறது;

முள்ளியூர்ப் பூதியார், நன்னன் என்பானையும், அவன் மலையையும் எடுத்துக் கூறிச் சிறப்பித்துள்ளார். நன்னன் சேரர்குலத் தொடர்புடையவன்; வேளிர் வழி வந்தவன்; கொண்கான நாடாண்டவன்; ஏழில் மலையும், பாழிச் சிலம்பும், பாரமும் அவனுக்கு உரியவை; பாடி வரும் பாணர் முதலியோர்க்குப் பகைவரை அழித்துப் பெற்ற பெரும்பொருளை, வந்தார் தம் வரிசையறியாதே வாரி வழங்கும் வள்ளியோன்; பேராற்றலும், பேராண்மையும் உடையவன். இத்துணைச் சிறப்புடைய நன்னன் அளிக்கும் இனிய நறவினையும், அவன் பெற்றுள்ள தேர்ப்படையின் பெருமையினையும், விண்ணைத்தொடும் கொடு முடிகளையும், பொன்படு பாறைகளையும் உடைய மலையினையும் பாராட்டியுள்ளார் புலவர் :

> "இன்களி நறவின், இயல் தேர் நன்னன்,
> விண்பொரு நெடுவரைக் கவாஅன்
> பொன்படு மருங்கின் மலை" (அகம் : ௧௭௩)

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றலும், கேடுற்ற கேளிரைத் தாங்கிப் போற்றலும் இல்லறத்திருப்பார்க்கு இன்றியமையாக் கடமைகளாம்; அக்கடமையினை வழுவாது ஆற்றி வெற்றி கோடல் பெரும் பொருள் உடையார்க்கே இயலும்; அப்பெரும் பொருள் சேர்த்தல் உள்ளத்தே ஊக்கம் கொண்டு ஓயாது உழைப்பவர்க்கே இயலும்; உடலாலோ அன்றி உள்ளததாலோ உழைத்தலின்றி உட்கார்ந்திருப்பார்க்குப் பெரும் பொருள் சேர்த்தல் இயலாது; இல்லிருந்து நல்லறமாற்றும் ஆடவர், இவ்வறிவுவரப் பெற்

ணுராயின், அந்நிலையில், அவர் தம், பிரிதற்கரிய மனைவியரையும் பிரிந்து சென்று பொருள் தேடிக் கொணர்வர்; அவ்வாறு சென்று அரும் பொருள் கொணர்ந்து அறனாற்றி வாழ்வார் பீடும் பெருமையும் பெற்றுச் சிறப்புறுவர்; இந்த அரிய ஓர் அறவுரையினைப் புலவர் முள்ளியூர்ப் பூதியார், தோழியொருத்தியின் வாயில் வைத்து விளங்க உரைத்து, உலகமக்கட்கு ஒப்பற்ற வழிகாட்டியுள்ளார் :

> " அறந்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த
> கேளிர் கேடுபல ஊன்றலும், நாளும்
> வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல் எனச்
> செய்வினை புரிந்த நெஞ்சினர் "

(அகம் : கஎ௩)

## ௯எ. மோசி கண்ணத்தனார்

மோசி என்பது பாண்டிநாட்டில், பரமக்குடி வட்டத்தில் உள்ளதோர் ஊர்; இஃது இக்காலை மோசிகுடி என வழங்குகிறது. இவ்வூர், மோசிக் கரையனார், மோசி கீரனார், மோசி கொற்றனார், மோசி சாத்தனார் போன்ற பல புலவர்களைப் பெற்றமையால் பெற்ற பெரும்புகழ் உடையது. அப்பேரூரிற் பிறந்த பெருமை உடையார் நம்புலவர் கண்ணத்தனார்: இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

பொருள்வயிற் பிரியக் கருதும் தலைமகனை நோக்கி, "ஐய! ஒன்று பிரிந்த காலத்து மற்றொன்று அப் பிரிவினைப் பொறுத்திருத்தல் ஆற்றாது இறந்துபடும்; யானும், பிரிந்து தனித்திருந்து துயர்உறும் பொல்லா வாழ்க்கையினை வேண்டேன்; மேலும், தனித்திருந்தார்க்குத் துயர் தருவதையே தன் இயல்பாகக்கொண்ட பருவமும் வந்துவிட்டது; ஆதலின் அன்ப! அகன்று உறைய எண்ணற்க!" என வேண்டினாள் தலைமகள் ஒருத்தி என்ற பொருள் கொண்டது அப்பாட்டு.

> " ஒன்றில் காலை அன்றில் போலப்
> புலம்பு கொண்டுறையும் புன்கண் வாழ்க்கை
> யானும் ஆற்றேன்; அதுதானும் வந்தன்று;
> நீங்கல் வாழியர் ஐய!" (நற்: கஉ௪)

புலவர்காலத் தமிழர்கள், வெள்ளியை மூசையில் இட்டு உருக்கும் தொழில் அறிந்து இருந்தனர் என்பதை, " வெள்ளி உருக்குறு கொள்கலம் கடுப்ப," என்ற தொடர் விளக்குவது காண்க.

> " முகைவீ அதிரல் மோட்டுமணல் எக்கர்
> நெளவி நோன்குளம் பழுந்தென வெள்ளி
> உருக்குறு கொள்கலம் கடுப்ப விருப்புறத்
> தெண்ணீர்க் குமிழி இழிதரும்
> தண்ணீர் தனைஇ நின்ற பொழுதே." (நற்: கஉ௪)

## ௩௮. மோசி கரையனார்

இவர், மோசி என்ற ஊரில் பிறந்தவர்; கரையனார் எனும் இயற்பெயர் உடையவர்; இவர்க்கு இப்பெயர் வரக் காரணம் யாது என்பது புலப்படவில்லை. இவர் பாடிய பாட்டொன்று, நெடுந்தொகை மணிமிடை பவளத்தில் இடம் பெற்றுளது. இவர் கூறும் நெய்தல் நிலத்து மாலைக் காட்சி கவினுடையது.

ஞாயிற்று மண்டிலம் வெப்பம் தணிந்தது; மலைகள் பொன்னிறம் பெற்றன; வண்டுகள் மலர்களைச் சுற்றி ஒலித்தன; கடற்சோலைகளில் நாரைகள் ஒலித்தன; கரையில் ஓடி ஆடிய ஞெண்டுகள் வளைக்குட் புகுந்தன; அலைகள் ஓய்ந்து ஒலி அடங்கின; மீன் படகுகள் தம்தொழில் ஒழிந்தன; வானம் செந்நிறம் பெற்றது; துணையொடு கூடிய அன்றிற் பறவைகள் பனைமரத்து மடலுள் புகுந்து தங்கின; மணம்நாறும் கழிமலர்கள் கூம்பின; பொழில் சூழ்ந்த மனைகளின் மன்றத்தே உள்ள புன்னைகள் பொன்னிற மலர் பூத்தன; பகற்பொழுது சிறிது சிறிதாகக் குறைய, இரவு வந்துற்றது என அவர் கூறும் அந்திக் காலத்து அழகினை நோக்குக!

> "மண்டிலம் மழுக, மலை நிறம்கிளர,
> வண்டினம் மலர் பாய்ந்து ஊத, மீமிசைக்
> கண்டல் கானல் குருகினம் ஒலிப்பக்,
> கரை ஆடு அலவன், அளை வயின் செறியத்,
> திரை பாடுஅவியத், திமில் தொழில் மறப்பச்,
> செக்கர் தோன்றத், துணைபுணர் அன்றில்
> எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்,
> கழிமலர் கமழ்முகம் கரப்பப், பொழில்மனைப்
> புன்னை நறுவீ, பொன்னிறம் கொளாஅ,
> எல்லை பைப்பயக் கழிப்பி எல்உற." (அகம்: ௨௬0)

## ௩௪. மோசி கீரனர்

பண்டைத் தமிழகத்தில் கீரனர் என்ற இயற்பெய ருடையார் பலராவர்; இவர் மோசிநகரிற் பிறந்தவராதலின், மோசிகீரனர் என அழைக்கப் பெற்றுளார். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, கொண்கானங்கிழான், நன் னன், ஆய், அரலைக்குன்று கிழவோன் ஆகியோரைப் பாராட்டியுள்ளார்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, அரிசில் கிழாராலும் பாராட்டப்பெறும் பெரும்பேறுடையான் என்பதறிந்த புலவர் மோசிகீரனர் அவன் அரசவை நோக்கிச் சென்றார்; அவர் சென்றபோது அரசன் ஆண்டு இலன்; அவனைக் காணுத புலவர் அவ்வரண்மனையினைச் சுற்றிவருங்கால், ஆண்டு ஒருபால், அழகிய கட்டில் ஒன்று இருக்கக்கண்டார்; அது, அரசனின் வெற்றி முரசிற்கு உரிய கட்டிலாம்; முரசு நீராடிவருதற்குக் கொண்டு செல்லப்பட்டுள்ளமையால், அக்கட்டில் வறிதே கிடந்தது; அவ்வழகிய கட்டிலேயும், அதன்மீது விரிக்கப் பெற்றிருக் கும் மெல்லிய மலர்களால் ஆகிய படுக்கையினையும் கண் டார் புலவர்; அவர்க்கு, அது முரசுகட்டில் என்பது தெரியாது; மேலும், வழிநடை வருத்தமும் உடையராவர்; அதனல் அதன்மீது கிடந்து நன்கு உறங்கிவிட்டார்; சிறிது கழித்து ஆண்டுவந்த அரசன், தன் முரசுகட்டில் மீது ஒருவர் படுத்துறங்கக் கண்டான்; முரசு, அரசனின் வேறன்று; முரசிற்குச் செய்யும் சிறப்பு, அரசர்க்குச் செய்யும் சிறப்பு; அதற்கு உண்டாம்பழி, அரசற்கு உண் டாம் பழி என்பது பழங்காலப் பண்பு; ஆதலின் முரசு கட்டிலில் படுத்து உறங்குவது, அரசு கட்டிலில் படுத் துறங்குவதுபோலும் பெருங் குற்றமாம்; அக் குற்றம் புரிந்தார்க்குக் கொலையே தண்டமாம். ஆயினும், தன் முரசுகட்டிலில் படுத்து உறங்குவார், பெரும்புலவராவர் என்பதை அரசன் அறிவான்; புலவர், நாடாளும் தன்னி னும் உயர்ந்தவராவர் என்பதை உணர்வான் அவன்;

ஆதலின், அவர் ஆண்டு உறங்குவதால் குற்றம் இன்று என எண்ணினன்; ஆகவே, பிறர் யாரேனும் படுத்துறங் கின், வாளெடுத்துத் தலைவாங்கவேண்டிய அவன், வெண் சாமரையினை எடுத்து, அவர் இனிதே உறங்குமாறு, எழும் வரை தானே வீசி நின்றான்; உறங்கி எழுந்த புலவர், தாம் செய்த பெரும்பிழையினையும், அது கண்டு ஒறுக்கவேண்டிய அரசன், அன்புகொண்டு கவரி வீசுவதையும் கண்டார்; அரசன்பால் அவர்க்குப் பெருமதிப்பு உண்டாயிற்று; அரசனின் தமிழ்ப்பற்று அவர்க்குப் புலனாயிற்று; உடனே, "அரசே! நின் முரசுகட்டில் ஏறிய என்னை இரு துண்டங்க ளாக வெட்டி வீழ்த்தாதுவிட்ட அச்செயல் ஒன்றே போதும், நின் தமிழ்ப்பற்றினை விளக்க; நீ அம்மட்டோடு நின்றாய் அல்லை; யான் உறங்கி எழுங்காறும் கவரி கொண் டன்றோ வீசி நின்றனை; நின் பெருமையினை என்னெனப் புகழ்வேன்! இவ்வுலகத்தே புகழ்தரு செயல் புரிந்தோர்க் கல்லது, உயர்நிலை உலகமாம் உம்பர் உலகத்தே இடம் கிடைத்தல் இல்லை எனச் சான்றோர் கூறக் கேட்டதன் பயனோ, செயற்கரும் இச்செயற்குக் காரணம்?" என வியந்து பாராட்டுவாராயினர்; என்னே புலவர் பெருமை! என்னே அவன் தமிழ்ப்பற்று!

"முரசம்
மண்ணி வாரா அளவை, எண்ணெய்
நுரை முகந்தன்ன மென்பூஞ் சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்கும்நின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும் நல்தமிழ் முழுது அறிதல்;
அதனொடும் அமையாது, அணுகவந்து, நின்
மதனுடை முழவுத் தோள்ஓச்சித் தண்ணென
வீசி யோயே; வியலிடங் கமழ
இவண் இசை உடையோர்க் கல்லது, அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசில்! நீ ஈங்கிது செயலே." (புறம்: ௫௦)

பிற்காலத்தே கொங்கணம் என மருவி வழங்கும் கொண் கானம் என்றொரு நாடு உண்டு; அது இன்றைச் சேலம், கோவை மாவட்டங்களின் கீழ்ப்பகுதிகளைக் கொண்டிருந் ததாம். இந்நாடு பொன்வளம் சிறந்தநாடு எனப் புலவர் களால் போற்றப்பட்டது; "பொன்படு கொண்கானம்" எனப் பாலைபாடிய பெருங்கடுங்கோ பாராட்டுவதும் காண்க. இக் கொண்கான நாட்டில், கொடையும், கொற் றமும் உடையானொரு தலைவன் இருந்தான்; அவனைக் கொண்கானங்கிழான் என்றே மக்கள் அழைத்தனர்; அவன் வண்மையும் ஆண்மையும் விளங்க, புலவர் பாடிய பாக்கள் பல.

"உலகில் உள்ள ஏனைய அரசர்க்குரிய மலைகள் எல்லாம், கொடை கொற்றம் ஆகிய இரண்டு பெருமை களுள் ஒன்றையே பெற்றிருக்கும்; கொடையால் சிறப்புற்ற மலை, கொற்றத்தால் சிறப்புறுதல் இல்லை; கொற்றத்தால் சிறப்புற்றமலை, கொடையால் சிறப்புறுதல் இல்லை; ஆனால் கொண்கான நாடோ கொடை, கொற்றம் ஆக இரண்டாலும் சிறப்புடையதாம்; கொண்கான நாட்டைப் பாடிவந்த இர வலர் பரிசுபெறுதல் உறுதியாம்; ஆகவே, அவர்க்குத் தாம் முன்கொடுத்த கடனைப் பெற்றுச்செல்வோம் என எண் ணியவராய், அவ்விரவலரைத் தொடர்ந்து வந்த அவர் கடன்காரர்களாலும், அக்கொண்கானங் கிழானுக்குத் திறைசெலுத்தி மீளும் அரசர்களாலும் நிறைந்திருக்கும் கொண்பெருங்கானம் எனின், அதன் கொடைக்கும், கொற்றத்திற்கும் வேறு சான்று வேண்டாவன்றோ?" எனவும்,

> "ஒன்று நன்குடைய பிறர்குன்றம்; என்றும்
> இரண்டு நன்குஉடைத்தே கொண்பெருங் கானம்;
> நச்சிச் சென்ற இரவலர்ச் சுட்டித்
> தொடுத்துணக் கிடப்பினும் கிடக்கும்; அஃதான்று;
> நிறையருந்தானை வேந்தரைத்
> திறைகொண்டு பெயர்க்கும் செம்மலும் உடைத்தே."
>
> (புறம்: கடுக)

ஞாயிறு எத்திசைச்செலினும் அத்திசையே நோக்கும் இயல்பினவாய நெருஞ்சிப் பூக்களைப்போல், வறுமையால் வாடிய யாழ்ப்பாணர்கள் கையில் ஏந்திய ஏற்கும் மண்டை கொண்பெருங்கிழானின் மார்பையே நோக்கிக் கிடக்கும் எனவும் கூறும் புலவர் பாராட்டுரைகள் அக் கொண்கானங் கிழானின் பெருமையினைப் புலப்படுத்தி நிற்றல் காண்க.

> "பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
> ஏர்தரு சுடரின் எதிர் கொண்டாஅங்கு,
> இலம்படு புலவர் மண்டை, விளங்குபுகழ்க்
> கொண்பெருங் கானத்துக் கிழவன்
> தண்தார் அகலம் நோக்கின மலர்ந்தே." (புறம்: 155)

கொண்கானம் கிழானைப் பாராட்டிய மற்றொரு பாட்டில், மக்கள், அலைஅலைக்கும் பெருங்கடலின் கரையருகே இருந்தபோதும், நீர்வேட்கை உற்றக்கால், அக் கடல் நீர் உப்பாதல் அறிந்து, 'உண்ணும் நீர் ஈண்டு யாண்டேனும் உண்டோ? உண்ணும் நீர் ஈண்டு யாண்டேனும் உண்டோ?' என எதிர்வருவாரையெல்லாம் கேட்டு, அது உள்ள இடமே தேடிச் செல்வர்; அதைப்போலவே, புலவர்களும் பேரரசர் அவையருகே வாழினும், அவ்வரசர்பால் கொடைக்குணம் இன்மை தல் அறிந்து, அவரைப் பாராட்ட எண்ணாது, குற்றம் தீர்ந்த கொடைக்குணம் உடையாரைத் தேடிச்சென்று செய்யுள் பாடிச் சிறப்பிப்பர் என்றுகூறும் புலவர் பண்பு பாராட்டற்குரியதாம்.

> "திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்,
> அறியுநர்க் காணின், வேட்கை நீக்கும்
> சின்னீர் வினவுவர் மாந்தர்; அதுபோல்
> அரசர் உழையராகவும், புரைதபு
> வள்ளியோர்ப் படர்குவர் புலவர்." (புறம்: 154)

பாரம், பாழி முதலிய பேரூர்களுக்கும், ஏழில் மலைக்கும் உரியவனும், கொண்கானத்தின் ஒரு பகுதி நாட்டை ஆண்டிருந்தோனும், வேளிர்வழிவந்தவனும் ஆய நன்னன், ஒருகாலத்தே தன்னை எதிர்த்த வேந்தன்

ஒருவனை வென்று துரத்திவிட்டு அவ்வெற்றிக் களிப்பால் தன் அழகிய காட்டுள் சென்று சின்னாள் களித்து இருந்தானாக, அவன் நாட்டில் இல்லை என்பதறிந்த அவன் பகை வேந்தன், தன் பழிநீங்கப் பெரும்படையொன்றைப் புதிதாகக் கொண்டுபோந்து, அந்நன்னன் கோட்டையைச் சூழ்ந்து தாக்கினான்; அவன் தாக்குதல் ஆற்றாது, அக்கோட்டை அழியுங்காலத்தே, அச்செய்தி அறிந்த நன்னன் காட்டினின்றும் போந்து, மீட்டும் அவனை வென்று தன் பண்டைப்புகழை நாட்டினான் என்ற வரலாற்றினைப் புலவர் தாம் பாடிய அகநானூற்றுச் செய்யுள் ஒன்றில் அமைத்துப் பாடியுள்ளார்.

> "வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்,
> முனைகொல் தானையொடு முன்வந்திறுப்பத்
> தன்வரம் பாகிய மன்னெயில் இருக்கை,
> ஆற்றாமையின், பிடித்த வேல்வலித்
> தோற்றம் பிழையாத் தொல்புகழ் பெற்ற
> விழைதக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கின்
> கானமர் நன்னன்." (அகம்: ந௯௨)

ஆய், வீரக்கழல் புனைந்த வீரன்; அவன் பொதியில் மலை மழை தவழும் கொடுமுடிகளை உடையது; ஆண்டு மலரும் வேங்கையும் காந்தளும் மணத்தால் மாண்புற்றன. "கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில் வேங்கையும், காந்தளும் நாறி," (குறுந்: அ௪) எனவும், "பாணர் முதலாம் இரவலரைப் புரப்பானொரு வள்ளலுக்கு உரியது அரலை எனும் பெயருடைய குன்று, "பதலைப் பாணி பரிசிலர் கோமான் அரலைக் குன்று" (குறுந்: ௫௯) எனவும் கூறும் வரலாறுகளையும் நோக்குக

இவ்வுடல், உணவை முதலாக உடையது; உணவு இன்றேல் உடல் நிலையாது; உடல் இன்றேல் உயிர் இன்றாம்; ஆகவே, உயிர் நிலைபெறுதல் உணவைப் பெறுதலால் உண்டாம்; உடலிற்கு உணவு தருவார், உயிர் தருவாராவர்; உணவாவது, நிலமும், நீரும் உண்டாயவழி உண்டாவதாம்;

ஆகவே, அந்நீரும், நிலனும் உண்டாகச் செய்வோர் உடலும், உயிரும் ஒன்றிவாழத் துணைபுரிந்தோராவர் என்றெல்லாம் புலவர்கள் கூறுவர். புலவர் கூறும் நிலமும், நீரும் பயன் அளித்தல், அறநெறி அரசாளும் அரசன் நாட்டிலாம்; அவ்வாறன்றி, குடிவருந்தக் கோலோச்சும் கொடியோன் வாழ்நாட்டில் அவை பயன் அளித்தல் இன்றாம். "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட பெயலும் விளையுளும் தொக்கு," "முறைகோடி மன்னவன் செய்யின், உறைகோடி ஒல்லாது வானம் பெயல்," என வள்ளுவர் கூறுவனவும் காண்க. ஆகவே, உயிரும் உடலும் கூடி வாழ்தற்காம் நெல்லும், நீரும் நல்லரசு வாழும் நாட்டிலேயே உண்டாம்; ஆகவே, நாடாள் அரசர் நல்லவராதல் வேண்டும்; அவர் நல்லவராதல் வேண்டின், அவர்கள் மன்னுயிரைத் தன்னுயிர்போல் கருதுவதும் போதாது; உலகிற்கு உயிர் நெல்லன்று; நீரும் அன்று; தானே அவ்வுலகிற்கு உயிராம் எனக் கருதுதல்வேண்டும்; அக்கருத்து அவர்க்கு உண்டாயின் நாட்டின் நல்வாழ்வில் அவர்க்கு நாட்டம் உண்டாம்; உயிர் வாழ்வது உடலின் வாழ்வைப் பொறுத்ததாம்; உடல் வாழின், உயிர் வாழும்; உடல் அழியின் உயிர் அழியும்; ஆகவே, உயிராம் தான் வாழ வேண்டின், அவ்வுயிர்க்கு உடலாம், உலகம் வாழ வழி செய்வன்; உடலார் அழியின், உயிரார் அழிவர்; உடலை ஓம்பினேன்; உயிர் ஓம்பினேனே என்றார் ஒரு பெரியார்; ஆகவே, அரசன் வேல்வீரர் நிறைந்த பெரும்படையுடைய வழியும், அப்படையினையே தன் வாழ்வின் துணையாகக் கொள்ளாது, இவ்வுலகாம் உடலிற்குத் தானே உயிராம் என்ற எண்ணத்தினையே தன் படைத்துணையாகக்கொள்ளுதல்வேண்டும். அவ்வாறு கொண்டு ஆளும் அரசன் நாடும் நன்கு வாழும்; அவனும் நெடிதுநாள் வாழ்வன்; இவ்வரசியல் உண்மை, அக்கால அரசர்க்கும் இக்கால அரசியல் தலைவர்க்கும், சிறந்த வழிகாட்டியாய் அமையும் என்பதை அறிந்த புலவர் மோசிகீரனார், அவ்வரசியல் நீதி இறவாது நின்று நிலைபெறுதல்வேண்டும் என்ற பேரெண்ணமுடையராய், அழகிய சிறு செய்யுள் ஒன்றில் அதை அமைத்துச்

சென்றுளார்; அரசியல் நெறி நிற்பார், அதை அறிந்து மேற்கொண்டு ஆட்சிபுரிந்து, தாமும் தம் நாடும் தழைக்கத் துணைபுரிவாராக!

"நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே." (புறம்: ௧௮௬)

இத்துணைப் பெரிய அரசியல் உண்மையினை, இவ்வளவு தெளிவாகவும், எளிமையாகவும் எடுத்துக்கூறிய புலவர் புலமை நலத்தினைப் போற்றி வணங்குவோமாக!

## ௯௰. மோசி கொற்றன்

கொற்றன் என்ற இயற்பெயருடைய இவர், மோசி என்ற ஊரிற் பிறந்தவராவர். மோசிகீரனார் வேறு, படுமரத்து மோசிகீரனார் வேறாதல் போன்றே, இம்மோசி கொற்றன் வேறு, படுமரத்து மோசி கொற்றன் வேறு என்றே கொள்ளுதல்வேண்டும்.

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து சென்றானாக வருந்தினாள் தலைவி; மலர்போலும் மையுண்ட கண்கள், தம் மாணலம் இழந்தன! வளையணிந்து அழகு பெற்ற அவள் தோள்களும மெலிந்தன; தலைவியின் இம் மெலிவு கண்டு வருந்தினாள் அவள் தோழி; தோழியின் வருத்தம் கண்ட தலைவி, "தோழி! தலைவன், நம்மால் அறிந்துகொள்ளத்தக்க எளிமையுடையானல்லன்; அவன், சால்புகள் அளந்தறிய மாட்டாதன; ஆதலின், அவன் நம்மை நெடிதுநாள் துயர்உற வையான்; அவனோடு நாம் கொண்ட நட்பு சிலநாளே ஆயினும், அவன் நட்பு நன்மை தரு நட்பாம் என்பதை அறிந்துளேன்; ஆதலின், நம் மெலிவிற்குக் காரணமாய அவன் நட்பே, அம் மெலிவினைப் போக்கிப் பேரின்பம் தரும் மருந்துமாம் என்பதை அறிவேன்; ஆதலின் யான் ஆற்றியுளேன்; தலைவன் இயல்பினை, என்னைப்போல் நீயும் அறிவை ஆயின், நீயும் ஆற்றுவை; ஆனால் அவன் இயல்பு அறிதற்கு அருமை யுடையதாம் ஆதலின், அதனை அறியாயாயினை; அதனால் ஆற்றாது வருந்துகின்றனை எனக்கூறி ஆற்றினாள் எனப் பாடிப் பெண்ணுள்ளத்தின் பெருந்தகைமையினைப் பெரி தும் பாராட்டியுள்ளார் புலவர் :

"மலரேர் உண்கண் மாணலம் தொலைய,
வளையேர் மென்தோள் ஞெகிழ்ந்ததன் தலையும்
மாற்று ஆகின்றே; தோழி! ஆற்றலையே;
அறிதற்கு அமையா நாடனொடு
செய்து கொண்டதோர் சிறுநல் நட்பே."

(குறுந்: ௩௭௭)

## ௯௪. மோசி சாத்தனார்

"எயில் காத்தல் நொச்சி" என்ப; தம் கோட்டையைப் பகைவர் கைப்பற்றாவண்ணம் காத்து நிற்றல் நொச்சி எனப்பெயர்பெறும்; அவ்வாறு கோட்டையைக் காத்து நிற்கும் வீரர் நொச்சித்துணர் அணிதல் அக்கால வழக்கமாம்; நொச்சித் தழை, மகளிர்க்குத் தழை ஆடையாகப் பயன்படுதலும் உண்டு; அந்நொச்சியே, ஊரைக் காத்துநிற்கும் வேலியும் ஆகும். இவ்வாறு நொச்சி பல்லாற்றானும் பயனுறும் எனினும், அது எயில் காக்கும் வீரர்க்கு அணியாக விளங்கும் சிறப்பினையே புலவர்கள் பெரிதும் பாராட்டுவர்; புலவர் மோசி சாத்தனார், பகைவர் பாய்ந்து தாக்கியக்கால், தம் எயில் அவரால் பாழாகா வண்ணம் காத்து நின்று, தம் நகர்ப்புறம் அப்பகைவர் கைப்படாவண்ணம் பெரும்போர் ஆற்றி, வீழ்ந்த வீரன் ஒருவனைப் பெருந்தகையாளன் எனப் பாராட்டியதோடு, அவன் சென்னியும் பெருமையாற் பீடுற்றது எனவும், அவன் சென்னியில் அணியும் உரிமை உடைமையால் நொச்சியும் பீடுற்றது; உலகில் உள்ள எல்லா மரங்களினும் இறப்ப உயர்ந்தது எனவும் பாராட்டியுள்ளார்.

இதனால் புலவர் கொண்டுள்ள ஊர்ப்பற்றும், ஊரைக் காக்க உயிர்விடும் உயரிய வீரர்பால் அவர் காட்டும் பெருமதிப்பும் நன்கு புலனாதல் காண்க.

> "மணிதுணர்ந் தன்ன மாக்குரல் நொச்சி!
> போதுவிரி பன்மர னுள்ளும், சிறந்த
> காதல் நன்மரம் நீ;............
> ........................................
> காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்,
> ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
> பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே."
>
> (புறம்: ௨௭௨)

---

## ௬௨. வாயிலான் தேவன்

தேவன் என்ற பெயருடையார் பண்டும் இன்றும் பலராவர்; கடுகு பெருந்தேவன், பூதன்தேவன், பெருந்தேவன் முதலாய பெயர்களைக் காண்க. வாயில் இளங் கண்ணன் என்பாரைப் போன்றே, இவரும் வாயில் என்ற ஊரிற் பிறந்தவராவர்.

கார்காலத்தே வருவேன் எனக் கூறிச்சென்ற தலைவன், வாடை வீசும் கூதிர்க்காலத்தும் வந்திலன் என வருந்திய தலைமகள், இவ்வாடையின் கொடுமையால், இரை தேர்ந்து உண்ணும் இயல்பினவாய நாரைகளும் தம் தொழில் ஒழிந்து உறையும் கூதிர்க்காலமாம் இது; இக் காலத்திலும், நம் தலைவர் மட்டும் தாம் மேற்கொண்டு சென்ற வினையை விடுத்து வாராதது ஏனோ என வருந்தினள் எனப் பாடிய பாட்டு அவர் புலமை நலத்தினைப் புலப் படுத்தி நிற்றல் காண்க.

> "இரைதேர் நாரைக்கு எவ்வமாகத்
> தூஉம் துவலைத் துயர்கூர் வாடையும்
> வாரார் போல்வர் நம் காதலர்." (குறுந்: ௧0௩)

முல்லை நிலம், செம்மண் நிறைந்ததாதலின், அச்செந் நிலத்தே மலர்ந்த வெண்ணிற முல்லை, செவ்வானத்தே தோன்றும் வெண்ணிற மீன்போலும் என்பார், முல்லை, செவ்வானத்துச் செவ்வியினைக்கொண்டது எனக் கூறிய நயம் நாம் போற்றும் தன்மையதாம்.

> "பாசிலை முல்லை ஆசில் வான்பூச்
> செவ்வான் செவ்வி கொண் டன்று." (குறுந்: ௧0௮)

## ௪௩. வாயில் இளங்கண்ணன்

வாயில் என்பதோர் ஊர்; அது யாண்டுளது என்பதை அறிதற்கியலாது எனினும், அது புலவர் பலரை ஈன்ற பேறுடையது என்பது மட்டும் தெளிவாம்; வாயிலான் தேவன் என்பாரும் இவ்வூரினரே ஆவர். பெயர்களுக்கு முன்னர் இளமைப் பொருள் உணர்த்தும் சொல்லைச் சேர்த்து வழங்குவதை இக்கால மக்களும், அக்கால மக்களும் ஒருங்கே விரும்புவராவர். பாலகிருஷ்ணன், பாலச்சந்திரன், பாலசுந்தரன், பாலசுப்பிரமணியன் என்ற இக்காலப் பெயர்களையும், இளங்கீரன், இளந்திரையன், இளந்தேவன், இளநாகன், இளம்பூதன், இளவெயினன் என்ற அக்காலப் பெயர்களையும் நோக்குக. அவ்வாறே இப் புலவரும் இளங்கண்ணன் என அழைக்கப்பெற்றுள்ளார்.

பிடியை விரும்பிய களிறு, அதைத் தேடிக் குன்றை அடைய, ஆண்டுள்ள குறவர் அதன் வருகை அறிந்து ஆரவாரித்தாராக, அவர் ஆரவாரத்தால், தான் எண்ணி வந்த எண்ணம் ஈடேறப் பெறாமையால் பெருஞ்சினமுற்று, அக்குறவர் வாழ் ஊர் மன்றத்தைப் பாழாக்கிச் செல்லும் எனக்கூறும் இவர் கூற்று யானைகளின் இயல்பறியத் துணை புரிதல் காண்க:

> "நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு
> குன்றம் நண்ணிக் குறவர் ஆர்ப்ப
> மன்றம் போழும்." (குறுந் : ௩௪௬)

உயர்குடிப்பிறந்தார் தம் உள்ளத்தே ஒன்றை விரும்பினாராயின், அதைப் பலரும் அறியக்கூறிக் குறைதீர நாணும் நற்பண்புடையராவர் என்பதைத் தலைமகன் தன் உள்ளத்தே தலைமகளைப்பெற விரும்பி, அவளைப் பெற மாட்டாது வருந்தியவிடத்தும், தன் குறையினைத் தோழி அறியக் கூறும் ஆற்றல் இலனாய் அஃகினான் எனக் கூறுவதால் கூறித் தெளிவுறுத்தினார்.

> "நல்லகம் நயந்துதான் உயங்கிச்
> சொல்லவும் ஆகாது அஃகி யோனே." (குறுந் : ௩௪௬)

## ௯௯. விரிச்சியூர் நன்னாகனார்

கணி உரைத்தார்க்கும், மருத்துவம் புரிந்தார்க்கும், பார்ப்பார்க்கும் வேந்தர் மகிழ்ந்து அளித்த ஊர்கள் முறையே கணியூர், மருத்துவக்குடி, பிரமதேயம் என்ற பெயரால் வழங்கப்படுவதேபோல், வேந்தன் பொருட்டு விரிச்சிநின்று கூறியது, அக்கூறியவாறே வேந்தற்கு வேண்டும் பயன் அளித்ததாக, அவ்வேந்தன் அவ்விரிச்சி நின்றார்க்கு அளித்த ஊர் விரிச்சியூர் என வழங்கப் பெறும். நன்னாகனார் பிறந்த விரிச்சியூர் பாண்டி நாட்டில் உளது என்ப. அது இடைக்காலத்தே பெரிச்சியூர் என மருவி வழங்கிற்று என்றும் கூறுப.

வீரர் பலரும் கூடி மதுவுண்டு மகிழும் விழாவொன்றில், வீரன் ஒருவன் வேந்தர்க்குத் தரும் மதுவோடு, களிப்புமிகும் கலங்கல் நறவம் கலந்து கொடுப்பதற்கண் காலம் தாழ்ந்தமை கண்டு பொறாது, அளித்த அதனை ஏற்றுக்கொள்ளாதே வாளேந்திக் களம் புகுந்துவிட்டான்; ஆங்குள்ள ஏனைய வீரர்கள், அச்செயல் தம்மை அவமதித்ததாகக்கொண்டு சினந்தனர்; அந்நிலையில், ஆங்கிருந்த அறிஞர் ஒருவர் அவர்களை நோக்கி, "வீரர்காள்! மது வரும்வரை வாளா இராது வாளேந்திச் சென்றான் எனச் சினக்கின்றீர்; அது அவன் பண்பு; அப்பண்பு உண்டு மகிழும் ஈண்டுமட்டும் தோன்றுவதன்று; களத்திலும், பகைவர் படையினைத் தாக்கற்காய தம் முறை வருக என வாளாஇராது, விரைந்து முன்சென்று வந்தெதிர்க்கும் பெரும்படையினை அழித்து முன்னிற்பன்; ஆதலின், அவன் பண்பினைப் பெறமாட்டா நீவிர், கொன்னே சினத்தல் ஒழிமின்," என்று கூறினார் எனப் பாடியுள்ளார் :

> "வேந்தற் கேந்திய தீந்தண் நறவம்
> யாம்தனக்கு உறுமுறை வளாவ, விலக்கி
> வாய்வாள் பற்றி நின்றனென், என்று
> சினவல் ஓம்புமின்; சிறுபுல் லாளர்!
> ஈண்டே போல, வேண்டுவ னாயின்,
> என்முறை வருக என்னான்; கம்மென
> எழுதரு பெரும்படை விலக்கி,
> ஆண்டுநிற்கும் ஆண்டகை யன்னே." (புறம் : உ௯௨)

## சு௫. விரியூர் நக்கனார்

விரியூர் என்ற பெயருடைய ஊர்கள் பல உள. சேர நாட்டு வள்ளுவநாட்டில் விரியூர் என்றோர் ஊர் உளது; தென்னார்க்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சிக்கு அணித்தே ஒரு விரியூர் உளது; பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்று, வடபெண்ணைக்கரையில் ஒரு விரியூரைக் குறிப்பிடுகிறது. "ஐயங்கொண்ட சோழ மண்டலத்துப் பாக்கைநாட்டு விரியூர்ப் பெண்ணாற்று வடகரை" (Nell Ins No. 108). இவற்றுள் நக்கனார் பிறந்த விரியூர் எது என்பதை அறிந்துகொள்வதற்கில்லை; நக்கனார் என்ற பெயர், சிவபிரான் திருநாமங்களுள் ஒன்று.

வீரன் வேல், பிறருடைய வேல் போல்வதன்று; அது பெருந்தகைமை மிக்க பெருவேல்; போரில்லாக் காலத்தே, புழுதி படிந்து வீட்டின் ஒரு மூலையிலோ, வீட்டின் கூரையிலோ செருகப்பட்டுக் கிடக்கும்; ஆனால் போர் வந்துற்றதெனில், மங்கல மகளிர் பாட, பாணர் யாழ்இசைத்துப் பாராட்ட, நீர்நிலைக்குச் சென்று நீராடி, மாலையணிந்து, தெருவில் உலாவந்து, பகைவேந்தர் யானைகளின் முகத்தில் தைத்து உருவிச்செல்லும் என்று, தாம் பாராட்டிய பெருவீரன் ஒருவன் கைவேலைச் சிறப்பித்துப்பாடி, பழங்கால மக்கள், படைக்கலங்களை வைத்துப் போற்றிய வழக்காற்றினை உணர்த்தியுள்ளார்.

> "பிறர்வேல் போலாதாகி, இவ்வூர்
> மறவன் வேலோ பெருந்தகை உடைத்தே;
> இரும்புறம் நீறும் ஆடிக், கலந்து, இடைக்
> குரம்பைக் கூரைக் கிடக்கினும் கிடக்கும்;
> மங்கல மகளிரொடு மாலை சூட்டி
> இன்குரல், இரும்பை யாழொடு ததும்பத்
> தெண்ணீர்ப் படுவினும், தெருவினும் திரிந்து
> மண்முழுது அழுங்கச் செல்லினும் செல்லும்; ஆங்கு
> இருங்கடல் தானை வேந்தர்
> பெருங்களிற்று முகத்தினும் செலவு ஆனாதே."
>
> (புறம்: ௩௩௨)

## ௩௰௬. விற்றூற்று மூதெயினனார்

விற்றூறு, புலவர் பலர் வாழ்ந்த பெருமையுடையது; இவ்வூரிற் பிறந்த வண்ணக்கன் தத்தன் என்பாரின் பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது; மூதெயினனார் என்ற பெயரால் இவர் வேடர் மரபினர் என்பதும், அறிவாலும், ஆண்டாலும் பெற்ற முதுமையாற் புகழுடையார் என்பதும் புலனும். இவர் பெயர் முத்தூற்று மூதெயினனார் எனவும் ஏடுகளில் காணப்பெறும்.

கடலைச் சார்ந்துள்ள கானற்சோலைகளில், விரைந்து சுழன்று அடிக்கும் கடல்காற்றால் மலைபோலும் மணல் மேடுகள் உண்டாம் எனவும், அம்மணல் மேடுகளால் ஆங்குள்ள மரங்கள் எல்லாம் மறைந்துபோம் எனவும் அவர் கூறியன எத்துணை உண்மையாம் என்பதை திருச்செந்தூர்க் கடற்கரையினையும், குமரிமுனையில் அமைந்த மணல் மலையினையும் கண்டார் நன்கு உணர்வர்.

"பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாயக்
கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்
கணங்கொள் சிமைய அணங்கும் கானல்." (குறுந் : ௩௭௨)

பண்டைத் தமிழர்கள், தம் மக்களுக்கு மணவினை செய்யத் தொடங்கி, இறைச்சி கலந்து ஆக்கிய நெய்மிக்க வெண்சோற்றை மணம்குறித்து வந்தார் அனைவர்க்கும் வரையாது வழங்கி விருந்தாற்றி, நிமித்தம் நல்லன ஆதல் கண்டும், திங்களைக்கூடிய உரோகிணி நன்னாள் வரக் கண்டும், மணம் நிகழும் தங்கள் மனையினை மாண்புறப் புனைந்து, வழிபடு கடவுளர்க்கு வழிபாடாற்றி, மணமுரசோடு வேறுபல முரசங்களும் முழங்கத் தலைவிக்கு மண நீராட்டி, வாகை இலையினை அறுகம் புல்லின் கிழங்கோடு கட்டிய மாலையினை மணமக்களுக்குச் சூட்டி, தூய ஆடையினையும் அளித்து, மழையொலிபோலும் வாழ்த்தொலி முழங்க, தமர் தலைமகளைத் தலைமகனுக்கு அளிக்க மணவினை முடிப்பர்; அன்றை இரவே மணமக்கள் பள்ளியறை புகுவர் எனக்கூறும் பழந்தமிழர் தம் மணமுறையினை மக்கள் உணரவைத்த மாண்பினைப் போற்றுவோமாக!

"மைப்பறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப் புணர்ந்து இனியவாகத், தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய,
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்,
தூவுடைப் பொலிந்து, மேவரத் துவன்றி,
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பின் பெயர்வியர்ப்பு ஆற்றித்
தமர்நமக்கு ஈத்த தலைநாள் இரவு." (அக: கங௬)

உழவர், தம்மோடு தொழிலாற்றும் பிற உழவர்களையும் அழைத்துக்கொண்டே, இருள்புலரும் விடியற் காலத்தே களம் அடைந்து, ஆங்குள்ள வைக்கோற்போரைப் பிரித்துக் கடாவிட்டு அலைத்து எடுத்துத், தூற்றுப் பொலியினைக், கூளங்கள் வானை மறைக்கும் மேகங்களைப்போல் திசைகளையெல்லாம் மறைக்குமாறு பரந்து செல்லத் தூற்றி, அத் தொழிலால் உண்டாய உடற்றளர்ச்சி அகலுமாறு தம் மனைவிமார் கொணர்ந்த, கொள்ளையும், பயற்றினையும் பாலோடு கலந்து ஆக்கியனவும், வெள்ளிக் கம்பியை ஒரளவாக நறுக்கிவைத்தாற் போன்றனவுமாகிய உணவினை, உண்டது போதும் என உரைக்குமளவு உண்டு, பின்னர்த் தூற்றிக்கொண்ட நெல்லைக் கூடாகக் கட்டிவிட்டு, ஞாயிற்றின் வெப்பம் அகலுமாறு, தங்கள் எருதுகளோடு, ஆங்குள்ள மருத மரநிழலிலே தங்குவர் எனக் கூறும் உழவர் வாழ்வு, உள்ளவாறு உணர்த்தப்பட்டுளது கண்டு உளம் மகிழ்வோமாக:

கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்,
பொங்கழி முகந்த தாவில் நுண்துகள்,
மங்குல் வானின் மாதிரம் மறைப்ப,
வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டித்
தொழிற் செருக்கு அனந்தர் வீட..........
..................... .............. ..........
கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல் வரைந்தன்ன வாலவிழ் மிதவை
வாங்குகைக் தடுத்த பின்றை, ஓங்கிய
பருதியங் குப்பை சுற்றிப், பகல்செல
மருத மரநிழல் எருதொடு வதியும்." (அகம் : ௩௭)

புலவர் மூதெயினனார், "மாங்காடு என்றோர் ஊர் உளது; அது கன்னியர் காவலையுடையது; தன் மந்தி பசித்துயரால் வருந்துவது கண்டு, அதன் பசிபோக்க வேண்டி, ஆண்டுக் காய்த்துப் பழுத்துக்கிடக்கும் பலாவின் சுளையினைத் தோண்டி எடுப்பின், அக் கடுவனையும் துயர்க்கு உள்ளாக்கும் அணங்குகள் உறையும் அரிய காவலை உடையது," என்று கூறுகிறார். இங்குக் கூறும் இது, சிலப்பதிகாரத்தே கூறப்பெறும் மாங்காடோ அன்றி வேறோ அறிகிலம்.

"கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்
நனிநோய் எய்க்கும் பனிகூர் அடுக்கத்து
மகளிர் மாங்காடு." (அகம் : ௨௮௮)

ஆண்மகன் ஒருவன், தன் மனைவியைக் கூறுங்கால், வெறுப்பற்றவள்; கற்பாற் கவினுற்றவள்; என் உயிர் தங்குதற்காம் உடல் போன்றவள் என்றெல்லாம் பாராட்டிக் கூறினான் எனப் பாடிப் பெண்டிரைப் போற்ற வேண்டிய பண்பினை அறிவித்துள்ளார் புலவர். "உவர் நீங்கு கற்பின் எம் உயிர் உடம் படுவி" (அகம் : ௧௩௬). போர்வை நீங்கப்பெற்ற தலைமகள், உறையின் நீங்கிய வாள் போல் விளக்கமுற்று விளங்கினாள் எனக் கூறும் உவமை வியக்கத் தக்கதாம்: "போர்வை வவ்வலின், உறைகழி வாளின் உருவு பெயர்ந்து இமைப்ப."

## சஎ. வீரைவெளியன் தித்தனார்

புறநானூறு பாடிய புலவர் வரிசையில், வீரை வெளிய னார் என்பார் ஒருவரும், அகநானூறு பாடிய புலவர் வரிசையில், வீரை வெளியன் தித்தனார் என்பார் ஒருவரும் உளர். இவ் விரு பெயர்களில் வரும் வீரை, வெளி ஆகிய இரு சொற்களையும், ஒரு சொல்லாகக்கொண்டு, அது வீரை வெளி என்ற ஊரைக் குறிக்கவரும் பெயராம் எனப் பொருள் கூறி, வீரை வெளியன் தித்தனார் என்பது, வீரை வெளியிற் பிறந்த தித்தனார் எனப் பொருள்படும் ஆதலின், இரு பெயர்களும் ஒருவரையே குறிக்கும் எனக் கொள்வர் சிலர்; பரணர் பாக்களில், உறையூரில் வாழ்ந்தா னொருவன் தித்தன் வெளியன் என்ற பெயருடையனைக் குறிக்கப்பட் டிருத்தலைக்கொண்டு, வெளியன் என்பதே ஒருவர் பெயர்; ஆதலின் வீரை என்பது அவர் பிறந்த ஊரின் பெயராம்; அவ்வூர் பெண்ணையாற்றின் வடகரை நாட்டில் உளது; ஆகவே, வீரை வெளியன் என்ற தொடர், வீரைநகரிற் பிறந்த வெளியன் எனப் பொருள்படும்; இவர் வேறு; வீரை வெளியன் தித்தனார் என்பார் வேறு; வேண்டுமாயின், இவரை வீரை வெளியனாரின் மகன் எனக் கோடல் பொருந்தும் என்பர் மற்றும் சிலர்.

"தித்தன், தித்தன் வெளியன், வெளியன் தித்தன் என்னும் பெயர்களை நோக்குமிடத்து, முதலில் தித்தன் என்பவனும், அவனுக்குப்பின், தித்தன் மகனாகிய வெளியன் என்பவனும், வெளியன் மகனாகிய தித்தன் என்பவனும் வாழ்ந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது. வெளியன் தித்தன் என்பவன், தித்த னுக்குப் பெயரனாவான் ஆகலின், பாட்டனாகிய தித்தனது பெயர் இடப்பெற்றான் எனக் கொள்ளுதல் சிறக்கும்," என்று கூறுவாரும் உளர்; ஆனால், வெளியனார், வெளியன் தித்தனார், தித்தன் வெளியன் என்னும் பெயர்களை நோக்கு மிடத்து மேற்கூறிய முறை மாறுபட்டுத் தோன்றுமாத லின், அவ்வாறு கொள்ளுதல் பொருந்தாது என்க.

இவ்வாறு, வெளியனாரும், வெளியன் தித்தனாரும் வேறு வேறு பட்டவரா? அன்றி ஒருவரா? வேறு வேறு பட்டவராயின், தந்தையும் மகனுமாய உறவினை உடைய வரா? அவ்வாறாயின் தந்தை யார்? மகனார்? எனத் துணிந்து கூறுதற்கில்லை ஆதலின், இருவர் பாக்களையும் அவரவர் பெயர் கூறியே படித்துப் பார்ப்போமாக.

வீரை வெளியனார், தம் பாடலில் வேந்தர்க்குத் துணை போம் விழுத்திணை பிறந்த நெடுந்தகை ஒருவன் மனைவி யின் மாண்புடை யுள்ளம் கண்டு மகிழ்ந்து பாராட்டுகின் றார்; அவன் யானை வேட்டம் மேற்கொண்ட களைப்பால், மனைமுன்றில் மரத்துநிழலில் தன்னை மறந்து உறங்கு கின்றான்; ஆங்கே, வேட்டம் புரிவார் காட்டிப் பிடிக்கத் துணைபுரியும் மான்பிணைபோலும் பார்வைமான் நிறுத்தப் பட்டுளது; அதை மான்பிணை என்றே கருதிய கலைமான் ஒன்று, அதன் அருகிற்போந்து அன்பு காட்டி ஆடி மகிழ லாயிற்று; அக் காட்சியினைக் கண்டாள் அவள்; கணவன் எழுந்தால் கலைக்குத் துயர் உண்டாம் என்பதை அறிவாள்; ஆதலின் அவன் எழுதற்கு அஞ்சினாள்; தான் அங்கும் இங்கும் நடப்பின் ஆண்டு எழும் ஒலி கேட்டு அவன் எழுதலும் கூடும்; மேலும், அவ் அரவம் கேட்டுக் கலை அஞ்சி, அகன்று, தன் இன்ப விளையாட்டினை இழத்தலும் கூடும் என்று எண்ணினாள்; உடனே அரவம் ஒன்றும் செய்யாது ஓர் இடத்தே அடங்கி அமர்வாளாயினள். இத் தகையாளின் மாண்பினை உணர்த்தி, அருள்உள்ளம் தோன்றத் துணைபுரிகின்றார் புலவர்:

> "கைம்மான் வேட்டுவன் கனைதுயில் மடிந்தெனப்
> பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
> தீர்தொழில் தனிக்கலை திளைத்து விளையாட
> இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
> கணவன் எழுதலும் அஞ்சிக், கலையே
> பிணைவயிற் றீர்தலும் அஞ்சி, யாவதும்
> இல்வழங்காமையின்."

(புறம்: ௩௨௦)

தலைவன் வரையாது வந்து செல்வதால் ஊரில் அலரெழ, அதனால் தலைமகள் வருந்தும் வருத்தம் கண்டு அஞ்சிய அவள் தோழி, தலைமகன் ஒருநாள், தம் வீட்டின் புறத்தே வந்திருந்தானாக, அவன் கேட்குமாறு, பெருங் கடல் நீர் கொண்டுவரும் மேகத்தை நோக்கி, "மழையே! நீ இடியும், மின்னலுமாக வந்து ஆரவாரம் செய்துவிட்டுப் பெய்யாது வீணேசெல்ல எண்ணமோ, அல்லது, எம் தலைமகள் காத்துநிற்கும் தினைப்புனம் செழிக்குமாறு பெருமழை பெய்ய எண்ணமோ? எதுவோ நின் எண்ணம்?" என்று கேட்பாளாய், மறைத்துமொழி கிளவியால், தலைமகனை நோக்கி "தலைவ! இவ்வாறு இடைவிடாது வந்து, பயனின்றி அலர் எழுப்புவது நின் எண்ணமோ? அல்லது, இவள் கவின் பெறுமாறு அருள்மழை பொழிந்து மணந்து மகிழ எண்ணமோ? யாதோ நின் எண்ணம்?" எனக் கேட்டாள் என்று பாடிய வீரை வெளியன் தித்தனாரின் புலமை நலம் புகழ்தற் குரியதாமன்றோ?

"மின்னுடைக் கருவியை யாகி, நாளும்
கொன்னே செய்தியோ அரவம்?......
..........................................
குறமகள் காக்கும் ஏனல்
புறமும் தருதியோ? வாழிய மழையே!"

(அகம்: ௧௮௮)

## ௯௮ வெள்ளைக்குடி நாகனார்

வெள்ளைக்குடி நாகனார், சோழநாட்டில் வெள்ளைக்குடி என்ற ஊரில் பிறந்தவர்; நாகனார் என்ற இயற்பெயருடையவர்; உழவுத்தொழில் மேற்கொண்டு வாழ்ந்தவர்; நன்செய் நிலங்களை நிறையப்பெற்றவர். நாகனார் நாட்டுப் பற்று நனிமிகக் கொண்டவர். தான் வாழப் பிறநாடுகளின் துணையினை நாடாத நாடே நாடாம் என்ற நாட்டின் நல்லியல்புணர்ந்த புலவர், அவ்வளம் செறிந்து விளங்கும் தாம் பிறந்த சோழநாட்டினை வாயார வாழ்த்துகிறார்; சோழ அரசின் பெரும்படை வேலேந்தி வரிசையாகச் செல்லும் காட்சியினையும், அவ்வேற்படைக் காட்சியைத் தோற்கச்செய்யும் வெண்பூவினைத் தலையிலே கொண்ட செங்கரும்பு விளைந்துநிற்கும் கவின்மிகு காட்சியினையும் கண்டுகண்டு களிக்கிறார்:

> "அந்தண் காவிரி வந்துகவர்பு ஊட்டத்
> தோடுகொள் வேலின் தோற்றம் போல
> ஆடுகண் கரும்பின் வெண்பூ நுடங்கும்
> நாடெனப் படுவது நினதே." (புறம்: ௩௫)

இவ்வாறு வளங்கொழிக்கும் பெருநாடாளும் பெருமை சோழ அரசர்க்கே உண்மையால், சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தருள், போற்றிப் புகழ்தற்குரிய பேரரசு, அவருள் நடுவணதாய தம் சோழ அரசே எனப் பெருமை கொள்கிறார்; "யாதும் ஊரே; யாவரும் கேளிர்" எனக் கொள்ளும் உள்ளமுடையராய புலவர்க்கும் ஊர்ப்பற்று விடாதுபோலும்!

> "தண்தமிழ்க் கிழவர்
> முரசு முழங்குதானை மூவருள்ளும்
> அரசு எனப்படுவது நினதே." (புறம்: ௩௫)

நலம்பல செறிந்த தம் நாட்டில் நல்லரசு நடைபெற விரும்புகிறார் புலவர்; ஆனால், அவர் காலத்தே அந்நாட்டு

அரசியலை ஏற்றுநின்ற குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், ஆட்சிப்பொறுப்பைத் தானே முன்னின்று மேற்கொள்ளாமையாலோ, அல்லது தனக்குத் துணைநின்று ஆட்சிநடாத்தும் அரசியல் அலுவலராக, அறநெறி அறியாதார் சிலரை மேற்கொண்டமையாலோ, தம் நாட்டு ஆட்சிக்கு அழிவு வந்துறுமோ என அஞ்சவேண்டிய நிலை வந்துற்றதைப் புலவர் அறிந்தார்.

புலவர் நாட்டுப்பற்று மட்டும் கொண்டு அந்நாட்டினை நன்னிலைக்கண் நாட்டுதற்காம் நல்லறிவும், அந்நல்லறிவின் துணைகொண்டு ஆவன ஆற்றும் அருந்திறனும் அற்றவரல்லர்; ஆதலின், அவ்வரசன்முன்சென்று அவன் அறியாமையினையும், அவவறியாமையால் உண்டாம் ஆக்கக் கேட்டினையும் எடுத்துக்காட்டித் திருத்தும் அஞ்சாமையும் உடையராயினர்.

புலவர் காலத்தில் ஓர் ஆண்டில், சோழ நாட்டு நிலங்கள் மழை இன்மையாலோ, பெருமழை பெய்தமையாலோ, வேறு எக்காரணத்தாலோ விளையாதொழிந்தன; அரசன் இறையாசப் பெறவேண்டுவது நிலம்தரும் விளைவில் ஆறில் ஒன்றே ஆதலின், விளையாத ஆண்டில் அரசன் இறை வாங்காது விடுத்தல் வேண்டும். ஆனால், அரசியல் அலுவலர் அவ்வாறு செய்யாது, அதைக் கடனாகவே கருதி அடுத்துவந்த ஆண்டில் அதையும் சேர்த்துத் தண்டுவாராயினர்; குடிகள் அது தவறு என்பதை அவர்கள்பால் எடுத்துக்கூறவும் அவர்கள் கேளாராயினர்; அலுவலர் செய்யும் அறமல்லா இச்செயலை அரசன்பால் கூறஎண்ணிய குடிகட்கு அரசனைக் காணல் அரிதாயிற்று; இந்நிலையில் வருந்திய சோணாட்டுக் குடிகளுள் ஒருவராய நாகனார், வாளா இராது, தம் புலமை தமக்களித்த உரிமையால் அரண்மனையுட்புக்கு அரசனைக்கண்டு அறிவுரை கூறுவாராயினர்.

வலியாரும் மெலியாரும் கலந்துவாழும் உலகில், மெலியார், வலியரால் நலிவெய்துதல் நாட்டில் எங்கும்

நிகழ்தலின், அவ்வாறு வாட்டும் வலியாரை ஒறுத்து' மெலியார்க்கு முறைசெய்தலை அரசன் தன் கடமையாகக் கொள்ளுதல் வேண்டும். அதற்கு அரசன் நாட்டு மக்கள் அறியாவண்ணம் அவர் நடுவே சென்று ஆங்கு நடப்பன வற்றைத் தானே அறிந்து அறம்புரிதல் மிகமிக நன்று; அஃது இயலாதாயின், வலியரான் மெலிவெய்தினர், வந்து முறையிடுதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் அறநூல் அறிந்தார் பலர்சூழ அவைக்கண் அனைவரும் காண அமர்ந்து காட்சிக்கெளியனாதலைக் கடனாகக்கொள்ளுதல் வேண்டும்; ஆனல், அரசன்பால் அப்பண்பு இல்லாயின், அவன் நாட்டு மக்கள் அல்லல் பல உற்று அழிவர்; ஆதலின் அரசர்பால் அமையவேண்டிய அருப் பண்புகளுள் மிகமிகச் சிறந்தது காட்சிக்கெளியனாதலேயாம். குளமுற் றத்துத் துஞ்சிய கிள்ளிவளன்பால் இப்பண்பு இல்லாமை யுணர்ந்த புலவர், "வேந்தே! இவ்வுலகம் வானேக்கி வாழும் இயல்புடையது; ஆதலின், உழவர் தம் நிலத்திற்கு எப்போது நீர் வேண்டும் என எண்ணுகின்றனரோ அப்போதே மழை பெய்யுமாயின், அவ்வுழவர் பெருநிலம் பெற்று மகிழ்வர்; அவர் அதை வேண்டுங்காலத்தே பெறு ராயின், இட்ட பயிர் அழிய அவரும் அழிவர். இந்நிலையினை உணரும் நினக்கு ஒன்று கூறுகின்றேன்; வலியரான் மெலிவெய்தினர், தம் மெலிவுபோக நின் காட்சியினை விரும்பி வருவர்; அவ்வாறு வருவார்க்கு நின்காட்சி கிடைக்கப்பெறின், அவர் பெய் எனப் பெய்த மழை பெற்ற உழவரேபோல் தம் துயர் தீரப்பெற்று இன்புறுவர்; நின் காட்சி கிட்டாதுபோயின், உழுத உடற்றுயரோடு மழை பெறு மனத்துயரும் கொள்ளும் உழவரேபோல், வலியரால் எய்திய மெலிவோடு, நின்னைக் காணப்பெறுமையால் பெறும் மனத்துயரும் கொண்டு மாய்வர். அந்நிலையில் அவர் அழுதுவிடும் கண்ணீர், நின் ஆட்சிக்கரணும் அனைத் தையும் அழிக்கும்; ஆதலின், காட்சிக் கெளியனாதலைக் கடமையாகக் கொள்வாயாக," என்று முதற்கண் அறி வுறுத்தினர்:

" நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே !
நினவ கூறுவல்; எனவ கேண்மதி !
அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதில் பதனெளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே."
(புறம் : ௩௫)

காட்சிக் கெளியனாதல் காவலன் கடமை என உணர்த்திய புலவர், அவன் தன் ஆட்சிக் குட்பட்ட அனைத்துயிர்க்கும் துயர்போக்கி இனிது ஆற்றக் கடமைப்பட்டவனவன் என்பதையும் அறிவுறுத்த எண்ணினார். அரசர் ஒவ்வொருவரும் வெண்கொற்றக் குடையினையுடையவராவர். அரசரே அனைத்துயிரும் என்ப; ஆதலின், அவன் தாங்கிய குடை அனைத்துயிர்க்கும் எடுத்த குடையாம்; குடையினைக் கொண்டார், மழையாலும், வெயிலாலும் தன்புறுவதிலராயினும, ஈண்டு அரசர் குடையேந்திச் செல்வது, தம்மீது விழும் மழையையும், வெயிலையும் படாமைக் காத்தற்பொருட்டன்று; அது அரசர்க்கு எடுத்த குடையன்று; அரசர் குடிகட்கு எடுத்த குடை; ஆதலின், அரசர் குடையேந்திநிற்பது தம் குடைநிழற்கீழ் வாழும் அனைவரும் துன்பத்தின் நீங்கிய இன்ப வாழ்வினராக ஆள்வேம் என்பதற்கு அறிகுறியேயாம் என்ற உண்மையினை அழகாக, ஆனால் அஞ்சாமல் எடுத்துக் கூறினார் புலவர் :

" நின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ அன்றே; வருந்திய
குடிமறைப் பதுவே; கூர்வேல் வளவ !" (புறம் : ௩௫)

காவலன் காட்சிக் கெளியனாதல்வேண்டும், கடமையிற்றவறாதல்வேண்டும் என அறிவுரை கூறும் தம் சொற்கேட்டு, அரசன் 'தவறு நிகழ்தல் என்னிடம் இல்லை' என்றும் யான் 'தவறு செய்தறியேன் ; என் கீழ்ப் பணியாற்றும் வினையாளரில் சிலர் தவறுடையராயின், அதற்கு யானோ பொறுப்பு,' எனக்கூறி விடுவனோ என அஞ்சினார் ;

ஆதலின், வினையாளர் தவறு வினையுடையார் தவறே என்பதையும் எடுத்துக்காட்டி விடத் துணிந்தார்.

பருவ மழையும், அதனாலாம் நிறைந்த விளைவும் ஒருங்கே நிகழ்வது, அறநெறி நின்று ஆளும் அரசன் நாட்டில். "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட பெயலும், விளையுளும் தொக்கு," என அவை உண்டாதற்கும் அவன் கோலே காரணமாம் எனவும், கொடுங்கோல் அரசு நிகழும் நாட்டில், பருவமழை பொய்த்து நீர் கிடைத்தலும் அரிதாம்; அதனால், ஆங்கு விளைவினைக் காண்பதும் இன்றாம், "முறைகோடி மன்னவன் செய்யின், உறை கோடி ஒல்லாது வானம் பெயல்," என அவை இன்மைக்கும் அக்கோலே காரணமாம் எனவும் கூறுவர் உலகத்து உயர்ந்தோராதலின், மழைபெய்யாது பொய்ப்பினும், வளம் குறையினும், இயற்கைக்கு மாறாய நில நடுக்கம் போன்றன நிகழினும், உலகில் வாழ்வார்; இவற்றிற்கெல்லாம் காரணம் நாட்டில் நல்லாட்சி இன்மையே என அரசனையே பழிப்பர் என விளங்கக்கூறி, இவ்வாறு அரசரால் ஆகாத தவறுகளுக்கும் அரசரே காரணமாவர் எனின், அரசர் அலுவலரால் ஆகும் தவறுகளுக்கு அரசரே காரணமாவர் என்பதில் தவறுண்டோ என்று எடுத்துக்காட்டி, அரசர் தாம் தவறுடையரல்லராய் வாழ்வதோடு, தம் கீழ்ப்பணியாற்றும் அலுவலரும் தவறுடையரல்லராய் வாழ்கின்றனரா என்பதையும் நோக்கியிருத்தல்வேண்டும் என்று கூறினார்.

"மாரி பொய்ப்பினும், வாரிகுன்றினும்,
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்." (புறம்: ௩௫)

காட்சிக் கெளிமையும், கடையிற்றவராமையும், அரசன்மாட்டு இருத்தலோடு, அவை அவன்கீழ்ப் பணியாற்றும் அலுவலரிடத்தும் இருத்தல்வேண்டும் என அறிவுரை கூறிய பின்னர், புலவர் தாம் கூறவந்த முறையீட்டினைக் கூறலாயினர்.

நாட்டில் உண்டாய பஞ்சநிலையினையும், அப்பஞ்ச நிலையால், அந்நாட்டு உழவர், தம் நிலத்திற்கு இறுக்க

வேண்டி இறையினையும் இறுத்தற்கியலா நிலையுற்றமையினை யும், அவற்றைப் பொருட்படுத்தாது, அவன் அரசியல் அலுவலர் இறை தண்டும் அறமல்லாச் செயலையும் எடுத்துக் கூறிவிட்டு, அரசர் தம் ஆட்சியை இழவாமல் பெற்றிருப்ப தற்கும், பிறநாட்டு ஆட்சியைக் கைப்பற்றி ஆள்வதற்கும் அடிப்படையாய வெற்றிக்கு வழி வகுப்போர் உழவரே ஆதலின், வெற்றி வேண்டும் கொற்றவர், அவ்வுழவர் நல் வாழ்வில் நாட்டமுடையவராதல் வேண்டும் என்று கூறுவா ராயினர்.

தன் நாட்டுமக்கள் நல்வாழ்விற்காம் பொருளிற்குப் பிறநாடுகளை எதிர்நோக்காத நாடே சிறந்த நாடு; அத் தகைய வளம்செறிந்த நாட்டில் வாழ்வார், அவ்வளம் பெருக வழிசெய்யும் தம் அரசும், அவ்வரசை அளிக்கும் அரசனும் அழியாது வாழ விரும்புவர்; அவர்க்குக் கேடுண்டாம் என அறியின், அவரை இழந்து வாழ்வதி னும், அழிந்து மறைவதே மாண்புடையதாம் என்ற உள்ள முடையராய்க் களம்புகுவர்; அவ்வெண்ணம் உடையார் தம் உள்ள உரனை அழிக்கும் ஆற்றல், உலகில் எத்துணைச் சிறந்த படையாளர்க்கும் இல்லை; ஆதலின், களத்தே அவ் வில்லேருழவர் பெறும் வெற்றி, நாட்டில் நல்லேர் உழவர் தரும் நற்பயனின் விளைவாம் ஆதலானும், தன் நாடு வளம் பல செறிந்த நல்ல நாடாயின், இந்நாட்டுவளம் காணும் பிறநாட்டு மக்கள், இத்துணை வளம் கொழிக்க ஆளும் அரசே, தங்கள் நாட்டினும் இருத்தல்வேண்டும் என விரும்புவர்; அத்தகைய எண்ணம் கொண்ட மக்கள் நிறைந்த ஆட்சியினைப் போர்புரிந்து கைப்பற்ற வேண்டிய தும் இல்லை; அந்நாட்டு மக்கள், தாமே முயன்று, நம் நாட்டில் உள்ள ஆட்சியை அழித்துவிட்டு, இவன் நல் லாட்சியினை விரும்பி ஏற்றுக்கொள்வர் ஆதலின், உல கெலாம் ஆள எண்ணும் அரசர்க்கும் உறுதுணை புரிவோர் அவ்வுழவரே ஆதலானும், நாட்டிற்கு அரணாக நிற்கும் அவ்வுழவர்க்கு நல்லன செய்தல் இயலாது போயினும், அவர்க்குற்ற அல்லனவற்றையாவது, பிறர் வாயிலாக அறி

வதைவிட்டுத் தானே நேரில் அறிந்து அகற்றி, அவர் அகம் மகிழ ஆளுதலை அரசன் அறநெறியாக் கொள்ளுதல் வேண்டும் என்று கூறி முடித்தார் :

"வருபடை தாங்கிப் பெயர்புறத்து ஆர்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும், உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே;
..............................................
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவை யாயின், நின்
அடிபுறம் தருகுவர் அடங்கா தோரே."

(புறம் : ௩௫)

புலவர் கூறியன கேட்ட குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் அவர் நிலத்திற்காம் பழங்கடனையேயன்றி நாட்டு நிலத்திற்காம் பழங்கடன்களையெல்லாம் விடுதலை செய்து, புலவர் விருப்புவன பிறவும் அளித்து அனுப்பினான். என்னே புலவர்தம் பெருந்தொண்டு!

இவ்வாறு வேந்தர்க்கும் அறிவுரை கூறவல்ல வெள்ளைக்குடி நாகனார், புலவரும் போற்றும் புலமை நலம்பெற்றவராவர். தலைவன் தன்பால் கொண்ட அன்பின் மிகுதியால் நிறையிருட் காலத்தே, தன் வீடு நோக்கி வரும் வழியின் கொடுமைகண்டு அஞ்சிய தலைமகள், "தோழி! அவர் வரும் வழியின் இருள் நிறைந்து, கொடுமை மிகுந்திருப்பதை யான்சென்று கண்டிலேன் ஆயினும், அவர் வரும்வழி, என் முன்வந்து நிற்பதுபோலவும், கல் நிறைந்து கொடுமை மிக்க அவ்வழியில் நடந்து என் கால்கள் நோவதைப் போன்றும், அவர் வரும் வழியில் நிலவும் இருள் என் கண்முன் தோன்றுவது போன்றும், அவ்விருளின் கொடுமையினைக் கண்டு என் கண்கள் வருந்துவதைப் போன்றும் உளது; யான் என் செய்வேன்," என்று கூறித் தன் உள்ளத் துயரை உணர்த்தினாள் எனப் பாடிய அவர் பாட்டின் நயத்தினை நுகருங்கள் :

"அம்ம வாழி! தோழி! நம்வயின்
யானோ காணேன்; அதுதான் கரந்தே
கல்லதர் மன்னும் கான்கொல் லும்மே;
கனையிருள் மன்னும் கண்கொல் லும்மே."

(நற்: 196)

தலைவன் பொருள்வயிற் பிரிந்து நெடுஞ்சேணாட்டிற்குச் சென்றானாக, அவன் பிரிவால் வருந்திய தலைமகள், ஒருநாள் இரவில் முழுநிலா ஒளிவிட வானவீதியில் உலா வரும் திங்களைக் கண்டு, அத்திங்கள் உலகெலாம் உலவி வரும் இயல்பினதாதலின், அது தன் தலைவர் உறையும் நாட்டையும், ஆங்கு அவர் நிலையினையும் அறிந்திருத்தல் கூடும் என்ற எண்ணமுடையளாய் அத்திங்களை நோக்கி, "பல பகுதிகளை ஒன்றுகூட்டி வைத்தாற்போன்ற பல கதிர்களையும் அக்கதிர்களுக்கிடை இடையே பாலை முகந்து வைத்தாற்போன்ற குளிர்ச்சியினையும் உடைய, கலைகளால் நிறைந்த திங்களே! நீ தான் குணங்களால் நிறைந்தும் நெறியால் நேர்மையுற்றும் விளங்குகின்றனை ஆதலாலும், நினக்குத் தெரியாவண்ணம் மறைந்துறையும் உலகம் எதுவும் இல்லையாதலாலும், என்னால் காணப் பெறாமல், எங்கோ சென்று மறைந்து வாழும் எம் தலைவர் உள்ள இடம் இது என அறியக் கூறுவாயாக," என்று வேண்டி நின்றாள்; ஆனால், அவள் அவ்வாறு இரந்து வேண்டவும் திங்கள் மறுமொழி தாராது தன் தொழில் மேற்சென்றது; அதனால் வெறுப்புற்ற அவள், சால்பும் செம்மையும் உடையை எனப் பாராட்டிய தன் வாயினாலேயே, "ஏ! திங்களே! தாம் அறிந்தன கூறாது அடங்கியிருத்தலும், அறிந்தன கூறாது பொய் கூறுவதுபோலும் பழிதரு செயலே யாகும்; அப்பழிமிகுசெயலை மேற்கொண்டமையால், நீயும், காதலரைப் பிரிந்து கவினிழந்த என்தோள்போல் வாட்டமுற்று, நின்கலைகளும், நாள் தோறும் சிறுகச்சிறுகக் குறைவுறக் காணப்படாய் ஆதலின், நின்னால் என் தலைவர் சென்ற இடத்தினை அறிந்து கூறல் இயலாது," என்று கூறிப் பழித்தாள் எனப் பாடிச் சுவையூட்டுகின்றார் புலவர்:

"பங்கு செறிந்தன்ன பல்கதிர் இடைஇடைப்
பால்முகந் தன்ன பசுவெண் ணிலவின்
மால்பிடர் அறியா, நிறைவுறு மதியம்!
சால்பும், செம்மையும் உடையை; ஆதலின்,
நிற்காந்து உறையும் உலகம் இன்மையின்,
எற்கரந்து உறைவோர் உள்வழி காட்டாய்;
நற்கவின் இழந்த என்தோள்போல் சாஅய்ச்
சிறுகுபு சிறுகுபு செரீஇ
அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே." (நற்: ௧௯௬)

## ௩௪௯. வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனார்

வேம்பற்றூர் என்ற பெயருடைய ஊர்கள் சோழ நாட்டிலுமுள்ளன ஆயினும், பாண்டிநாட்டு வேம்பற்றூர், கடைச்சங்க காலந் தொடங்கி இன்றுவரையும் நல்ல புலவர்கள் பிறந்து சிறக்கும் ஊராக விளங்குதலின், கண்ணன் கூத்தனார் பிறந்த பேறுடைய ஊரும் அதுவே யாம் எனக் கொள்வர் ஆராய்ச்சியாளர் இவ் வேம்பற்றூர், மதுரைக்கு வடகிழக்கில், இரண்டு காதத்தில் வையை நதிக்கு வடக்கேயுளது. குலசேகர சதுர்வேதி மங்கலம் என்றும் இதற்குப் பெயருண்டு எனக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். இது, இப்போது வேம்பத்தூர் என வழங்கு கிறது. வேம்பற்றூரில் பிறந்த இவர், கூத்தாடும் தொழில் உடையவராவர்; இவர் இயற்பெயர் கண்ணன் என்பது.

தலைவன் வரைந்துகொள்ளாமையால் வருந்தும் தலை மகளின் நோய்க்காம் காரணத்தை அறிந்துகொள்ள மாட்டாத தாய், அந்நோய் முருகனால் வந்தது எனக் கொண்டு, வேலனை அழைத்து வெறியாட்டெடுக்கத் தொடங்கிய வழி, தோழி, அந் நோய்க்காம் காரணம் இது என உண்மை உரைப்பாளாய்த், தாயின் அறியாமையினை யும், அவள் வேண்ட வந்த வேலனையும், அவர்கள் மேற் கொள்ளும் விழாவினையும் எள்ளி நகைக்கும் பகுதிகளைப் புலவர் நன்கு விளக்கியுள்ளார். தம் நோய்தீரப் பிற உயிர் களைக் கொல்லும் செயல் அறிவுடைமை யன்று என்பதை யும் குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல!
சினவல் ஓம்புமதி; வினவுவது உடையேன்;
பல்வேறு உருவின், சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின், அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
ஒண்டார் அகலமும் உண்ணுமோ பலியே."

(குறு: ௩௬௨)

தலைமகள் நோய்க்குக் காரணமாய தலைமகன், எவ்வாற்றானும் குறையுடையா னல்லன்; அவன் மலைவளம்பெற்ற மாண்புடையவன்; மணத்தாலும், நிறத்தாலும் சிறந்த மலர்மாலை யணிந்த அழகும் உடையவன்; எனத் தலைமகளை மணத்தற்காம் மாண்புடையான் என்பதையும் தாய் உணருமாறு கூறிய தோழியின் அறிவாற்றலைப் புலப்படுத்தும் இச் செய்யுளைச் சிறு சிறு சொற்றொடர்களால், இழும் எனும் ஒலி தோன்றப் பாடிய புலவர் புலமையினைப் பாட்டைப் படித்தார் எவரும் போற்றுகிரார்.

## ருo. வேம்பற்றூர்க் குமரனூர்

சோழநாட்டில், தஞ்சை மாவட்டத்தில், திருமங்கலக் குடிக்கருகே ஒரு வேம்பற்றூர் உளது எனினும், குமரனூர் பிறந்த வேம்பற்றூர், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனூர் போன்ற சங்கப் புலவர்களின் பிறப்பிடமாய் விளங்கும் பாண்டிநாட்டு வேம்பற்றூரே என்று அறிஞர்கள் கருதுவர். வேம்பற்றூரில் பிறந்த புலவர்கள் அனைவரும் அந்தண ராகவே உள்ளனர் ஆதலின், இவரும் அந்தணரே; அவர் பெயரும் அந்தணர் என்பதை உறுதி செய்கிறது என்று கூறுவாரும் உளர். இக் கூற்று எத்துணை உண்மையுடை யது என்பதை எம்மால் துணிந்து கூறல் இயலாது; அறிஞர்களே முடிவு செய்துகொள்வார்களாக.

வேம்பற்றூர்க் குமரனூர், போர்வீரர் பண்பையும், அவர் ஆற்றும் போரால் பாழான நாட்டின் கேட்டையும் நன்கு உணர்ந்தவராவர்; பழந் தமிழ்வீரர், போர் வந்தது என்றதும், "அந்தோ! ஆனதோ வெஞ்சமர்!" என அலறித் துடிக்கும் உள்ளத்தவரல்லர்; போர் எனப் பூரிக்கும் தோளராவர்; போர் வந்தது எனின், தம் ஆண்மையின் ஆற்றலை அறியச் செய்வதற்காம் அரிய வாய்ப்பொன்று வந்தது என ஆரவாரிப்பர். அவ் ஆரவா ரம் அடங்கியபின்னர், "எம்மையும் பகைக்கும் படை யாளர் உளரோ?" எனச் சினப்பர்: அச் சினத்தால், அவர் கண்கள் சிவப்பேறும்; அத்தகைய ஆண்மையாள ராவர் அக்காலப் படைவீரர் என அவர்கள் பண்பினைச் "செரு வேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்," என்ற அழகிய தொடரால், சுருங்கக்கூறி விளங்க வைத்துள்ளார்.

நாடு செழிக்க நல்லரசு நடைபெறும் நாட்களில், நாட்டார் காவியத்திலும், ஓவியத்திலும் கருத்துடைய ராய்க் கலையுணர்ச்சி மிக்குவாழ்வர்; அக்காலை, அவர்கள் தங்கள் ஓவியப் புலமையினை உலகறியக் காட்டுவதற்காக, அழகிய ஓவியங்களை, ஊர் மன்றம்போலும் பலர் கூடும் இடந்தோறும் அமைத்து, அகம் குளிரக்கண்டு மகிழ்ந்து வாழ்வர்; இத்தகைய இன்ப வாழ்விற்குப் போர் உண்டா யின், இடையூறு உண்டாம்; பகைவர் படையால் பாழ்

பட்ட தம் ஊரில் வாழ வகையின்றி, மக்கள் வேறிடம் தேடிச்சென்று விடுவர்; அதனால், அவர் போற்றிவளர்த்த மன்றப் பாவைகள் பாழுறும்; மழை, பாவையின் வடிவினைச் சிதைக்கும்; வெயில், அதன் நிறத்தினை அழிக்கும்; இவ்வாறு, மக்கள் வாழ்விழக்க, மன்றப் பாவைகள் பாழான காட்சியினைக் கண்டு கலங்கிய புலவர் வேம்பற்றூர்க் குமரனார், அவ்வாறு பாழான பாவையைத் தலைவனைப் பிரிந்தமையால், வண்ணமும், வடிவமும் சிதைந்து வேறுபட்டுத் தோன்றும் தலைமகள் ஒருத்திக்கு உவமை காட்டித் தம் உள்ளத்துறு துயரை உணர்த்தியுள்ளார்:

"முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து, வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனை யொழிந் திருத்தல்." (அகம்: கஙஎ)

வேம்பற்றூர்க் குமரனார் பாடிய வல்லாண் முல்லை தழுவிய பாட்டொன்று புறநானூற்றில் உளது; அவ்வொரு பாட்டும், பொருள் தோன்றாவாறு சிதைந்து காணப்படுவதால், செய்யுள் நலத்தினைச் சிறக்க உணர முடியவில்லை. அதில் காணப்படும் ஒரு தொடர், அக் கால மக்கள், புலித்தோலையும், பாயையும் தம் படுக்கைக்குரியனவாகக் கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகிறது.

தம்பால் வந்து பொருள்வேண்டி நிற்பார் அனைவர்க்கும், அவர் விரும்புவன அளித்துப் போற்றும் பேரறிவினரும், கள்ளுண்பராயின், அறிவிழந்து, தாம் படுத்தற்காம் இடம் இது; தாம் படுத்தற்காகா இடம் இது எனப் பகுத்துணரும் உணர்விழந்து, மனைமுன்றிற்கண்ணும் வீழ்ந்து உறங்கிவிடுவர் எனக்கூறிக் கள்ளுண்டு களிப்பாரைப் பழித்துரைக்கின்றார் புலவர் குமரனார்.

வந்து,
முன்றிற்கிடந்த பெருங்களி யாளற்கு
அதள் உண்டாயினும், பாய் உண்டாயினும்
யாதுண் டாயினும் கொடுமின்........... (புறம் ஙகஎ)

